# பரோடா வெடிகுண்டு சதி வழக்கு





க.ரெட்டி

- சி.ஜி.கே. ரெட்டி -






# பரோடா வெடிகுண்டு சதி வழக்கு

(எதிர்த்துப் போராடும் உரிமை)

தமிழாக்கம் : கே. ஆர்.

லீலா
பப்ளிகேஷன்ஸ்

லீலா வெளியீடு: 5

# பரோடா வெடிகுண்டு சதிவழக்கு

முதற் பதிப்பு : மே, 1978

உரிமை : சி. ஜி. கே. ரெட்டி

தமிழாக்கம் : கே. ஆர்.

மேலட்டை ஓவியம் : ராஜு

அச்சிட்டோர் :

மாருதி பிரஸ், சென்னை-600014




## நன்றி

இப் புத்தகத்தை தமிழில் வெளியிட அனுமதி தந்த திரு. சி. ஜி. கே. ரெட்டி அவர்களுக்கும்,

முன்னுரை வழங்கிய துக்ளக் ஆசிரியர் திரு. சோ அவர்களுக்கும்,

தமிழாக்கம் செய்த திரு. கே. ஆர். அவர்களுக்கும்,

தமிழில் டைப் செய்து திருத்தங்கள் பார்த்த திரு. பி. மதலை அவர்களுக்கும்.

எல். அரிகிருஷ்ணன்

பதிப்பாளர்

லீலா பப்ளிகேஷன்ஸ்,

15, வி. கே. பிள்ளை தெரு, சென்னை—600007

விலை ரூ. 6-00

# முன்னுரை

இப் புத்தகத்திற்கு நான் முன்னுரை எழுதுவது என்னுடைய குற்றமல்ல. இப்புத்தகத்தின் பதிப்பகத்தாரான 'லீலா பப்ளிகேஷன்' ஸின் குற்றம்தான் இது. நான் இந்த முன்னுரையை எழுத அவர்கள் தான் காரணம்.

அதற்கு அவர்களுக்கு விதிக்கும் தண்டனையாக நான் ஒரு காரியம் செய்திருக்கிறேன். துக்ளக் பத்திரிகையில் பரோடா டைனமைட் வழக்கு வாபஸ் பெறப்பட்டதைப் பற்றி நான் எழுதிய கட்டுரையை அவர்களிடம் கொடுத்து, இந்தப் புத்தகத்திலேயே அதையும் சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டேன்.

'அயல் நாட்டாரிடம் அடிமைப்பட்டால் மட்டுமே, அது அடிமைத்தனம், உள்ளூர்க்காரரர் யாரிடமாவது அடிமைப் பட்டால் அது சுதந்திரம் என்று சிலர் நினைக்கிறார்கள். என்றால் ஒப்புக்கொள்ள முடியாத கருத்து இது. இந்த மாதிரி ஒரு போலித்தனமான எண்ணம் சிலருக்கு இருப்பதேகூட எனக்கு வேதனையாக இருக்கிறது.

உள்ளூர்க்காரரிடம் அடிமைத்தனமே இருக்க முடியாது என்றால், 'கொத்தடிமைகள்' என்று எமர்ஜென்ஸி காலத்தில் பிரசாரம் செய்யப்பட்டதே, அது என்ன நியாயம்? ஒரு நிலச்சுவான்தார், சிலரை அடக்கி வைத்தால் அவர்கள் அடிமைகள். ஆனால் இந்திராகாந்தி அறுபது கோடி மக்களை அடிமைப்படுத்தியபோது அவர்கள் சுதந்திர மனிதர்களா?

சர்வாதிகாரத்தை—அது வெளிநாட்டுச் சரக்காக இருக்கட்டும், உள்நாட்டுச் சரக்காக இருக்கட்டும்—சர்வாதிகாரத்தை எதிர்த்துப் போராட முடியாவிட்டாலும்கூட, எதிர்க்க வேண்டும் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்ள வேண்டியது—மானமுள்ள, தேசப்பற்றுள்ள, சுயமரியாதையுள்ள ஒவ்வொரு மனிதனும் செய்ய வேண்டிய காரியம் என்று நான் நினைக்கிறேன்.

அப்படி தேசப்பற்றும், சுயமரியாதையும், தன்மானமும் உள்ள மனிதர்கள் பலரை எமர்ஜென்ஸி காலம் இந்த

நாட்டிற்கு எடுத்துக் காட்டியது. அப்படிப்பட்ட முக்கியமானவர்களில் திரு. சி. ஜி. கே. ரெட்டியும் ஒருவர்.

நல்ல வருவாய் உள்ள, வசதியான, கௌரவமும், அதிகாரமும் கொடிகட்டிப்பறந்த ஒரு தொழில் அவருக்கு இருந்தது. ஆனால், இந்திராகாந்தியின் சர்வாதிகாரத்தை எதிர்த்துப் போராட அவர் துணிந்தார். தன்னுடைய வாழ்க்கையில் வசதி, அந்தஸ்து, செல்வம் எல்லாமே பறிபோகும் என்று தெரிந்திருந்தும், இந்தக் காரியத்தில் அவர் இறங்கினர். என்னால் இப்படிப்பட்ட மனிதர்களைப் பார்த்து வியக்காமல் இருக்க முடியவில்லை.

இப்பொழுதும்கூட அவருடன் பேசும்போதெல்லாம் நாட்டின் நலன், மக்களின் அடிப்படை உரிமைகளை நிரந்தரமாகப் பாதுகாப்பது போன்ற பிரச்னைகளைப் பற்றியே அவர் பேசுகிறார். இப்படிப்பட்ட மனிதர்களை நாடு மதிக்கக் கற்றுக் கொண்டால்தான் அவர்களுடைய எண்ணிக்கை உயரும். அது நாட்டின் எதிர்காலத்திற்கு நம் போன்றவர்கள் சுலபமாகச் செய்யக்கூடிய ஒரு பணி.

எமர்ஜென்ஸியைப்பற்றி எத்தனையோ புத்தகங்கள் வெளி வந்துவிட்டன. இந்திராகாந்தி செய்த சூதுவாதுகள், சஞ்சய்காந்தியின் அக்கிரமங்கள், இப்படி பல விஷயங்கள் அந்தப் புத்தகங்களில் விவரிக்கப்பட்டுள்ளன. இந்தப் புத்தகம் முற்றிலும் மாறுபட்டது.

சர்வாதிகாரத்தை எதிர்க்கத் தீர்மானித்து, நாட்டின் இரண்டாவது விடுதலைப் போரில் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்களில், ஒருவரே முன்வந்து தன்னுடைய அனுபவத்தை எழுதியிருக்கிறார். துணிச்சல், திட்டங்கள், தோல்விகள், அவற்றைக் கண்டு துவளாத நெஞ்சுரம், வீரம் இப்படிப் பல உணர்ச்சிகள் இந்த புத்தகத்தின் பக்கங்களில் வழிந்தோடுகின்றன. நாட்டு நடப்புகளில் அதிகம் அக்கறையில்லாதவர்கள் கூட ஒரு 'சஸ்பென்ஸ்' கதையாக நினைத்து இதைப் படிக்கலாம். கதாசிரியர்கள் மனதில் தோன்றக்கூடிய கற்பனை சஸ்பென்ஸுகளை விட, நிஜ வாழ்க்கையில் விடுதலைப் போராட்ட வீரர்கள் அனுபவித்த சஸ்பென்ஸ்கள் மெய் சிலிர்க்க வைக்கின்றன.

ஒளிவு மறைவு இல்லாமல் பரோடா டைனமைட் வழக்கைப் பற்றி எழுதியிருக்கும் திரு. சி. ஜி. கே. ரெட்டியை நான்

பாராட்டுகிறேன். இப்புத்தகத்தை தமிழில் வெளியிட வேண்டும் என்பதில் லீலா பப்ளிகேஷன்ஸ் காட்டிய ஆர்வம் மெச்சத் தகுந்தது. ஆங்கிலப் புத்தகத்திலுள்ள உண்மைகள், சுவை எதுவும் குன்றுமல் திரு. கே. ஆர். இதை தமிழில் மொழி பெயர்த்திருக்கிருர். இந்தப் புத்தகத்தை எத்தனை பேர் படிக்கப் போகிருர்கள் என்பது எனக்குத் தெரியாது. ஆனல் படிப்பவர் ஒவ்வொருவருக்கும் உள்ள தேசபக்தி, மனே தைரியம், அநியாயத்தை எதிர்த்துப் போராடும் நெஞ்சுரம் மேலும் வளரும் என்று நான் நம்புகிறேன்.

'ஆஹா, சோ வன்முறையை ஆதரிக்கிருன்! ஓஹோ' என்று பலர் குதிக்கலாம். அப்படி குதிக்க நினைப்பவர்கள் 'துக்ளக்'கில் நான் எழுதி இப்புத்தகத்திலும் இடம் பெற்றிருக்கும் கட்டுரையைப் படித்துவிட்டு அதற்கு பிறகும் குதிக்க முடிந்தால் குதிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை-600 002 சோ

# ஃபெர்னாண்டஸ் வழக்கு வாபஸ் நியாயமா?

—சோ

இந்தக் கட்டுரையில் நான் சொல்லி இருக்கும் கருத்துக்களை பலரால் ஏற்க முடியாமல் இருக்கலாம். நெருக்கடி நிலை அமலில் இருக்கும்போது நாட்டில் என்னவெல்லாம் நடந்தன என்ற விவரங்கள் முழுமையாக வெளியே வரும்போது இன்று இக் கருத்தை ஏற்காத பலர் அந்த நிலையில் ஏற்கத் தயாராகலாம்.

இந்தக் கட்டுரையில் நான் நியாயப்படுத்த முற்பட்டிருக்கும் வழிமுறைகள், ஒரு ஜனநாயக அரசை வீழ்த்துவதற்கு துளியேனும் நியாயமான வழிகளாக ஆகிவிடாது. ஜனநாயக முறையில் செயல்படும் அரசை, நாட்டில் ஜனநாயகம் அமலில் இருக்கும்போது பதவியை விட்டு இறக்க வேண்டும் என்று விரும்புபவர்கள் தேர்தல் வழியாகத்தான் செயல்படவேண்டும். சில நேரங்களில் அந்தந்த சந்தர்ப்ப சூழ்நிலைக்கேற்ப, பிறரைத் தொல்லைப் படுத்தாத, அமைதியான சத்தியாக்கிரகங்கள் நியாயமாக இருக்கலாம்.

ஆனால் ஒரு சர்வாதிகார அரசை பதவியை விட்டு இறக்க முயற்சிக்கும்போது இவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்ட வழிகளும், நியாயமாகி விடும் வாய்ப்புக்கள் உண்டு. இவற்றை மனதில் வைத்துக் கொண்டு இக் கட்டுரையைப் படிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சட்டபூர்வமாக நடத்தப்பட்டு வந்த ஒரு அரசை கவிழ்க்க முயற்சி செய்தார்கள் என்பதே ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் மற்றும் சிலர் மீதும் சொல்லப்பட்ட குற்றச்சாட்டு.

'குற்றச்சாட்டில் பல பொய்கள் திணிக்கப்பட்டன' என்ற தகவல்கள் இப்போது இருந்தாலும் வெடிமருந்து விவகாரத்தில் ஃபெர்னாண்டஸுக்குச் சம்பந்தமில்லை என்று தகவல்கள் இருந்தாலும், ஒரு வாதத்திற்காக அவற்றை மறந்து விட்டு,

'குற்றச்சாட்டு உண்மையானது' என்று எடுத்துக் கொள் வோம்.

அரசைக் கவிழ்க்க முயன்றார், என்றவரையில் குற்றச் சாட்டு உண்மையாக இருக்க முடியும். 'சட்ட பூர்வமான அரசை'க் கவிழ்க்க முயன்றார் என்பது எப்படி உண்மையாக இருக்க முடியும்? ஃபெர்னாண்டஸ் கவிழ்க்க முயன்றதாக கூறப் படும் அரசு சட்டபூர்வமாக நடந்து வந்த அரசா? சட்டத் தையே மாற்றி அதன் மூலமாக மட்டுமே பிரதம மந்திரி பதவியில் நீடித்த ஒருவரால் நடத்தப்பட்ட அரசா, சட்ட பூர்வமான அரசு? நெருக்கடிநிலை பிரகடனமே சட்டபூர்வமான தல்ல என்ற தகவல் இப்போது நாடாளுமன்றத்திலேயே தெளிவாக்கப்பட்டிருக்கிறது. 'நெருக்கடி நிலை பிரகடனம் ஆகி யிருக்கிறது' என்ற விவரம் மந்திரி சபையினருக்கே, நாடு நெருக்கடி நிலையை அனுபவிக்க ஆரம்பித்து சில மணி நேரங் கள் கழித்துத்தான் தெரியும்! உலகத்தின் பல நாடுகளாலும் ஏற்கப்பட்ட ஜனநாயக மரபுகள், நீதிமன்ற கோட்பாடுகள், மனிதனின் அடிப்படை உரிமைகள், எல்லாவற்றையும் குழி தோண்டிப் புதைத்த ஒரு அரசு, எப்படி சட்டபூர்வமான அர சாகும்? பிரதமரால், பிரதமருக்காக, பிரதமரே நடத்திய அரசு, சட்ட பூர்வமான அரசு என்ற வாதத்தை என்னால் ஏற்க முடியவில்லை.

'ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டு பொய்யானது' என்றால் அதை இந்த அரசு வாபஸ் வாங்கியதில் தவறே கிடையாது. பொய் என்று தெரிந்த பின்னும் அரசு ஒரு வழக்கைத் தொடருவதுதான் தவறு. அவர் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுக்கள் உண்மையாக இருந்தாலும் கூட வழக்கு வாபஸ் வாங்கப்பட்டது தவறில்லை என்ற அளவிற்கு நான் போகிறேன். தேர்தலில், ஜனதா கட்சி மக்களிடையே நாங்கள் "இந்நாட்டை சர்வாதிகாரத்திலிருந்து விடுவிக்கிறோம்" என்ற வாக்குறுதியைத்தான் முதன்மையாக வைத்தார்கள். அதை மக்கள் ஏற்றுத்தான ஜனதா கட்சிக்கு அரசுரிமை அளித்திருக்கிறார்கள். அப்படியிருக்கும்போது, ஃபெர்னாண்டஸின் மீதான வழக்கை வாபஸ் வாங்கியதில் என்ன தவறு?

பிரிட்டிஷ் அரசினால் 'தேசவிரோதிகள், தீய சக்திகள், குற்றவாளிகள்' என்றெல்லாம் வர்ணிக்கப்பட்டவர்கள்தான் நம்நாடு சுதந்திரமடைந்த பிறகு 'நமது அரசாங்கத்தை

நடத்துபவர்கள்' ஆனார்கள். 'சுதந்திரப் போராட்ட வீரர்கள் நமது அரசை நடத்துகிறார்கள்' என்று பெருமைப்பட்டோமே தவிர, ஐயோ குற்றவாளிகள் நம்மை ஆளுகிறார்களே' என்று தலை குனிந்தோமா?

'அந்நிய ஆட்சி வேறு. நமது நாட்டவர்களே நடத்தும் ஆட்சி வேறு. அதற்கு எதிரான போராட்ட நியாயங்கள் இதற்கு எதிராகவும் நியாயமாகிவிடாது' என்று சிலர் கூறலாம். அப்படிப்பட்டவர்களைப் பார்த்து ஒரு கேள்வி கேட்கிறேன். "உங்கள்வீட்டில் ஒரு அந்நியன் புகுந்து ஒரு சில பொருள்களை அபகரித்தால் அது திருட்டு. உள்ளூர் திருடன் புகுந்து திருடினால் அது சட்டபூர்வமான காரியம்" என்று ஒப்புக் கொள்வீர்களா? வீட்டின் மீது இருக்கும் பற்று நாட்டின்மீது இருக்கவேண்டாமா?

16-ம் லூயி அரசனின் கொடுங்கோன்மையை எதிர்த்து, நடந்த பிரெஞ்சு புரட்சியை ஏன் பாராட்டுகிறோம்? லூயி மன்னன் பிரான்ஸ் நாட்டில் அந்நியனா? அந்த ஆட்சியும் சட்டபடி சட்டபூர்வமான ஆட்சிதானே? ரஷ்யாவில் ஜார் மன்னன் ஆட்சியின் வீழ்ச்சி பற்றி ஏன் துதி பாடுகிறோம்? 'ஆஹா என்று எழுந்தது பார் யுகப் புரட்சி' என்று ரஷ்யப் புரட்சியைப் போற்றிப் பாடிய பாரதியின் வார்த்தைகளை இன்றும் மேடை தோறும் முழங்குகிறோமே? அது மட்டும் என்ன நியாயம்? ஜார் மன்னன் என்ன ரஷ்யாவிற்கு அந்நியனா? அவனை எதிர்த்து ரத்தக்களறி புரட்சி நடத்தி வெற்றி கண்டவர்கள் தங்களைத் தாங்களே தண்டித்துக்கொள்ளாமல், ஆட்சியிலமர்ந்ததைப் பாராட்டுகிறோமே, ஏன்?

அவ்வளவு தூரம் போவானேன்? பாகிஸ்தானில் யாகியா கானின் சர்வாதிகாரத்தை எதிர்த்து முஜிபூர் ரஹ்மான் உயர்த்திய போர்க்கொடியை நமது நாடும் தாங்கிப் பிடிக்கவில்லையா? நமது ராணுவம் அங்கே போகவில்லையா?

இப்படி அயல்நாடுகளில் எதேச்சதிகாரத்தை எதிர்த்து செய்யப்படும் போராட்டங்களை நாம் பாராட்டுகிறோம். அந்தப் போராட்டங்களின் தலைவர்களை வீரர்கள் என்று வாழ்த்துகிறோம். ஆனால் தம் நாட்டில் தோன்றிவிட்ட ஒரு எதேச்சதிகாரத்தை எதிர்த்தவர்களைக்குற்றவாளிகள் என்று கூறுகிறோம். எதேச்சதிகாரத்திலிருந்து விடுபட அயல்நாடுகளில் நடக்கும் போராட்டங்களுக்கு ஒரு தராசு. நம் நாட்டில் எதேச்சதிகாரத்தை எதிர்த்து நடந்த போராட்டத்திற்கு வேறு ஒரு

திராசு. ஏன் இந்த பாரபட்சம்? அயல்நாட்டில் தேச பக்தர்களுக்கு கொடுக்கும் மரியாதையை நம் நாட்டு தேச பக்தர்களுக்கு கொடுக்க நாம் மறுப்பது ஏன்? யாரை ஏமாற்றுகிறோம்? நம்மையா? நமது மனச்சாட்சியையா? யாரை?

ஃபெர்னாண்டஸ் எதேச்சதிகார அரசின் சட்டப்படி குற்றவாளிதான் என்றே வைத்துக் கொண்டாலும்கூட இன்று அந்த வாதம் செல்லாது என்பதற்கே இவற்றையெல்லாம் எடுத்துக் காட்டுகிறேன். நெருக்கடி நிலையின்போது நான் கண்ட சிறிய அனுபவங்களில் ஒன்றை இந்த இடத்தில் கூறுவது அவசியம் என்று நினைக்கிறேன்.

நாட்டில் தமிழகத்திலும் குஜராத்திலும் மட்டும் எதிர்க் கட்சிகளின் அரசு அப்போது இருந்தது. "இந்த இரண்டு மாநில அரசுகளும் எதேச்சதிகாரத்தை எதிர்த்து பிரகடனம் செய்து ரேடியோ ஸ்டேஷன்களை வைத்துக்கொண்டு சுதந்திர ஜனநாயக கருத்துக்களை தேசம் பூராவும் பரப்பினால் என்ன!' என்று எனக்குத் தோன்றியது. ராணுவம் இரண்டே நாட்களில் இந்த எதிர்ப்பை அடக்கியிருக்கலாம். ஆனால் எதேச்சதிகாரத்திற்கு எடுத்த எடுப்பிலேயே இப்படி ஒரு எதிர்ப்பு தோன்றிவிட்டால் அது நாடு முழுவதும் பரவி, எதேச்சதிகாரத்திற்கு ஒருஉடனடி முடிவு ஏற்படும் என்று நான் கருதினேன். அப்போது இந்தக் கருத்தை எந்த இடத்தில் சொல்வதில் அர்த்தம் இருந்ததோ அந்த இடத்தில் சொன்னேன். 'ஏன் இந்த விபரீத புத்தி?' என்பதுதான் பதிலாக கிடைத்தது. நானும் பெரிய வீரன் அல்லாததால், மிகச்சுலபமாக 'ஆமாம், இது விபரீத யோசனை தான்' என்று ஏற்றுக்கொண்டு விட்டேன்.

ஒரு ரகசிய ரேடியோ ஸ்டேஷன் வைக்குமாறு, வேறு ஒருவரிடம் நான் சொன்ன யோசனையும் இதே முடிவை அடைந்தது. என் மனத்தில் எழுந்துவிட்ட இந்த மாதிரி எண்ணங்களுக்குக் காரணம் நெருக்கடி நிலை பிரகடனம். அரசியல் கைதுகள், அடிப்படை உரிமைகள் பறிமுதல், இப்படி நடந்துவிட்ட பல அக்கிரமங்களே. இவை கண்டு யார் யார் மனம் பொங்கியெழுந்ததோ அவர்களால்தான் இம்மாதிரி எண்ணங்களை ஓரளவாவது புரிந்துகொள்ள முடியும். அதன் பிறகு 'அண்டர் கிரவுண்ட்' பத்திரிகைகள் ஒரு சிலவற்றுக்கு ஒருசில கட்டுரைகள் எழுதி என் மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டேன். ஏமாற்றிக் கொண்டேன் என்றும் சொல்லலாம். அண்டர் கிரவுண்டிலிருந்து எதேச்சதிகார

அரசின் கொடுமைகளைப்பற்றி செய்திகளை நாட்டில் பரப்பிக் கொண்டிருந்த மனோதைரியம்மிக்க நபர்களில் ஒருவரோடு தொடர்பு கொள்ளும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அவ்வப் போது அவரைச்சந்தித்ததால் "எல்லோரும் இந் நாட்டில் நம் போன்று கோழைகள் அல்ல; தைரியசாலிகளும், தேசப்பற்று மிக்கவர்களும் இருக்கிறார்கள்'' என்ற நம்பிக்கை பிறந்தது.

நெருக்கடிநிலை சமயத்தில், என்னைப்பற்றி அரசுக்கு குறிப்பு தயாரிக்க என்னிடம் வந்து விசாரணை நடத்திய போலீஸ் அதிகாரிகளிடம் நான் இதையெல்லாம் மறைக்க வில்லை. நான் சந்தித்த ஒரு மத்திய அரசு உயர் அதிகாரியிட மும் இவற்றை நான் ஒளித்து வைக்கவில்லை. ஆனால் அவர் களிடம் இதையெல்லாம் நான் கூறிய நேரம் நான் உணர்ச்சி களிலிருந்து தெளிவுபெற்று சிந்தனையிலிறங்கிய நேரம்.

எதற்காக என்னைப்பற்றி உதாரணத்தைக் கூறுகிறேன் என்றால், நம் நாட்டில் அனேகர் என்னைப் போன்ற கோழை களே. உயரங்களை நம்மால் எட்டிப் பிடிக்க முடியாது. ஆனால் அப்படி எட்டிப் பிடித்துவிட்ட ஒரு சிலரைப் பாராட்டும் பண்பையுமா நாம் இழக்க வேண்டும்? அவர்களைத் தூற்றுவ தால் நம்மை நாம் உயர்த்திக்கொள்ளப் போவதில்லை.

அராஜகத்திற்கும் வன்முறைக்கும் நான் வக்காலத்து வாங்கவில்லை. ஆனால்,ஒருதேசிய சுதந்திர முயற்சியை 'வெறும் அராஜகம்' என்று கூறுவது நியாயமல்ல என்பதே என் வாதம். 'எது அராஜகம்? எது தேசியப் போராட்டம்' என்பது ஒவ்வொரு சமயத்தில், அவரவருடைய அபிப்பிராயத்தைப் பொறுத்த விஷயம்.

ஹிட்லரை அவன் நாட்டில் எதிர்த்து பல வழிகளில் போராடியவர்கள், அவனது காலத்தில் அவனது சட்டங் களால் தேசத் துரோகிகளாகக் கருதப்பட்டாலும் அவனது அரசு விழுந்த பின் தேசபக்தர்களாக கௌரவிக்கப்பட்டார் கள். ஃபெர்னாண்டஸ் போன்றவர்களும், தேச பக்தர்களே! அவர் செய்ததாகச் சொல்லப்படும் முயற்சி சுயநலமுயற்சி அல்ல. எதேச்சதிகாரத்திலிருந்து தேசத்தை விடுவிக்க செய்யப் பட்ட முயற்சி அது. என் மனதில் இந்த விஷயத்தைப் பொறுத்த மட்டில் அவரைப் பாராட்டவே தோன்றுகிறது.

# முகவுரை

நான் பிறக்கும்போதே புரட்சிக்காரனாகப் பிறந்தேனா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்தே பழக்க வழக்கங்கள், மதம், அதிகாரப் போக்கு இவற்றிற்கு எதிராகமுரண்டு செய்திருக்கிறேன். 'பழையபழக்க வழக்கங்களில் எனக்கு நம்பிக்கை இருந்ததில்லை. யாரையும் ஹீரோவாகவும் கொண்டது கிடையாது. ஆனால் சிறுவனாக இருக்கும்போது இம்மாதிரி இருக்க முடிந்ததில்லை. வீட்டில் மற்றவர்களைப் போல நடக்கவிருக்காமலிருக்க முடியாது. வீட்டிலேயே நான்தான் கடைக்குட்டி. என் அபிப்பிராயங் களை என் சகோதர சகோதரிகளோடு பகிர்ந்து கொள்ள முடியாது. அந்த வயதில் என் எண்ணங்களைப் புரிந்து கொள்ளும் நண்பர்களும் எனக்கு இல்லை.

இளைஞனானவுடன் கடவுள்மீது இருந்த பற்றும் போய் விட்டது. அதே சமயத்தில் நான் பிரிட்டிஷ் எதிரியாகவும் ஆக்கப்பட்டேன். பெற்றோர், ஆசிரியர், அரசாங்கம் யாராக இருந்தாலும் இவர்களுடைய அதிகாரப் போக்கை என் மனம் எதிர்த்தது. 1939—ல் நான் 'டப்ரின்' கப்பலில் கடற்படை பயிற்சி பெறும் மாணவனாக இருந்தபோது, என்னுடைய 'பிரிட்டிஷ் எதிர்ப்பு' மனப்போக்கு என்னைப் பலத்த ஆபத் துக்களில் சிக்க வைத்திருக்கிறது. 1938—ல் தலைசிறந்த பயிற்சி மாணவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் ஏன் அப்படி ஆகவில்லை என்று எனக்குப் புரியவில்லை. இதற்குக் காரணம் எனக்கு சுதந்திரத்திற்குப் பிறகு புரிந்தது. அப்போதிருந்த பிரிட்டிஷ் கப்பல் காப்டன், தன் ரகசிய குறிப்பில் நான் ஒரு காந்தியவாதி என்றும், ஆகவே என்னை நம்பக் கூடாது என்றும் எழுதி வைத்திருந்தார். பயிற்சி முடிந்து நான் கடற்படையில் நுழையாமலிருந்ததற்கும், என் உத்தியோகத்தைப் பாழடித்துக் கொள்வதற்கும் இது போது மானதாக இருந்தது.

ஆனால் என் பயிற்சியை முடித்துக் கொள்ள அனுமதித் தார்கள். பிறகு பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியில் ஒரு ஜூனியர் என்ஜினியராகச் சேர்ந்தேன்;

1938-40–ல் கல்கத்தாவில் என் முழு அரசியல் வாழ்க்கை ஆரம்பமாகியது. இளைஞர்களுக்கு, வங்காளம் ஒரு பெரியஅரசியல் பள்ளிக்கூடமாக இருந்தது. வங்காளபுரட்சி நாட்களிலிருந்தே நான் தேச விடுதலையிலும், சோஷலிஸ்ட் இயக்கத்திலும் ஈடுபட்டேன். புரட்சிக்காரர்களோடு எனக்கு தொடர்பு இருந்தது. எங்கள் விடுதியின் பின் புறமும், சுபாஷ் சந்திர போஸ் வீட்டின் பின்புறமும் நேருக்கு நேர் அமைந்திருந்தன. அந்தக் காலத்து இளைஞர்களைப் போலவே நானும் அவரது கொள்கைகளால் கவரப்பட்டேன். வீட்டிற்கு அருகிலேயே நான் இருந்ததால் அவரோடு பரிச்சயம் அதிகம் ஏற்பட்டது. என் மூலமாக என்னுடைய மற்ற இளைஞர்–நண்பர்கள் அவரைச் சந்தித்து இளம் கடற்படை அதிகாரிகள் என்ன செய்யலாம் என்று அவரிடம் யோசனை கேட்டார்கள். நேதாஜி கல்கத்தாவிலிருந்து தப்பி ஓடியபோது அதில் எனக்கும் சம்பந்தம் இருக்க வேண்டும் என்று கருதி போலீஸ் என்னைக் கைது செய்தார்கள்.

சுபாஷ் போஸோடு என் தொடர்பு அதோடு முடிந்துவிடவில்லை. நான் 'சில்கா' என்ற கப்பலின் மெரீன் என்ஜினியராக வேலை செய்து வந்தபோது, அந்தக் கப்பலை ஜப்பானிய நீர்மூழ்கி கப்பல்கள் மூழ்கடித்தன. சுமத்ராவுக்கு அருகில் உள்ள நியாஸ் என்ற தீவில் பயங்கரமான 9நாட்கள் கடலில் 'லைப்–போட்'டில் மிதந்து கரையேறினேன். அந்த சமயத்தில் இந்தோனேஷியா முழுவதுமே ஜப்பானியர் வசமாகிவிட்டது.

நான் இந்தியாவை விட்டுப் புறப்படும்போதே சுபாஷ் சந்திரபோஸ் ஜெர்மனிக்குப் போய் விட்டார் என்பது எனக்குத் தெரியும். சுமத்ராவில் நான் இருந்தபோது அவர் தென் கிழக்கு ஆசியாவுக்கு, அங்குள்ள இந்தியர்களைத் திரட்டி எதிர்ப்புக்கு ஒழுங்குபடுத்த, அங்கு வரப்போகிறார் என்று கேள்விப்பட்டேன, அவர் வருவதற்கு முன்பாகவே அந்தப் பகுதியில் இந்திய தேசிய ராணுவம் ஏற்பாடாகி இருந்தது. இந்திய சுதந்திரக் கழகம் இளைஞர்களுக்கு பயிற்சி அளித்து, இந்தியாவுக்குள் அனுப்பி பிரிட்டிஷாருக்கு எதிர்ப்பை அதிகரிக்கவும், இதற்கு வெளியிலிருந்து உதவி பெறவும் தயார்படுத்திக் கொண்டிருந்தது. என்னுடைய பின்னனி, சுபாஷ் போஷோடு எனக்கு இருந்த தொடர்பு—இவைகளால், இந்தியாவுக்குள் அனுப்பப்பட்ட முதல் இருபது இளைஞர்களில் நானும் ஒருவனாக இருந்தேன். செப்டம்பர் 1942–ல் பர்மா எல்லைப் பகுதியில் சிட்டகாங் ஜில்லாவில் உள்ள

'தெக்னுப்' என்ற சிறு நகருக்குள் நுழைந்தேன். இதற்கு முன்பாகவே நண்பர்கள் சிலர் நீர்மூழ்கிக் கப்பலில் வந்து இறங்கி, மேற்கு கடற்கரைப் பக்கமாகவும் இம்பால் பக்கமாக வும் இந்தியாவுக்குள் நுழைந்திருந்தனர்.

இம்மாதிரி சமயங்களில் வழக்கமாக நடப்பது போலவே, அவர்களில் ஒருவர் பிடிபட்டுப் போய் பிரிட்டிஷ் கையாளாகி விட்டார். என்னைப் போலீஸ் எதிர்பார்த்தனர். சீக்கிரமே கல்கத்தா போகும் வழியில் என்னைக் கைது செய்தனர்.

எங்கள் 19 பேரை டெல்லி செங்கோட்டையிலும், சென்னை கோட்டையில் உள்ள இருட்டறை சிறைகளிலும் வைத்திருந்தார்கள். எங்கள் மீது மன்னர் மீது போர் தொடுத்த குற்றத்துக்காக 'எதிரிகள் ஏஜண்ட் சட்டத்தின்' கீழ் விசாரணை சென்னையில் நடத்தப்பட்டது. நீதிபதி மாக் என்பவர் எங்களை விசாரித்தார். சட்டப்படி நாங்கள் எல்லோருமே குற்றவாளிகள். ஆனால் எங்கள் 19 பேருக்குமே மரண தண்டனை கொடுக்கவிரும்பாத நீதிபதி நான்கு பேருக்கு மரண தண்டனையும், ஒருவருக்கு 5 ஆண்டு காவல் தண்டனை யும் கொடுத்து மற்றவர்களை விடுதலை செய்து விட்டார். நான் டிசம்பர் 1945 வரை சிறையில் இருந்தேன்.

1943 ஆகஸ்ட் 9, விடியற்காலை அன்று 'வெள்ளையனே வெளியேறு' போராட்ட நாளின் முதல் ஆண்டு தினம். சென்னை சிறையிலிருந்த அந்த நான்கு பேரும் தூக்கு மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். தலைநிமிர்ந்து நடந்த அவர்கள் 'பாரத் மாதா கி ஜே' 'மகாத்மா காந்தி கி ஜே' என்று கோஷம் போட்டபடியே மரணத்தை நோக்கிப் போனார்கள். கேரளாவைச் சேர்ந்த அப்துல் காதர் மற்றும் ஆனந்தன், வங்காளத்திலிருந்து சத்திஷ் பர்தான், பஞ்சா பைச் சேர்ந்த பௌஜா சிங், இந்த நால்வரும் மிகுந்த மனோ திடத்தோடு மரணத்தைத் தழுவினார்கள். இறக்கும் தரு வாயில் அவர்கள் எங்களை தைரியமாக இருக்கும்படியும், எடுத் துக் கொண்ட காரியத்துக்காக தாங்கள் உயிர் விடத் தயா ராக இருப்பதாகவும் கூறினார்கள். சுருக்கு கயிறு கழுத்தில் மாட்டப்பட்டது. காலுக்குக் கீழே இருந்த பலகையை இழுக் கும் முன் "பாரத் மாதா கி ஜே". என்று கோஷமிட்டார்கள். பலகை இழுக்கப்பட்டது. வீர மரணம் எய்தினார்கள்.

அன்று காலை என் கண்ணீரை என்னால் அடக்கவே முடிய வில்லை. இந்த நான்கு பேருடைய மரணமும் 'மனித உயிருக்கு

மதிப்பு இல்லை' என்பதை எனக்கு நன்கு விளக்கியது. சுய மரியாதை, கௌரவம், இவை இல்லாமல் வாழ்வதைவிட இறப்பதுமேல் என்று இந்த தியாகிகளின் செயல் நிரூபித்து விட்டது.

மூன்றாண்டு கால சிறைவாசம் மனப்பக்குவத்தையும், கொள்கைப் பிடிப்பையும் எனக்கு தந்துவிட்டது. இளம் வயதில் இடது சாரி கொள்கைமீது ஏற்பட்ட ஒரு கவர்ச்சி, பிறகு, சோஷலிஸ்ட் கொள்கைப் பிடிப்பாக மாறிவிட்டது. காங்கிரஸ் தலைவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை இது காட்டிக் கொடுத்துவிட்டது. சிறைச்சாலை, மனிதனின் உண்மையான இயல்பை வெளியே காட்டிவிடுகிறது. நான் முதல் வரிசைத் தலைவர்களைச் சந்திக்கவில்லை. இரண்டாவது வரிசைத் தலைவர்களைச் சந்தித்து இருக்கிறேன். சுயநலம், கேவலமான குணம், நாணயமின்மை, வெளிப்பகட்டு—இவை போன்ற கீழ்தரக் குணங்களே இவர்களிடம் காணப்பட்டன. இதனால்தான் எனக்கு சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள தலைவர்கள் மீது நம்பிக்கையில்லாமல் போய்விட்டது.

சிறையிலிருந்து வந்த பிறகு, நான் வசதி மிக்க காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து முன்னேறியிருக்கலாம். ஆனால் இதற்காக நான் கொள்கைகளையும், ஈடுபாட்டுத் தன்மையையும் சரி கட்டிக் கொள்ள வேண்டியிருந்திருக்கும். அதனால்தான் நான் நிரந்தரமாகவே அதிகார வர்க்கத்தை எதிர்ப்பவனாகவே இருந்துவிட முடிவு செய்தேன்.

இந்த மனநிலையில் நான் அதிர்ஷ்டவசமாக டாக்டர் ராம் மனோகர் லோகியாவை கல்கத்தாவில் 1946 ஏப்ரலில் சந்தித்தேன்: அப்போதுதான் அவர் சிறையிலிருந்து விடுதலையாகி இருந்தார். அன்று முதல் அவர் 1967—ல் இறக்கும்வரை எனக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. அவர் மீது எனக்கு மதிப்பும், என் மீது அவருக்கு பாசமும்—இப்படி பரஸ்பர நம்பிக்கை கொண்டிருந்தோம், எதையும் ஏன் என்று தெரிந்துகொள்ளாமல் அப்படியே எடுத்துக் கொள்ளக் கூடாது என்பதை டாக்டர் லோகியாவிடமிருந்து நான் கற்றுக்கொண்டேன். அநியாயத்தையும், தீய சக்தியையும், எதிர்த்துப் போராடும் துணிவும் நெஞ்சுரமும் நான் அவரிடமிருந்து பெற்றவையே. காந்திஜிக்குப் பிறகு இவர்தான் நமது நாட்டில் தோன்றிய பெரிய அரசியல் ஞானி. நான் பார்த்த வரையில் மனிதாபிமானம் மிக்க தலைவரும் இவர் தான்.

நாட்டுக்கு மதிப்பு தேடித்தந்தவராகவும், இறக்கும்வரை பெரிய தலைவராகவும் போற்றப்பட்ட ஜவஹர்லால் நேருவின் நேர்மையின்மையையும், பொய்மையையும் அவர்தான் எனக்குப் புரியவைத்தார். அவருடைய உண்மை சொரூபத்தை நாடு உணர்ந்துக்கொள்ள இவ்வளவு நாட்கள் ஆகி இருக்கிறது. சோஷலிஸ்ட்கள்கூட நேருவை துதிபாடியபோது லோகியா உண்மை நேருவை கண்டார். லோகியாவின் இந்த உணர்வை ஒப்புக்கொண்ட மிகச் சிலரில் நானும் ஒருவன். முதல் பார்லிமெண்டில் நேருவையும் அவரது கொள்கைகளையும் எதிர்த்துப் பேசியது நான் மட்டும்தான். அவருடைய அயல்நாட்டுக் கொள்கையை நான் எதிர்த்துப் பேசியபோது என்னை பலர் கேலி செய்து கூச்சல் போட்டார்கள். காந்திஜியின் பெருமைகளையும் அவருடைய அவசியத்தையும் நான் லோகியாவிடமிருந்து அறிந்தேன். *1940*–ல் சுபாஷ் சந்திரபோஸ் காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்பட்ட போது காந்திதான் அதற்கு காரணம் என்று கருதிய இளைஞர்களில் நானும் ஒருவன். மார்க்ஸிஸத்தின மீது நான் கொண்டிருந்த கண்மூடித்தனமான பற்றைப் போக்கியவரும் லோகியாதான்.

சோஷலிஸ்ட் கட்சிக்குள்ளேயும் நான் லோகியா பக்கம் தான்....

*1954*–ல் நான் பார்லிமெண்டிலிருந்து ரிடையரானதும் பணக் கஷ்டமும் குடும்பத்தைக் காப்பாற்றும் நிர்பந்தமும் வந்தது. இதையும் தாங்கிக் கொண்டிருப்பேன்.........ஆனால் பதவிக்காக சோஷலிஸ்ட் கட்சியினர் செய்தவை எனக்குப் பிடிக்கவில்லை...ஆனால் அவர் எதிர்பார்த்தபடி நான் அரசியலுக்கு திரும்பாததில் எனக்கும் வருத்தம்தான்...

லோகியா மறைவுக்குப் பிறகு அரசியலில் எனக்குக் கொஞ்ச நஞ்சமிருந்த ஆசையும் போய்விட்டது. நான் வசதியான, ஆனால் அர்த்தமில்லாத ஒரு வாழ்க்கையை நடத்த ஆரம்பித்தேன். மது, சூதாட்டம் போன்ற விஷயங்கள் எனது அபிமான உணர்வை மறைக்கப் பயன்பட்டன. இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் பத்திரிகை நிர்வாகத்தில் நான் சம்பாதித்துக்கொண்ட பெயர் என்னுடைய மனசாட்சியின் குத்தலை சமனப்படுத்திவிட்டது. அரசியலில் சமாதானங்களைச் செய்ய விரும்பாத நான் தனி வாழ்க்கையில் செய்துகொண்டேன். இந்த நிலையில் உள்ளவர்கள் இதை ஒரு சீரிய

பண்பாட்டாகக்கூட கருதலாம். இழிநிலை தனக்குத் தானே சமாதானங்களையும் தேடிக் கொண்டு விடுகிறது.

1975 ஜூன் 26-ம் நாள் என்னை ஒரு புதிய மனிதனுக்கி விட்டது. அர்த்தமில்லாமல் போய்க் கொண்டிருந்த என் வாழ்க்கையை தைரியமும் கொள்கைப் பிடிப்புமுள்ளதாகச் செய்துவிட்டது. என்னிடமிருந்த அந்த உணர்வுகளையும், குணங்களையும் தட்டி எழுப்பிய இந்திராகாந்திக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன்......

என்னை மீண்டும் மீட்டுக் கொள்வதற்கு சந்தர்ப்பமளித்த ஜார்ஜ் பெர்னுண்டஸுக்கும் நான் நன்றிகூற கடமைப்பட்டிருக்கிறேன்.

—சி. ஜி. கே. ரெட்டி

சிறையிலிருந்து உயிரோடு திரும்பி வருவேன் என்ற நம்பிக்கை இல்லாதிருந்தபோதும் அதை மிக அமைதியாகவும் மகிழ்ச்சியாகவும் என்னை எதிர்நோக்க வைக்குமளவிற்கு தைரியமும் மனோதிடமும் கொண்ட என் மனைவி விமலாவுக்கு...

—சி. ஜி. கே.

# 1. நாட்டுக்கு விலங்கு பூட்டப்பட்டது

1975–ஆம் ஆண்டு ஜூன் 26-ம் தேதி. காலையில் நான் எழுந்திருக்கும் போதே அன்று விடியற்காலை நிகழ்ந்த பல பயங்கரமான விஷயங்களைப் பற்றி தெரிந்து கொண்டேன். இம்மாதிரி விஷயங்கள் நமது நாட்டிலும் நடக்குமா, இங்கேயும் ஒரு சர்வாதிகார ஆட்சி வர முடியுமா என்றெல்லாம் என்னால் நம்பவே இயலவில்லை. அதுவும் எப்போது? கிட்டத் தட்ட 30 ஆண்டுகள் சுதந்திர பாரம்பரியத்தோடு வாழ்ந்து விட்ட பிறகு, ஒரு சிலர் சேர்ந்துகொண்டு நாட்டின் ஜன நாயகத்தையே நசுக்கிவிடுவார்கள் என்பதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

ஜெயப்பிரகாஷ் நாராயண், மொரார்ஜி தேசாய், மதுலிமாயி, அசோக் மேத்தா போன்ற தலைவர்களும், எதிர்கட்சித் தலைவர்கள் அனைவரும், பேராசிரியர்களும், வக்கீல்களும், இன்னும் நாடு முழுவதும் ஆயிரக்கணக்கான பலரும், கேள்வி முறையின்றி எப்படி கைது செய்யப்பட்டு சிறையில் தள்ளப் பட முடியும் என்பதையும் என்னால் நம்ப முடியவில்லை. சர்வாதிகாரப் பாதையில் நாட்டைக்கொண்டு செல்லும் இம் மாதிரி நடவடிக்கையை மக்கள் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள் என்று நினைத்தேன். இந்திரா காந்தியின் இந்த நடவடிக்கை அவரை அழித்துவிடத்தான் போகிறது என்பது மட்டும் எனக்கு நிச்சயமாகத் தெரிந்தது. இந்த நடவடிக்கை களுக்கு எதிராக மக்கள் கொதித்தெழுந்து கிளர்ச்சி செய்யப் போகிறார்கள் என்று எதிர்பார்த்து நான், புதுடெல்லி, பழைய டெல்லி பகுதிகளைச் சுற்றி வந்தேன்.

என் கண்களையே நம்ப முடியவில்லை. டெல்லி எப்போதும் போல அமைதியாகத்தான் இருந்தது பரபரப்பு எதுவுமில்லை. மக்கள் நாலைந்து பேராகக் கூடி நாட்டுக்கு வந்த நாச காலத்தைப் பற்றி பேசிக் கொண்டிருக்கக்கூட இல்லை. எதுவுமே நடக்காதது போல் கடைகளில் வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. காரில் போவோர்கள் போய்க் கொண்டிருந் தார்கள். இது ஏன்? நான் மட்டும்தான் பாதிக்கப்பட்டிருக்கி றேனு? முதல் நாள், ஜெயப்பிரகாஷ் நாராயணின் கூட்டத் திற்கு வந்திருந்த லட்சக்கணக்கான மக்களை நினைத்து மாலையி லாவது ஏதாவது ஆர்ப்பாட்டங்கள் நடக்கும் என்று மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டேன். மாலை வந்தது. ஒன்றும் நடக்கவில்லை. நான் நினைத்தபடி ஒன்றுமே நடக்கவில்லை.

நானே வலியச் சென்று சிலரைச் சந்திக்க முயன்றேன். தீவிரஅரசியலில் நான் இப்போது ஈடுபடாததால்,என்னுடைய முன்னுள் சோஷலிஸ்ட் நண்பர்களுடன் தொடர்பு இல்லை. தவிரவும் அவர்களில் அனேகர் சிறையில் அடைக்கப்பட்டு விட்டனர். ஏதாவது முறையில், என்னேடு சேர்ந்து எதிர்ப்பு தெரிவிக்கும் யாரையும் என்னுல் சந்திக்க இயலவில்லை. கடைசியாக முழு மூச்சாக அரசை எதிர்த்து வந்த ஒரே ஒருவர் தான் எனக்குக் கிடைத்தார்.

அவரை வீட்டில் போய் பார்த்தபோது அவர் நிம்மதி யாகத் தூங்கிக் கொண்டிருந்தார். உரிமைகளுக்காக அயராது போராடிக் கொண்டிருந்த ஒருவர், அதுவும் இந்த மாதிரி ஒரு முக்கியமான நாளில் இப்படிக் கவலையில்லாமல் தூங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்து நான் திடுக்கிட்டுப் போனேன். கைதுக்குத் தப்பி வெளியே இருந்து ஏதாவது செய்ய முயற்சி எடுத்துக் கொண்டிருந்தவர்களோடு தொடர்பு கொள்ள, அவர்களது விலாசம் கூடத் தெரியாது என்று கூறி விட்டார். உரிமைக்காக அவர் போட்டதெல்லாம் வெறும் கூச்சல்தான். கொஞ்சம்கூட 'ரிஸ்க்' எடுக்க அவர் தயாராக இல்லை. அவர் சாதாரணமாகப் பேசுவதற்குக் கூட பயப்பட்டார். அவரைப் போலத்தான் சாதாரணமான மக்கள் பயப்பட்டார்கள்.

இந்திரா காந்தியை எப்படியாவது கீழே இறக்கிவிடும் கொள்கைக்காக கடைசிவரை போராடுவோம்' என்று சில மணி நேரம் முன்புவரை சொல்லிக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் மாறிவிட்டார்கள். அந்த ஒரே நடவடிக்கை மக்களின் மனதில் ஒரு ஆழமான பயத்தையும் பீதியையும் ஏற்படுத்தி, பெயருக்காவது ஜனநாயகத்தை மீட்க வேண்டும் என்ற ஒரு எண்ணம்கூட இல்லாமல் போய்விட்டது. தங்களை அரசியல் வாதிகள் என்றும் நிரம்பப் படித்த புத்திசாலிகள் என்றும் கூறிக் கொண்டவர்கள்தான் ரொம்பவும் கோழைகளாக மாறியவர்கள். புதிய நிலையை ஏற்றுக்கொள்ளவும் இவர்கள் தயாராக இருந்தார்கள். தங்களுக்கு மனசாட்சி என்ற ஏதோ ஒன்று இருந்ததாக நடித்தவர்கள், தங்களுடைய செயலின் மைக்குக் காரணங்களைக் கண்டு பிடித்துக்கொள்ள ஆரம்பித் தார்கள். என்றோ ஒரு நாள் நாடு பழைய நிலைக்குத் திரும்பும் சமயம், தாங்களும் அப்போது இருக்க வேண்டும் என்று விரும்பினார்கள். நாட்டுக்கு அவர்கள் தேவை அவ்வளவு முக்கியமாம். அதனால்தான் அவர்கள் தங்களை தியாகம் செய்து கொள்ள விரும்பவில்லை.

அவசர நிலையின் ஆரம்ப நாட்களின் அனுபவம் என் மனதை இரண்டு விதங்களில் புண்படுத்தியது. ஒன்று இந்திராவின் செயல்—எந்தவித பயமும் இல்லாமல் இந்திரா காந்தி தன் இஷ்டம்போல் ஜனநாயக உரிமைகளை ஒழித்து, ஜனநாயக உரிமை, மக்களின் வாழ்க்கை இவற்றைத் தனது ஏகபோக உரிமையாக்கிக் கொண்டது. இரண்டாவது, இவை எல்லாவற்றையும் எந்தவித எதிர்ப்போ, ஒரு சிறு முணு முணுப்போகூட இல்லாமல் ஏற்றுக் கொண்டது.

அரசியலை இருபது ஆண்டுகளுக்கு முன்பே துறந்தவன் நான். அரசியல்வாதிகளின் போக்கு, குறிப்பாக, தீய சக்திகளை எதிர்த்துப் போராடாமல் ஏதோ நிழலோடு சண்டை போடும் எதிர்க்கட்சியினரின் பரவலான போக்கு எனக்கு எரிச்சல் மூட்டியது.

'ராம் மனோகர் லோஹியா' இறந்த பிறகு, எதிர்க் கட்சியினரின் போக்கு, வெளியிலிருந்து பார்க்கும்போது ஆத்திர மூட்டியது. இந்த அளவுக்கு எதிர்க்கட்சியினர் சூடு குறைந்து ஆண்மையிழந்து போய் விடுவார்கள் என்று நான் நினைத்துப் பார்த்தது கூட கிடையாது. ஜெ. பி. யின் இயக்கம் இந்திய அரசியலுக்கு ஒரு புதிய தன்மையை உண்டாக்கி, அராஜகத்தை எதிர்த்துப் போராடும் அளவுக்கு, மக்களின் மனதில் உறுதியும், அச்சமின்மையும் வளர்ந்திருக்கும் என்ற எனது ஆசைகளையும், நம்பிக்கைகளையும் இந்திரா காந்தி செய்ததை எல்லாம் மக்கள் பணிவோடு எடுத்துக் கொண்ட விதம் பொய்யாக்கி விட்டது. நேருவின் பரம்பரை ஆட்சி நாட்டு மக்களை இந்த மாதிரி ஆக்கிவிட்டதா? குறிப்பாக எதிர்க்கட்சியினரை இந்த மாதிரி ஆக்கி விட்டதா?

நாட்டு நிலைமை எப்படி இருப்பினும், எதிர்க்கட்சியினர் எவ்வளவுதான் கோழைத்தனமாக நடந்து கொண்டாலும், என்னால் இந்த நிலைமையைப் பொறுக்க இயலவில்லை. எனக்குச் சரியான தொடர்புகள் இல்லாததால் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக எதுவும் செய்ய முடியாவிட்டாலும் ஜெயிலுக்குப் போனாலாவது மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்று கருதினேன். சிறைக்குச் செல்வதற்கு முயற்சிகள் அதிகம் தேவையில்லை. மனதில் உள்ளதை வாய்விட்டுப் பேசினாலே போதுமானது. நல்ல வேளையாக, அப்போதைக்கு மட்டுமே திருப்தியையும், பிறகு வேறு எந்தப் பயனையும் தராத இந்த முடிவை நான் எடுக்கவில்லை. இதற்கு காரணமாக இருந்தவள் என் மனைவி. இந்த மாதிரி சமயங்களில் அவள் எப்போதுமே புத்திசாலித்தனமாக நடந்து, அவசரமான, முட்டாள்தனமான முடிவுகள் எதையும் எடுக்காமல் என்னைத் தடுத்து விடுவாள். என்னுடைய அப்போதைய மனநிலையை அவள் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தபோதிலும், மனதிருப்திக்காக மட்டுமே போலீஸில் மாட்டிக்கொள்ள வேண்டாம் என்று எனக்கு அறிவுரை கூறினாள்.

# 2. தலைமறைவுத் தொடர்புகள்

ஜூன் மாத இறுதியில் 'ஜார்ஜ் பெர்னாண்டஸ் தப்பி விட்டார்' என்றும், 'தலைமறைவாகக் காரியங்களைச் செய்து வருகிறார்' என்றும் கேள்விப்பட்டேன். நான் முன்பே கூறியபடி என் நண்பர்கள் எல்லோருமே பிடிபட்டுச் சிறைக்கு அனுப்பப் பட்டு விட்டார்கள். அவர்களில் இளைஞர்களை எனக்குத் தெரியாது. ஜார்ஜோடு தொடர்புகொள்ள முதலில் அவரோடு சம்பந்தப்பட்டவர்களைக் கண்டு பிடித்து, நான் யார் என்று கூறி, அவர்களை நம்ப வைக்கவேண்டும். ரகசியப் போலீஸ் முழு மூச்சோடு ஜார்ஜைப் பிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்ததால், அவர்கள் என்னை ஒரு போலீஸ் ஏஜண்ட் என்று கூட நினைத்துவிடலாம். முன்பு இந்திரா காந்தியை வன்மையாக எதிர்த்து வந்த பலர் இப்போது, அவரச நிலையின் ஆரம்ப நாட்களில் அவருடைய பலமான ஆதரவாளர்களாக மாறி, தங்களுடைய விசுவாசத்தை நிரூபிக்க முயன்று வந்தனர். இதற்காக அவர்களில் சிலர் தங்களுடைய சகாக்களையும் நண்பர்களையும் காட்டிக் கொடுக்கவும் தயாராக இருந்தார்கள்.

நான் உறுதியோடு நம்பக்கூடிய நண்பர்கள் என்னையும் அதே அளவுக்கு நம்பக்கூடியவர்கள் எல்லோருமே பெங்களூரில் இருந்தனர். என் அரசியல் வாழ்வின் மையமே பெங்களூர் தான். அங்கு ஜார்ஜுடன் தொடர்பு வைத்திருக்கிறவர்கள். முன்னாள் சோஷலிஸ்ட் கட்சி செயலாளர் வெங்கட்ராமும், டாக்டர் லோஹியாவின் நெடுநாள் நண்பர்களான சினேக லதாவும் அவரது கணவர் பட்டாபியும்.

அவசரநிலை அறிவிக்கப்பட்ட இரண்டு நாட்களுக்குப் பிறகு, நான் பெங்களூர் போய்ச் சேர்ந்தேன். இந்த பயணம்

பயனில்லாமல் போய்விட்டது. வெங்கட்ராமுக்கோ, பட்டாபி தம்பதிக்கோ, ஜார்ஜ் எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை. ஆனால், ஜார்ஜின் தொடர்பு கிடைத்ததும் எனக்குத் தெரியப் படுத்துவதாகக் கூறினார்கள்.

பெங்களூரிலிருந்து திரும்பியதும், என்னுடைய பத்திரிகை நண்பர்களின் உதவியோடு, ஒரு 'அண்டர்கிரவுண்ட்' பத்திரிகை நடத்த ஏற்பாடுகள் செய்தேன். ஒரு அச்சகத்தைக் கண்டு பிடிப்பது பெரும்பாடாகி விட்டது: அதே போல் அச்சடித்த பத்திரிகைகளை வினியோகம் செய்வதும் பெரும் பிரச்னை. இம்மாதிரி பிரச்னைகளைச் சமாளிக்க முடியாமல் போய் விட்டதால், அந்தப் பத்திரிகை வெளிவரவேயில்லை. ஆனால், என்னைப் போலவே ஒரு ரகசியப் பத்திரிகையைக் கொண்டுவர முயற்சி செய்து கொண்டிருந்த சிலரை, ஜூலை முதல் வாரத்தில் சந்தித்தேன். அந்தப் பத்திரிகைக்கு சில கட்டுரைகளை எழுதிக் கொடுத்தேன். தமிழ்நாட்டில் திராவிட முன்னேற்றக் கழகம் நிறைவேற்றிய தீர்மானங்களையும், கருணாநிதியின் பேச்சுக்களையும் அவர்கள் மூலமாக வினியோகிக்க ஏற்பாடு செய்தேன். இதன் மூலம், தென்னாட்டில் என்ன நடக்கிறது என்பதை வடக்கில் உள்ளவர்கள் தெரிந்து கொள்ள முடிந்தது.

தி.மு. கழகம், அவர்களுடைய அரசு—இவற்றின் விட்டுக் கொடுக்காத போக்கு மக்களுக்குப் பெரிய உற்சாகத்தைக் கொடுத்தது. தி.மு.க வின் தீர்மானங்களும், அறிக்கைகளும், பத்திரிகைகளில் வெளிவராவிட்டாலும், தி. மு. கழகம் அவற்றைப் பல்லாயிரக்கணக்கான பிரதிகள் அச்சிட்டு அனுப்பி, மற்ற மாநிலங்களில் பரவலாக வினியோகிக்க ஏற்பாடு செய்தது. இருந்தும் தி.மு.க. தலைவர்களை நாங்கள் பல தடவை சந்தித்துப் பேசிய போதும், அவர்கள் செய்வதாக வாக்குறுதி கொடுத்தும், இந்திரா காந்திக்கு எதிராக மக்களைத் திரட்டி, தயார்படுத்த ஒன்றும் செய்ய வில்லை. தான் முதல்வராக இருந்த கடைசி நாட்களில்-வளர்ந்து வந்த இந்த நிலையை கருணாநிதி கொஞ்சமும் புரிந்து

கொள்ளாததும், இந்திராகாந்தியால் டிஸ்மிஸ் செய்யப்பட்ட பிறகு அவரிடம் சரணாகதி அடைந்ததும், அவசரநிலை காலத்தில் சாதுர்யமும், சாமர்த்தியமும் வாய்ந்த ஒரு அரசியல்வாதியின் கோழைத்தனத்துக்கும் அரசியல் கூர்மையின்மைக்கும் சரியான எடுத்துக் காட்டுக்கள்.

ஜூலை மூன்றுவது வாரவாக்கில் ரஷ்யாவிலிருந்து நியூஸ் பிரிண்ட் காகிதம் இறக்குமதி செய்வதைப்பற்றி பேச்சு வார்த்தை நடத்த, ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் குழு ஒன்று மாஸ்கோ போவதாக இருந்தது. ரஷ்யாவோடு வியாபார பேச்சு வார்த்தைகள் என்பது அர்த்தமற்றது. பல தடவை இம்மாதிரி குழுக்களோடு நான் போயிருந்ததால் இந்தத் தடவை நான் போக விரும்பவில்லை. இருந்தபோதிலும், இந்திரா காந்திக்கும் அவர் சர்வாதிகார ஆட்சிக்கும் எதிராக அயல் நாடுகளிலுள்ள நண்பர்களோடு தொடர்பு கொண்டு ஆதரவு திரட்ட, இதை ஒரு நல்ல சந்தர்ப்பமாகக் கருதினேன். ஆகவே, நான் அந்தக் குழுவோடு மாஸ்கோ போனேன். ஆனால், நான் மற்ற குழுவினரோடு இந்தியாவுக்குத் திரும்பாமல், மாஸ்கோவிலிருந்து லண்டன், அமெரிக்கா, ஜப்பான், தென்கிழக்கு ஆசிய நாடுகள், இங்கெல்லாம் போய்விட்டு டெல்லி திரும்பினேன். இங்கெல்லாம் என்னுடன் ஜெயப்பிரகாஷ் நாராயணின் பதிவு செய்யப்பட்ட பேச்சை 'டேப்'பில் எடுத்துப் போயிருந்தேன். இந்த டேப்பை ஜெ. பி. என்னிடம், ஜூன் 25 அன்று ராம்லீலா மைதானத்தில் வைத்துக் கொடுத்திருந்தார். இந்தியாவில் இருந்த அந்தப் பேச்சு அயல் நாடுகளில் பல இடங்களில் ஒலிபரப்பப்பட்டதோடு மட்டுமில்லாமல், இதன் ஆங்கிலமொழி பெயர்ப்பு பரவலாக வினியோகம் செய்யப்பட்டது. ஜெ.பி.யை எதிர்த்து வெட்கமின்றி இந்திரா ஏஜெண்டுகளால் அவிழ்த்து விடப்பட்ட கட்டுக் கதைகளை பெரிய அளவுக்கு முறியடிக்கப் பயன்பட்டது. லண்டன் நகரில் எனக்குத் தெரிந்த முன்னாள் சோஷலிஸ்டுகள் அடங்கிய சில இந்தியர்கள் 'ஃப்ரீ ஜெ.பி. கமிட்டி' என்ற பெயரில் ஒரு அமைப்பு

ஏற்படுத்திக் கொண்டிருந்ததைக்காண எனக்கு மகிழ்ச்சியாக இருந்தது. இந்தியாவில் நடந்திருந்ததைப்பற்றி உலக அபிப்பிராயத்தையும், கவனத்தையும் திருப்ப இது முழு முச்சாக முயன்று கொண்டிருந்தது. இந்தியாவில் நடக்கும் செய்திகளை அச்சிட்டு வெளியிடுவதற்கும், அந்தப் பத்திரிகையின் பிரதிகளை முடிந்த அளவுக்கு இந்தியாவுக்கு கடத்தல் செய்யவும் இவர்கள் திர்மானித்தார்கள். 'ஸ்வராஜ்' என்ற பெயரில் வெளியான இந்தப் பத்திரிகை, இந்தியாவில் நடப்பவை பற்றி அயல்நாட்டவர் தெரிந்து கொள்ளவும், இந்தியாவிலேயே உள்ளவர்கள்கூட தெரிந்து கொள்ளவும் உதவியது. நாட்டில் மிகவும் கடுமையான தணிக்கை முறை அமல் செய்யப்பட்ட பிறகு உண்மைச் செய்திகளை அறிந்து கொள்ள இந்தப் பத்திரிகை உதவியாக இருந்தது. இந்தியாவுக்குள்ளே ஸ்வராஜ் பத்திரிகையின் சர்க்குலேஷன் 1000 பிரதிகள். அயல்நாடுகளிலும் நிறைய விற்பனை ஆகியது. வாய்மொழியாகவும் இச் செய்திகள் வேகமாகவும், வெகு தூரத்துக்கும் பரவின. நான் லண்டன் போயிருந்த சமயம் இந்த 'ஃப்ரிஜெ.பி.கமிட்டி' லண்டனில் வெளியாகும்'டைம்ஸ்' பத்திரிகையில், கைது செய்யப்பட்டோரை விடுதலை செய்யக் கோரி, உலகின் பெரிய மனிதர்கள் பலர் கையெழுத்திட்ட முழுப்பக்க விளம்பரம் ஒன்றை வெளியிட ஏற்பாடு செய்து வந்தனர். கையெழுத்திட்டவர்களே அந்த விளம்பர வெளியீட்டுக்கான பணத்தையும் கொடுப்பதாக இருந்தது. இந்த விளம்பரம் ஆகஸ்ட் 15-ம் தேதி வெளியாகியது. உலகிலுள்ள பல நாடுகளையும் சேர்ந்த 700 பேர் இதில் கையெழுத்திட்டிருந்தார்கள். பல்வேறு துறைகளிலும் புகழ்பெற்ற எல்லாருமே இதில் கையெழுத்திட்டிருந்தார்கள் அவர்களில் 70 பேர் பிரிட்டிஷ் பாராளுமன்ற உறுப்பினர்கள்.

இந்த 'ஸ்வராஜ்' பத்திரிகை ஏற்பாட்டாலும், 'டைம்ஸ்' விளம்பரம் வெளியானதாலும் என்னுல் இயன்ற அளவுக்கு உதவினேன். 'ஸ்வராஜ்' பிரதிகள், தனித்தனியாக சீலிட்ட கவர்களில் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டன. விமானத்

தபால் செலவு அதிகமாக இருந்தபோதும் இந்தியாவில் நடை பெற்ற நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ள உதவிய இந்த ஒரே பத்திரிகை நிச்சயமாகப் பலருக்கும் போய்ச் சேர்ந்து கொண் டிருந்தது. அவசர நிலை கால முடிவு வரை இந்தப் பத்திரிகை வந்து கொண்டிருந்தது. எல்லோரும் எதிர்பார்த்தபடி இது ஒழுங்கான தேதிகளிலோ, சரியாகவோ வரவில்லை. ஆனாலும், இதை நடத்தியவர்கள், ஒரு ஈடுபாட்டோடு சுய கட்டாயத்தோடு வேலை செய்தார்கள். இவர்கள் அனைவரும் பாராட்டத் தகுந்த ஒரு காரியத்தைச் செய்து கொண்டிருந் தார்கள். இந்திய அரசாங்கம் செய்து வந்த பொய்ப் பிரச்சா ரத்திற்கு நேர் மாறாக, இந்த ஜெ. பி. கமிட்டிக்கு வெளியிடங் களிலுள்ள எந்த ஒரு ஸ்தாபனத்திடமிருந்தும் பணம் வரவில்லை. ஜெ.பி. கமிட்டிக்குத் தேவையான பணம் சிறிய அளவில் நன்கொடைகளாகத் தனிப்பட்ட மனிதர்களிட மிருந்து வந்து கொண்டிருந்தன. அதனால்தான் அந்தக் கமிட்டியின் வேலைகள் எந்த அளவுக்கு இருக்க வேண்டுமோ அந்த அளவுக்குத் திறமையோடும், பரந்த அளவிலும் நடை பெறவில்லை. நான் அங்கு போயிருந்தபோது அந்தக் கமிட்டி, யோடும் மற்ற ஸ்தாபனங்களோடும், பத்திரிகைகளோடும் தனிப்பட்டவர்களோடும் தொடர்பு கொண்டேன். எனது ரகசிய நடவடிக்கைகளுக்கு நிறைய உதவிகளைச் செய்ததன் மூலம் எனது உற்சாகத்தை அதிகப்படுத்தினார்கள். முன்னாள் இந்திய சோஷலிஸ்ட் கட்சி உறுப்பினரும், அகில உலகப் போக்குவரத்து ஊழியர்கள் சம்மேளனத்தைச் சேர்ந்தாரு மான சுகுல்ஹோடா என்பவர் இந்தக் கமிட்டியின் செயலாள ராக இருந்து, அதன் நடவடிக்கைகளுக்குத் தூண்டுகோலாக அரும்பணியாற்றினார். எனது நெடுநாளைய சோஷலிஸ்ட் நண்பர்களான எஸ். கே. சாக்ஸேனாவும், தரம்பாலும் இதன் மற்ற உறுப்பினர்கள்.

இதே போன்ற மற்ற அமைப்புகள் அமெரிக்காவிலும் ஏற்பட்டு இந்திய ஸ்தானிகராலய காரியாலயங்கள், மற்ற இந்திய தூதரகங்களின் முன்பாக ஆர்பாட்டங்கள் நடத்தப்

பட்டன. இந்த முயற்சியில் ஈடுபட்டவர்கள் இந்திய மாணவர்கள், பேராசிரியர்கள், வக்கீல்கள், டாக்டர்கள் போன்றவர்கள். பின்னர், இந்த அமைப்புகள் 'ஜனநாயகத் துக்காக இந்தியர்கள்' (People For Democracy) என்ற ஒரே அமைப்பின் கீழ் செயல்பட ஆரம்பித்தன. இவர்கள் ஒரு பத்திரிகையையும் நடத்தி, இந்திராவுக்கும் அவரது சர்வாதிகார ஆட்சிக்கும் எதிராகப் பிரச்சாரம் செய்தனர். இந்த முயற்சியில் ஈடுபட்டவர்களில் மிகவும் முக்கியமான வர்கள் ஸ்ரீகுமார் போதாரும், எஸ். ஆர். ஹிரேமத்தும் ஆவார்கள். இவர்களோடு நாங்கள் இடைவிடாத தொடர்பு கொண்டிருந்தோம்,

ஜப்பானிலும், தென்கிழக்கு ஆசியாவிலும் இந்த மாதிரி யான ஸ்தாபனம் ஒன்றும் நிறுவப்படவில்லை. அம்மாதிரி ஒன்றை ஏற்பாடு செய்ய என்னாலும் உதவ இயலவில்லை. இருந்தாலும் பத்திரிகை ஆசிரியர்களோடும் இந்தியாவில் சர்வாதிகாரம் ஏற்பட உதவியவர்களுக்கு எதிரான பிரச் சாரத்தில் ஈடுபட்டிருந்த, என்மீது அனுதாபம் கொண்டு உதவி செய்த சில ஸ்தாபனங்களோடும் நான் தொடர்பு ஏற்படுத் திக் கொண்டேன்.

ஆகஸ்ட் மாத நடுவில் திரும்பவும் ஒரு தடவை பெங்களூருக்குப் போய் பெர்னாண்டஸுடன் தொடர்பு கொள்ள ரொம்பவும் முயன்று பார்த்தேன். அப்போது ஜார்ஜ் பெர்னாண்டஸ் நாடு பூராவும் பிரயாணம் செய்து அறிக்கைகளை விட்டு கொண்டிருந்தார். இந்தத் தடவை திரும்பியபோது ஜார்ஜ், தென்னாட்டுக்கு சீக்கிரமே திரும்பு வார் என்றும் அவர் வந்தவுடன் எனக்குத் தகவல் கிடைக்கும் என்ற நம்பிக்கையோடும், உறுதியோடும் திரும்பினேன்.

ஆகஸ்ட் 22-ம் தேதி சென்னையில் அப்போது இருந்த வெங்கட்ராமிடமிருந்து எனக்கு ஒரு அழைப்பு வந்தது. 'அவசரமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த திருமணத்தில் கலந்துகொள்ள உடனே வரும்படி' கூறியிருந்தார். அடுத்த விமானத்திலேயே திருமண ஏற்பாடுகளை கவனிப்பதற்கு

வரும்படி அழைத்திருந்தார். ஜார்ஜ் பெர்ஞண்டஸைச் சந்திக்க முன்பே ஏற்பாடு செய்திருந்த சங்கேத மொழி இது. அப்போது டெல்லியிலிருந்த, லண்டன்ஃப்ரீ ஜெ. பி கமிட்டியின் உறுப்பினர் எஸ். கே சாக்ஸேஞவோடு சென்னை போய் சேர்ந்தேன். அதிலிருந்து 13-3-76 அன்று என்னைக் கைது செய்த வரை நான் ஜார்ஜோடு இடையருத நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தேன். எல்லா விவாதங்களிலும் பங்கு கொண்டேன். அவருடைய எல்லாத் திட்டங்களையும் நிறைவேற்றுவதிலும் உதவியாக இருந்தேன்.

# 3. அந்தப் பெண்மணியை நீக்குங்கள்!

ஜார்ஜ் பெர்னுண்டஸ் தலைமையேற்று நடத்திய, நான் பங்குபெற்ற தலைமறைவு இயக்கத்திற்கும், நாட்டின் சர்வ வல்லமை பொருந்திய, இஷ்டப்படி ஆட்சி செய்த இந்திரா காந்தியையும், அவரது கையாட்களையும் எதிர்த்து நடத்தப் பட்ட மற்ற இயக்கங்களுக்கும் பொதுவான குறிக்கோள் ஒன்றுதான். அது, கொடுங்கோல் ஆட்சியை, சர்வாதிகார ஆட்சியை ஒழிக்க வேண்டும் என்பதுதான். ஜார்ஜ் அடிக்கடி குறிப்பிட்டது போல் அது ஒரு 'ஒரு அம்சத் திட்டம்' 'அந்தப் பெண்மணியை நீக்கிட வேண்டும்' என்பதுதான் அந்த திட்டம்.ஆனல், மற்ற இயக்கங்களின் பங்கிற்கும். தத்து வங்களுக்கும் எங்கள் இயக்கத்தின் பங்கிற்கும், தத்துவங் களுக்கும் நிறைய மாறுபாடுகள் உண்டு. குறிப்பாக, இதே குறிக்கோளோடு பணியாற்றிய 'லோக் சங்கர்ஷ் சமிதி' என்ற அமைப்புக்கும், எங்களுக்கும் வித்தியாசங்கள் உண்டு.

ஜெ பி. ஏற்படுத்திய இந்த லோக் சங்கர்ஷ் சமிதியில் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் தவிர மற்ற எல்லா எதிர்கட்சிகளும் அங்கம் வகித்தன. மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி நேரடி யாக அங்கம் வகிக்காமல், தேவைப்பட்டபோது குறிப்பிட்ட அளவில் தன் ஆதரவைக் கொடுத்து வந்தது. எதிர்க்கட்சியின் முன்னணி வீரர்கள் எல்லோரும், இரண்டாவது வரிசையில் இருந்த தலைவர்களில் பலரும் கைது செய்யப்பட்டு விட்டதால் லோக் சங்கர்ஷ் சமிதி பெரிதும் பலமிழந்துவிட்டது. கொடுங் கோல் ஆட்சி முறைகளாலும், நாட்டின் எல்லா நடவடிக்கை களின் மீதும் அரசாங்கமும், இந்திரா காந்தியும் ஒரு பிடிப்பை ஏற்படுத்திக் கொள்ளும் முயற்சியில் அவர்கள் வெற்றிகண்டு

விட்டதால், இந்தச்சமிதியின் நடவடிக்கைகள் பெரிதும் பாதி கப்பட்டுவிட்டன, இருந்தும்கூட திட்டங்கள் போட்டு அவற் றைச் செயலாக்க பல கூட்டங்களை சமிதி நடத்தியது. இவர் களுடைய பிரதான உறைவிடம் எதிர்க்கட்சி ஆட்சி செய்து வந்த குஜராத் மாநிலம். தி. மு. க. ஆட்சியிலிருந்த தமிழ் நாட்டில் சமிதிக்கு கணிசமான பாதுகாப்பும், ஆதரவும் கிடைத்தது. இவர்கள் தங்கள் காரியங்களைச் செய்திக் கடிதம் ஒன்றின்மூலம் நடத்தினார்கள். செய்திகளைத் தவிர செயல் முறை கோரிக்கைகளும், எதிர்ப்பு இயக்கம் நடத்தும் முறை களும் இதில் கொடுக்கப்பட்டிருந்தன. இவர்கள் அக்டோபர் 15—லிருந்து ஜனவரி நடுப்பகுதிவரை நடத்திய சத்தியாக் கிரகத்திற்கு பெருத்த ஆதரவு கிடைத்தது. நாடு முழுவதும் சுமார் 30 ஆயிரம் பேர் சிறை சென்றார்கள்.

இருந்தும் இந்தச் சிறை செல்லும் நடவடிக்கை மக்களைக் குறைந்த அளவில்தான் உற்சாகப்படுத்தியது. அரசாங்கத் தையும் பெரிய அளவில் நிலை குலையச் செய்யவில்லை. இந்தச் சத்தியாகிரகத்தால் அரசாங்கத்துக்குப் பெரிய பிரச்னைகள் எதுவும் ஏற்படவுமில்லை. சமிதியால் தன்னுடைய முடிவுகளை யும் ரகசியமாக வைத்துக் கொள்ள இயலாமல் போய்விட்ட தால், இவர்களைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்வது அரசாங்கத்துக்குச் சுலபமாகப் போய்விட்டது. சத்தியாக் கிரகம் செய்பவர்கள் சற்று சேர்ந்து, குறிப்பிட்ட இடத்துக்கு போகும் முன்பே போலீஸ் இவர்களைப் பிடித்துவிடும், அல்லது அங்கு போய் சேர்ந்தாலும் போலீஸார், அங்கு தயாராகக் காத்து நிற்பார்கள். கொடியைக் காட்டவோ, கூச்சல் போடவோ ஒரு சந்தர்ப்பம்கூட அவர்களுக்குக் கிடைக்க வில்லை.

இந்த மாதிரி பழைய பாணி சத்தியாக்கிரகம் வெற்றி பெறாததற்கு முக்கிய காரணம், இதற்குப் போதிய அளவு விளம்பரம் செய்யப்படவில்லை. பத்திரிகை தணிக்கை முறை அவ்வளவு கடுமையாக இருந்ததாலும் செய்திகளை அரசாங்கம் தன்னிஷ்டம் போல வெளியிட முடிந்ததாலும் சமிதியின்

நடவடிக்கைகள் யாருடைய கவனத்திற்கும் வரவேயில்லை. 'ஆயிரக்கணக்கானவர் சிறையில் வாடினார்கள்' என்ற விஷயங்கள் எல்லோருக்கும் தெரிந்தாலும், யார் யார் இந்திராவை எதிர்த்துச் சிறையிலிருந்தார்கள் என்ற விவரம் நெருங்கிய உறவினர்கள் நெருக்கமான நண்பர்கள் —இவர்களைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. ஒரு ஊர்வலமோ பொதுக் கூட்டமோ போலீஸால் கண்மூடித்தனமாக அடிக்கப்பட்டு கலைக்கப்பட்டால்கூட அது, அடுத்த தெருவில் உள்ளவர்களுக்குக்கூட தெரியாமல் போய்விட்டது. இந்த அறியாமையினால் இந்தச் சமிதியின் இயக்கம் ஒரு சிறு சலசலப்பைக்கூட ஏற்படுத்தவில்லை.

ஒரு சமயத்தில் சிறையில் ஒன்றரை லட்சம் கைதிகள் இருந்திருப்பார்கள். இவர்கள், மிஸா அல்லது இந்தியப் பாதுகாப்புச் சட்டம் அல்லது, சாதாரண கிரிமினல் சட்டத்தின் கீழ் சிறையில் அடைக்கப்பட்டவர்கள். 1942—ம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்தின் உச்சகட்டத்தில் கூட 40,000 பேர் தான் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார்கள். இவ்வளவு அதிக எண்ணிக்கையில் அவசரநிலை காலத்தில் சிறையில் அடைக்கப்பட்டது அரசாங்கத்தின் அஸ்திவாரத்தையே உலுக்கியிருக்க வேண்டும். இவ்வளவு பேரை சிறைக்கு அனுப்பிய ஒரு இயக்கத்திற்கு எந்தவிதமான எதிரொலியும் இருக்கவில்லை.

இந்தச் சூழ்நிலையில் ஜார்ஜும் அவரோடு இருந்தவர்களும், அதிகப் பலனளிக்கக் கூடியதும், வெற்றி வாய்ப்புகள் அதிகம் இருக்கக்கூடியதுமான ஒரு வழியைக் கடைப்பிடிக்க யோசிக்க வேண்டியதாயிற்று. இதனால், லோக் சங்கர்ஷ் சமிதியன் கொள்கைகள் அல்லது நடைமுறைகளோடு நாங்கள் ஒத்துப் போகவில்லை என்று சொல்ல முடியாது. இதற்கு மாறாக சமிதி எங்களுடைய முழு ஆதரவையும் பெற்றுவந்தது. அது ஆரம்பித்த இயக்கத்தில் எங்களால் இயன்ற அளவுக்கு மக்களை சேர்க்க முயற்சி செய்தோம். ஆனால், மக்களை எழுப்பி விடும் முயற்சிகளில் இன்னும் அதிக அளவு வெற்றி காண

வேண்டுமென்றால், சமிதி செய்து கொண்டிருந்ததைவிட அதிக மாக வேறு ஏதாவது செய்ய வேண்டும் என்று முடிவு செய் தோம்.

எங்களுடைய குறிக்கோளும், சங்கர்ஷ் சமிதியின் குறிக் கோளும்—அதாவது இந்திரா காந்தியைப் பதவியிலிருந்து இறக்க வேண்டும் என்பது—ஒன்றாக இருந்தாலும், ஆரம்பத் திலிருந்தே பழைய சத்தியாக்கிரக முறை என்பது, எதற்கும் அஞ்சாத ஒரு அராஜக சர்வாதிகாரத்துக்கு எதிராக, சீக்கிர மாகப் பலனளிக்காது என்பது எங்களுக்கு ஆரம்பத்திலிருந்தே தெரியும். சிறையில், பழைய கைதிகளின் மிக அதிகமான எண்ணிக்கை நிச்சயமாகப் பலனளித்திருக்கும், ஆனால் அப்போதிருந்த சூழ்நிலை பல ஆண்டுகள் செல்லச் செல்ல சர்வாதிகாரிக்குத் தன் நிலையை பலப்படுத்திக் கொள்ளகாலம் உதவியிருக்கும். பிறகு அவரைத் தூக்கியெறிய ரொம்பவும் சிரமப்பட்டிருக்கும். இந்த அளவுக்கு நிலைமைகள் போய் விட்டால் அவரைக் கொல்லுவதைத் தவிர வேறு வழி இருந் திருக்காது—இது எண்ணிக்கூட பார்க்க முடியாத ஒரு நடவடிக்கை. அப்படியானல் இந்திராகாந்தியை அகற்றிவிட்டு திரும்பவும் ஜனநாயக உரிமைகளை எப்படி நிலை நாட்டுவது?

கொலை செய்வது நேரிடையாக எளிதானது. ஒவ்வொரு சர்வாதிகாரிக்கு எதிராகவும் இது பயன்படுத்தப்பட்டிருக் கிறது. திட சித்தத்தோடு ஒரு சிலர் ஒரு குழுவாகச் சேர்ந்து கொண்டு முயற்சி செய்திருந்தால் இந்திரா காந்தியையும், அவருக்கு மிக அருகில் உள்ளவர்களில் யாரை அழித்தால் சர்வாதிகார ஆட்சி ஒழியுமோ அவர்களையும் கொன்றிருக்க முடியும். ஆனல், இந்த மாதிரி கொலைகளால் பிரச்னைகளுக்கு முடிவு காண முடியாது என்று எங்களுக்குத் தெரியும். இந்த முயற்சியால், சம்பந்தப்பட்ட ஆசாமியை ஒழித்துவிட முடியுமே தவிர, அந்த ஆசாமிக்கும், அவரைச் சுற்றியுள்ள சிலருக்கும், யாராலும் அசைக்க முடியாத அளவுக்கு பெருத்த அதிகாரத்தையும் பெற்றுக் கொடுத்த ஒரு வழிமுறையை ஒழித்துவிட முடியாது. கொலை ஒரு தடையாக இருக்க முடியுமே தவிர, திரும்பவும் சர்வாதிகாரம் வேறு ரூபத்தில்

வந்துவிடாது என்பதற்கோ எந்தவிதமான உத்திரவாதமோ கொடுக்க இயலாது. இம்மாதிரி கொலையைத் தொடர்ந்து ராணுவ ஆட்சி ஏற்படுவது நிச்சயமான ஒரு சாத்தியக்கூறு— இந்த முறை, மற்ற முறைகளைவிட எளிதாகத்தோன்றினாலும், வியாதியைக் குணப்படுத்துவதற்குப் பதிலாக இன்னமும் அதிகமாக்கிவிடும் என்பது தெளிவாகத் தெரிந்துவிட்டதால் இதை நாங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஒதுக்கிவிட்டோம். வெகு குறுகிய காலத்துக்குக்கூட சர்வாதிகாரப் போக்குகளை இந்த முறை ஒழித்துவிடாது என்பது நிச்சயம்.

கொலை முயற்சி தேவையில்லை, விரும்பத்தக்கதல்ல என்று நாங்கள் முடிவு எடுத்ததில், இதன் நியாயபூர்வமான காரணமும் இருந்தது. நானும்ஜார்ஜும், டாக்டர்லோஹியாவோடு நெருங்கிப் பழகியவர்கள். அவரிடம் நாங்கள் கற்றுக்கொண்ட பல தத்துவங்களில் எதையும் அடுத்தடுத்துச் செய்து விடுவதில் உள்ள லாபமும் ஒன்று. இது டாக்டர் லோஹியாவே வழக்கத்தில் கொண்டு வந்த ஒருமுறை. எந்த முடிவுக்கும், அதற்கான வழிமுறைகளுக்கும் சம்பந்தம் உண்டு என்று கருதுபவர். அவர் ஒரு வெஜிட்டேரியன் அல்ல. போலியான காந்தியவாதியும் அல்ல. ஆனால், காந்தியக் கொள்கைகளை நம்பியதோடு மட்டுமின்றி, கடைப்பிடித்தும் வந்தார். வாழ்க்கை மீது அவருக்கு உள்ள பிடிப்பு, உணர்ச்சி பூர்வமானது மட்டுமல்ல, அறிவுபூர்வமானதும்கூட. அவர் கொலையை வெறுத்தார். அது அரசாங்கம் செய்தாலும் அல்லது அரசை எதிர்க்கும் மக்கள் செய்தாலும் அதை வெறுத்தார். பல காலமாகவே அவர் எங்களுக்கு படித்துப் படித்து கூறியதெல்லாம் மனித உயிரைக் கவர என்றுமே நாம் முயற்சி செய்யக் கூடாது—அந்த உயிர் ஒரு தீய மனிதனின் உயிராக இருந்தாலும்கூட—என்பதுதான். ஆகவே கொலை செய்யாமை மீதும், உடலுக்குத் தீங்கு விளைவிக்காமை மீதும் எங்களுக்கு ஏற்பட்டிருந்த நம்பிக்கை சாதுர்யத்தின் அடிப்படையால் ஏற்பட்டது கிடையாது. நம்பிக்கையின் அடிப்படையில் ஏற்பட்டது:

எங்கள் முக்கியமான முதல் நோக்கமே மக்களின் மனதில் புகுந்து, அவர்களை நிலைகுலையச் செய்துவிட்ட பயத்தை நீக்கி விட வேண்டும் என்பதே. மக்களின் பயத்தை நீக்குவதற்கு மிகவும் பலனளிக்க நல்ல ஒரே வழி, ஆளும் கூட்டத்தின் மனதில் பயத்தை உண்டாக்கி விடுவதே. முயற்சியும் தைரியமும் உள்ள ஒரு இயக்கம் இருக்கிறது என்று தெரிந்தாலே போதும். சர்வாதிகாரியும், அவரது கையாட்களும் பயந்து விடுவார்கள். அவரை எதிர்ப்பதையும், அதற்கு மக்கள் ஆதரவு இருக்கிறது என்பதையும் வெளிப்படையாக மக்களுக்குத் தெரியும்படியாகச் செய்ய வேண்டும். இம்மாதிரி பரபரப்பான நடவடிக்கைகளை எல்லாம் வன்முறை என்றுகூட பெயரிட்டு விடுவார்கள். ஆனால், இம்முறைகளினால் மரணமோ, மக்களுக்கு உடல் காயமோ ஏற்படாத வரையில் மக்களின் மென்மையான உணர்வுகளை இது பறித்துவிடாது. சொல்லப் போனால் 1942 சுதந்திரப் போராட்டம்கூட வன்முறை இயக்கம்தான். அந்த இயக்கம் பிரிட்டிஷ் ஆதிக்கத்தைத் தடுமாற வைத்ததோடு, மக்களையும் சுறுசுறுப்பாக, பரபரப்போடு இருக்க உதவியது. இம்மாதிரி ஒரு இயக்கம் இந்த அவசர நிலை காலத்துக்கும் தேவைப்பட்டது. இந்த இயக்கம் வெற்றி பெற வேண்டுமானால் கொலை செய்வதையும் உடலுக்குத் தீங்கு விளைவிப்பதையும் தவிர்க்க வேண்டும். தவிர இலக்குகளைத் தேர்ந்தெடுப்பதிலும், எந்த அளவு வன்முறைகளை உபயோகிக்க வேண்டும் என்பதிலும் கவனமாக இருக்க வேண்டும். நாசவேலை மிகவும் அவசியம் என்றாலும், அவற்றில் முட்டாள்தனமாக ஈடுபட்டு, மக்களுக்கு இடைஞ்சலைத் கொடுத்து, அதன்மூலம் அவர்களுடைய ஆதரவை இழந்து விடக்கூடாது. பொதுவாகப் பார்த்தால், நாங்கள் செய்யப் போகும் காரியங்கள் மக்களின் கவனத்தைக் கவரும் வகையில் பரபரப்போடும், தலை மறைவாகவும் இருப்பவர்கள் செய்யும் வேலை என்று மக்களுக்குப் புரியும்படியாகவும் இருக்கவேண்டும். இந்த முறையில் ரயில்வே பாலங்களையோ, மற்ற அமைப்புகளையோ தகர்ப்பதென்றால், அது மக்களின் கவனத்தைப் பெருமளவில் கவருமிடங்களிலும், அதே சமயத்

தில் மக்களுக்கு மரணத்தையோ, உடல் காயத்தையோ ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும். ரயில்வேக்களைத் தவிர, டெலிபோன் நிலையங்கள், மின்சார நிலையங்கள், இவைகளும் இலக்குகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன.

சொல்லப்போனால் 1975-ஜூலையிலேயே, அதாவது நான் பெர்னண்டஸைச் சந்திப்பதற்கு ஒரு மாதம் முன்பாகவேகூட மக்களுக்கு நன்ருகத் தெரியும் வகையில் ஏதாவது செய்ய வேண்டுமானல், வெடி மருந்தை உபயோகிக்க வேண்டும் என்று ஜார்ஜ் முடிவுசெய்து விட்டார். பெரிய அளவில் நாச வேலையில் ஈடுபடாத வரையில், வெடிமருந்தை உபயோகிப்பதற்குத் தனித்திறமை எதுவும் தேவையில்லை. பெரிய அளவு நாச வேலையில் ஈடுபடுவது எங்கள் எண்ணமுமல்ல. எதிர்ப்பை தெரிவிக்கும் வகையில், குறைந்த அளவு நஷ்டம் ஏற்படுத்தும் வகையில், அதை உபயோகிக்க வேண்டுமானல், இந்த வேலையில் சம்பந்தப்பட்டவர்களுக்கு எளிய முறையில் பயிற்சி கொடுத்தால் போதுமானது.

நாடு பூராவும் மலைப்பாறைகளை உடைக்க 'டைனமைட்' வெடி மருந்து உபயோகிக்கப்படுவதால், தேவைப்பட்ட அளவுக்கு 'டைனமைட்' ஸ்டாக்குகளைப் பெறுவது கடினமாக இருக்கவில்லை எங்களுக்கு வேண்டிய அளவுக்கு டைனமைட்டை, குஜராத்தில், பாறை உடைக்கும் கம்பெனிக்காக என்று ஒருவரிடமிருந்து வாங்கி விட்டோம். (பிறகு, இவர் இந்த வழக்கில் அப்ரூவராகி விட்டார்.) இது தவிர வேறு இடங்களிலிருந்தும் இன்னும் கொஞ்சம் வாங்கிச் சேர்த்துக் கொண்டோம். முதலில், பரோடாவில் வாங்கிய வெடி மருந்தை நாட்டின் வேறு பகுதிகளுக்குக் கொண்டு போனேம். பிறகு, இதற்கு அவசியமில்லாமல் போய்விட்டது. காரணம், எங்களுக்குத் தேவைப்பட்ட இடங்களிலெல்லாம் வெடிமருந்து சுலபமாகக் கிடைத்தது.

அதை உபயோகிக்க பெரிய பயிற்சிஒன்றும் தேவையில்லை. என்ருலும், அதை, எப்படி அதிகப் பயனேடும், ஆபத்து இல்லாமலும் உபயோகிக்க வேண்டும் என்று ஒரு தடவை

செய்து காண்பிக்க வேண்டியிருந்தது. முதலில் இவை பரோடாவிலும், பிறகு நாட்டின் மற்ற இடங்களிலும் நடத்த பட்டன. இதில் ஈடுபட வேண்டியவர்கள் பரோடாவுக்கு அழைத்து வரப்பட்டு, பயிற்சி அளிக்கப்பட்டனர் இந்தக் குறைந்த பயிற்சியே அவர்களுக்குப்போதுமானதாக இருந்தது. மிகக் குறைந்த அளவு சோதனைகள்தான் பிசுபிசுத்துப் போயின. வெற்றியின் அளவு கிட்டத்தட்ட 90 சதவிகிதம் என்று சொல்லலாம்.

ஜார்ஜ் தலைமறைவாக இருந்த 12 மாதங்களிலும், கைதான பிறகும், இந்தத் தலைமறைவு நடவடிக்கைகளைப் பற்றி வாதப்பிரதிவாதங்கள் நிறைய நடந்தன. இந்தப்பிரச்னை அவர் தலைவராக இருந்த சோஷலிஸ்ட் கட்சியையும் பிடித்துக் கொண்டது. அஹிம்சையில் நம்பிக்கை கொண்டவர்கள் பலர் சோஷலிஸ்ட் கட்சியில் இருந்தார்கள். இவர்களும் இந்த நடவடிக்கையை எதிர்த்தார்கள். ஆனால், அவர்கள் மிகச் சிலரே. வரை எதிர்த்தவர்களில் பலர் இதில் ஈடுபட தைரிய மும், திறமையுமில்லாதவர்கள். இந்திய அரசியலில் இந்த மாதிரி நடப்பது சகஜம். ஒரு சமயத்தில் இந்தப் பிரச்னை சோஷலிஸ்ட் கட்சிக்குள்ளேயே பிளவை ஏற்படுத்தி விடும் போல இருந்தது.

# 4. தலைமறைவு இயக்கம் உருவானது

தலைமறைவு இயக்கத்தின் முக்கியமான நோக்கங்கள் மூன்று—

*(1)* இந்திரா காந்திக்கு நாட்டில் பெரிய எதிர்ப்பு இருக்கிறது என்பதை மக்களிடையே விளம்பரப்படுத்தி, சர்வாதிகாரத்துக்கு எதிராக மக்களைக் கிளர்ந்து எழச் செய்வது. (2) அயல்நாடுகளிலிருக்கும் தனிப்பட்டோரோடும், நிறுவனங்களோடும் தொடர்பு கொண்டு, அவர்களுடைய தொடர்ந்த ஆதரவைப் பெற்று இந்திரா எதிர்ப்பைப் பலமாக்குவது. *(3)* இந்திரா காந்தியையும் அவரது அரசையும் முழுமூச்சோடு எதிர்த்துப் போராடி அவரைப் பணியச் செய்யவல்ல. பலமான ஒரு தலைமறைவு இயக்கம் இருந்து கொண்டு வருகிறது என்பதை மக்களுக்கு நிருபிக்கும் வகையில் போராட்டங்களை நடத்திக் காட்டுவது என்பதுதான். எனவே, அவசர காலத்தில் பெரும்பான்மையான மக்கள் நினைத்து வந்ததைப்போல, எங்கள் இயக்கம், பாலங்களையும் மற்ற இடங்களையும் வெடி வைத்துத் தகர்ப்பது மட்டுமே எங்கள் நோக்கமல்ல. இப்போதும்கூட இந்த மாதிரியான ஒரு கருத்துதான் மக்களிடையே இருந்து வருகிறது.

மக்களுக்கு விஷயங்களைத் தெரியப்படுத்துவது முக்கிய குறிக்கோள். நாங்கள் செய்யவிருந்த போராட்டங்களைவிட இது மிகவும் முக்கியமானது. அரசாங்கம் அவிழ்த்துவிட்டிருந்த பத்திரிகை, ரேடியோ தணிக்கைச் செய்திகளைச் சரியான முறையில் சந்தித்தாக வேண்டும். நாட்டுக்கு நன்மை செய்வதற்கே இந்திரா ஆட்சி செய்கிருர் என்ற பொய்யான ஒரு எண்ணத்தை முறியடித்து, அவர்கள் செய்ததாக கூறிக்

கொண்டு விளம்பரம் செய்தவைகளைப் பொய் என்று முழுமையாக நிரூபித்தாக வேண்டும். ஜார்ஜும், அவரோடு இருந்தவர்களும் இதைத் தங்கள் முதல் வேலையாக ஏற்றுக் கொண்டார்கள். ஆகவே, நாங்கள் ஆரம்பத்திலிருந்தே இந்தத் தலைமறைவு பத்திரிகைகளை நடத்துவதில் ஆர்வம் கொண்டிருந்தோம். அவை அச்சடிக்கப்பட்ட, அல்லது கையால் பிரதிகள் எடுக்கப்பட்ட செய்தித் தாள்களாக வெளிவந்தன. ஜர்ர்ஜ் கையெழுத்திட்ட கோரிக்கைகளும், தனிக் கடிதங்களும் ஒழுங்காக வெளிவந்தன. நிறையப் பேருக்கும்போய் சேர்ந்தன. நல்ல பலனும் கிடைத்தது.

இந்தப் பிரதிகள் நாடு பூராவும் ஆயிரத்துக்கும் மேற்பட்ட விலாசங்களுக்கு அனுப்பப்பட்டன. முக்கியமான நகரங்களில் குறிப்பிட்ட இடங்களிலிருந்து ரகசியமாக விநியோகிக்கப்பட்டன. இந்தக் கடிதங்கள் நம் நாட்டில் மட்டுமின்றி, அயல் நாட்டு மக்களிடையேயும் இந்த மாதிரி ஒரு செயல் தன்மை கொண்ட தலைமறைவு இயக்கம் நடந்து வருகிறது என்பதைத் தெளிவாக்கியது. ஜார்ஜின் முதல் கடிதம், அயல் நாட்டில் பலரால் படிக்கப்பட்டு, 1965—ஜூலை மூன்றாவது வாரத்தில் லண்டனிலிருந்து வெளியாகும் 'டைம்ஸ்' பத்திரிகையின் முதல் பக்கத்தில் வெளியாகியது. 'நாட்டு மக்கள் இந்திரா காந்தியின் சர்வாதிகார ஆட்சியை ஏற்றுக்கொண்டு விட்டார்கள்'—நாட்டில் சகஜ நிலை நிலவுகிறது' என்ற அரசின் பொய்ப் பிரசாரத்தை, பொய் என்று நிரூபித்து விட்டது. மாறாக தலைமறைவு இயக்க அறிக்கைகள் மக்கள் தங்களை ஒழுங்குபடுத்திக் கொண்டு தயார் நிலையில் இருக்கவும், அவ்வப்போது இதற்கான யோசனைகளையும் தந்தது. இந்த மாதிரியான எங்களுடைய முயற்சிக்கு வெற்றி கிடைத்து விட்டது என்பது 1975—ம் ஆண்டு இறுதியில் மக்களுடன் தொடர்பு கொள்வதும், அவர்களில் விருப்பமுள்ளவர்களை எங்கள் இயக்கத்தில் சேர்த்துக் கொள்வதும் சுலபமாகி விட்டதிலிருந்து புரிய வந்தது.

வெளிநாட்டில் கிடைக்கும் விளம்பரம் மிகவும் குறைந்த அளவில்தான் இருக்கும் என்பதும், அது எங்களுக்கு மனத்

தெம்பையும் உற்சாகத்தையும் கொடுப்பதற்கு மட்டுமே உதவும் என்பதும் எங்களுக்கு எப்போதுமே தெரிந்த விஷயம். இருந்தாலும் இதை நாங்கள் அசட்டை செய்யவில்லை. நாங்கள் அயல்நாடுகளுக்குச் செய்திகளை அனுப்புவதிலும், அங்குள்ளவர்களோடு தொடர்பு கொள்வதிலும், ஆதரவு திரட்டுவதிலும் நாங்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் உலக நாடுகளிலிருந்து எங்களுக்குக் கிடைத்த விளம்பரத்துக்கும், ஆதரவுக்கும் காரணங்களாகின. 1976-ம் ஆண்டின் ஆரம்பத்திலிருந்து சுப்ரமணியம் ஸ்வாமி அயல் நாட்டிலிருந்து இயங்க ஆரம்பித்த பிறகும்கூட, பெர்னாண்டஸ் தலைமையில் நடந்து வந்த இந்த இயக்கம், இந்தியாவில் உள்ள ஜனநாயகச் சக்திகளுக்கு ஆதரவு திரட்டுவதிலும், அயல்நாடுகளில் உள்ள இந்தியர்களிடமிருந்தும், பிரபல அயல்நாட்டுப் பிரமுகர்களிடமிருந்தும் இந்தியாவின் மீது கவலையும், அக்கறையும் கொண்ட ஸ்தாபனங்களிடமிருந்து ஆதரவு பெறுவதிலும், நல்ல முறையில் செயல்பட்டது.

இத் தலைமறைவு இயக்கத்தின் பிரசுரங்கள் குறிப்பிட்ட காலத்திலோ, ஒழுங்காகவோ வெளி வரமுடியாது. வெளியிட்டவைகளையும் சரியான முறையில் விநியோகிக்க முடியாது. என்றாலும்,எங்கள் வெளியீடுகள் பரவலாக வாசிக்கப்பட்டன. அவை சிறைச்சாலைகளுக்குள்ளேயும் சென்றன. நவம்பரில் 'க்ருசேடர்' என்ற பெயரில், மாதமிருமுறை பத்திரிகை ஒன்றை கொண்டுவர ஏற்பாடுகள் செய்தோம். எல்லா மாநிலங்களிலும் நிருபர்களும், செய்திகளைத் தொகுத்து வெளியிட ஒரு ஆசிரியர் குழுவும் தேட வேண்டியிருந்தது. இதைத் தவிர பத்திரிகையை அச்சிட நம்பகமான ஒரு அச்சுக்கூடம் கிடைப்பது பெரிய பிரச்னையாகிவிட்டது. இந்த மாதிரியான ஒரு தலைமறைவு இயக்க நடவடிக்கைகளில் ஏற்படும் இன்னல்கள், நம் நாட்டைப் போன்ற, பெரிய அளவில் உள்ள ஒரு நாட்டில் செய்திகளைப் பரவச் செய்வது, இவைகளை யோசித்துப் பார்த்தால், சரியான முறையிலும், துரிதமாகவும் நாங்கள் இதைச் செய்ய முடியாமல் போனது ஏன் என்பது விளங்கும்.

அப்படியிருந்தும் நவம்பரிலிருந்து ஜனவரிக்குள் இந்தப் பத்திரிகையின் மூன்று இதழ்களை வெளிக் கொண்டு வந்தோம். அந்தப் பத்திரிகையை எங்கே அச்சடித்தோம், எப்படி வெளியிட்டோம் என்பதையெல்லாம் இப்போது வெளியே சொல்வது கூட புத்திசாலித்தனமாகாது. ஆசிரியர் குழுவைப் பொறுத்த மட்டில், நான் எல்லா வேலைகளையும் டெல்லியிலிருந்தபடி கவனித்துக் கொண்டேன். ஜார்ஜ் பெர்னாண்டஸ், அகில இந்திய ரயில்வே ஊழியர்கள் யூனியனின் தலைவராக இருந்த தால் பத்திரிகைகளை விநியோகிக்க வசதியாக இருந்தது. இந்தப் பத்திரிகையை விநியோகம் செய்வது மட்டுமின்றி, நாடு பூராவும் தொடர்பு கொள்வதில் இவர்கள் பெரிதும் உதவி செய்தார்கள். நாட்டின் சில பாகங்களில் நிலவிய அரசியல் நிலைகளின் காரணமாக, இந்தப் பத்திரிகை திடீரென்று 1976 ஜனவரியில் நின்றுவிட்டது. இந்த இயக்கத்தில் சம்பந்தப்பட்ட பலரையும், என்னையும் 1976 ஜனவரி இறுதியில் கைதுசெய்து விட்ட பிறகு, பத்திரிகையைத் திரும்ப ஆரம்பிக்கும் வாய்ப்புகள் இல்லாமலேயே போய்விட்டன நாங்கள் கைது செய்யப்பட்ட போதும் உள் நாட்டிலும்,வெளி நாட்டிலும் எங்களுக்கு ஏற்பட்டிருந்த தொடர்புகள் விட்டுப் போய் விடவில்லை.

தலைமறைவு இயக்கங்களை ஆரம்பித்து நடத்துவது சிரமம். ரகசியமாகவும் இருக்க வேண்டும்; அதே சமயம் பலனுள்ள தாகவும் இருக்க வேண்டும். 'அரசாங்கத்துக்கு இடைஞ்சல் தருவார்கள்' என்று சந்தேகப்பட்ட அனைவரையுமே பெருமள வில் கைது செய்தபிறகு இந்தச் சங்கடங்கள் அதிகமாகி விட்டன. ஏதோ ஒரு காரணத்தால் அரசாங்கத்தின் வலையி லிருந்து தப்பியவர்கள்கூட என்ன நடக்குமோ என்ற பயத்தில் இந்த இயக்கத்தில் சேரவில்லை.

ஜார்ஜ் பெர்னாண்டஸைத் தேடிக்கண்டு பிடிக்க எனக்கு இரண்டு மாதங்கள் ஆனது போலவே, சிறைக்குத் தப்பிய மற்றவர்களோடு தொடர்பு கொண்டு இயக்கத்தில் மீண்டும் சேர்க்க நாட்கள் பிடித்தன. நாங்கள் எப்போதும் நேரடி

யாகவேதான் தொடர்பு கொள்வோம். இதற்கு நேரமும் பிடிக்கும். செலவும் அதிகமாகும். ரகசியத்தைக் காப்பாற்று வதிலும், செய்திகளைக் கொண்டு வருபவர்கள் உண்மையான வர்களா என்று சரி பார்ப்பதிலும், இன்னும் யார், யார் இயக்கத்தில் சேருவார்கள் என்று கண்டு பிடிப்பதிலும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டி இருப்பதால், இந்தச் சிரமம் இன்னமும் அதிகமாகியது. இதில் இன்னொரு ஆபத்தும் இருக் கிறது. எங்கள் இயக்கத்தில் சேருபவர்கள் கொஞ்ச நாட்களி லேயே இந்திரா ஆதரவாளர்களாகவும் மாறி, எங்களைப் பற்றியே வேவு சொல்லி விடுவார்கள் என்ற பயமும் இருந்தது. பல சந்தர்ப்பங்களில் நாங்கள் சந்தித்த பலர், ஜார்ஜ் பர்னாண்டஸை தாங்களே நேரில் சந்தித்துப் பேச வேண்டும் என்று சொல்லுவார்கள். இதில் பெர்னாண்ட ஸூக்குத்தான் ஆபத்து அதிகம். அவரை நாடு பூராவும் வலை போட்டுத் தேடி வந்தார்கள். ஜார்ஜ் நிறையப் பிரயாணம் செய்தார். இருந்தாலும், எங்கள் இயக்கத்தில் சேர விரும்பிய எல்லோரையுமே அவரால் சந்திக்க இயலவில்லை. இவர்களைச் சேர்த்துக் கொள்வதில் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டியிருந்தது. அதிகப்படியாக ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருந்தால் காரியங்கள் தாமதப்பட்டுவிடும். அதே போல நிறையப் பேர்களையும் இயக்கத்தில் சேர்க்க முடி யாமல் போய் விடும். இருந்தாலும் கொஞ்சம் 'ரிஸ்க்' எடுக்கத் தான் செய்தோம். ஆரம்ப காலத்தில் இப்படி 'ரிஸ்க்' எடுத்த தால்தான், போலீஸார் எப்படியோ கண்டுபிடித்து, ஜார்ஜ் உள்பட பலரைக் கைது செய்து விட்டார்கள். ஜார்ஜ் எவ்வளவோ ஜாக்கிரதையாகத்தான் இருந்தார். சங்கிலித் தொடர் போன்ற இந்தத் தொடர்புப் பேர்வழிகள், பெர் னாண்டஸ் உடனோ அல்லது மற்ற தலைவர்களுடனோ தொடர்பு ஏற்படாதபடி பார்த்துக் கொண்டார்கள். இருந்தாலும் சில சமயங்களில் எதிர்பாராத சில ஆபத்துக்களை மேற் கொண்டு தான் ஆக வேண்டியது வந்தது. ஒரு தலை மறைவு இயக்கத்தை ஏற்படுத்துவதற்கான எல்லா ஜாக்கிரதையான முறைகளும் கைப்பற்றப்பட வேண்டுமென்றால், அவசரநிலை

வந்த மூன்று மாதத்தில் ஆரம்பிக்கப்பட்ட இந்த இயக்கம், இயங்குவதற்கு ஒருவருட காலமாவது காத்திருக்கும்படி இருந்திருக்கும். ஏற்பட்ட நிலைமைகள் அம்மாதிரி அவசர நடவடிக்கைகளை எடுக்குமாறு வற்புறுத்தின. தவிர்க்கக் கூடிய, ஆபத்தான நடவடிக்கைகளைக் கூட துணிந்து மேற்கொள்ளும்படி ஆகிவிட்டது. பெர்னண்டஸ் தனது முதல் அகில இந்திய பயணத்தை ஒரிஸ்ஸாவில் உள்ள கோபால்பூரில் 1975–ஜூன் 26அன்று ஆரம்பித்து, கல்கத்தா, பாட்னு, உ.பி, யின் சில பகுதிகள், மத்தியப்பிரதேஷ், ராஜஸ்தான் இங்கெல்லாம் போய் விட்டு, குஜராத்தில உள்ள அகமதாபாத்திற்கும். பரோடாவுக்கும் போனுர். இந்தப் பயணத்தின்போது நம்பகரமாக உள்ளவர்களோடும், இயக்கத்துக்கு சேர்க்க முடிந்த மற்றவர்களோடும் தொடர்பு கொண்டார். இவரது நடவடிக்கைகளை ரகசியப் போலீஸார் தொடர்ந்திருக்க முடியும். ஆனுல் அந்தச் சமயத்தில் எல்லா மாநில போலீஸுக்கும் செய்தி அனுப்பப் பட்டிருந்ததே தவிர, அவர்களுக்குள் ஒரு கூட்டு நடவடிக்கை எதுவுமில்லை.

பம்பாயில் அவருக்கு நிறையத் தொடர்புகள் கிடைத்தன ஆனுல். பம்பாயில் அவர் நிறையப் பேருக்கு நன்கு 'தெரிந்தவராதலால் அங்கு ஆபத்தும் அதிகம். அவர் தலைமறைவாக இருந்த நாட்களில் இரண்டே இரண்டு தடவைதான் பம்பாய்க்கு வந்திருக்கிருர். ஆகஸ்டு மூன்ருவது வாரத்தில் அவர் பரோடாவிலிருந்து ஹைதராபாத், பெங்களூர் சென்னை இங்கெல்லாம் வந்தார். தமிழ்நாடும் பொதுவாகப் பாதுகாப்பான பிரதேசமாகக் கருதப்பட்டது. இருந்தாலும் அவரை தமிழ் நாட்டிலிருந்து ஆந்திராவுக்கோ, கர்னுடகத்துக்கோ கடத்திக் கொண்டு போய் விட்டால், அந்த மாநிலங்களின் அரசுகளிடமிருந்து அவருக்கு பாதுகாப்பு கிடையாது. ஆகவே மற்ற மாநிலங்களைப் போலவே தமிழ்நாட்டிலும் அவரது நடமாட்டம் ரகசியமாகவே இருக்க வேண்டியிருந்தது.

தென்னுட்டிலும் எங்களுக்கு மூக்கிய தொடர்பாக இருந்தவர்கள் பெங்களூரில் சிநேகலதா ரெட்டியும் அவரது

குடும்பமும், சென்னையில் அப்பாராவும் அவரது மகள் அமுக்தாவும்.

நான் இதுவரை அறிந்த, அறியப்போகும் பெண்களி லேயே சினேகா மிகவும் அன்பும், உண்மையும், நம்பிக்கையும் கொண்டவர். ஜனநாயகம், சோஷலிஸம் இவற்றின் மீது அழி யாத நம்பிக்கை கொண்டவர். அவருக்கு மிகவும் பிடித்தமான டாக்டர் லோஹியாவைப் போலவே ஆழமான மனிதாபி மானம் கொண்டவர். அவருக்குப் பிடித்தமான விஷயங்கள் பல—நாடகமேடை, கவிதை போன்ற பொதுவாக லலித கலைகள். இவர் கணவர் பட்டாபி, சாந்தமான நிதானமான மனிதர். ஒரு தெலுங்கு கவிஞர், பிரபல படத் தயாரிப்பாளர். சினேகாவே நடித்து, இவர் தயாரித்த 'சம்ஸ்காரா' படம் உலகப் புகழ் பெற்றது. இவர்களது பெண் நந்தனு குழந்தைப் பருவத்திலேயே தன் தாயைப் போலவே கவிதை எழுதுவதில் ஆர்வம் காட்டினர். இப்பொழுது அவர் திறமையோடு சுறு சுறுப்பாக சினிமா உலகில் ஈடுபட்டு வருகிறார்.

பட்டாபி தம்பதிகள் எப்போதுமே, அரசியலில் ஈடுபட் டது கிடையாது. ஆனால், சோஷலிஸக் கொள்கைகளில் நம்பிக்கை கொண்டவர்கள் அவர்களை எனக்கு 30 ஆண்டு களாகத் தெரியும். 50—ம் ஆண்டுவாக்கில் ஜார்ஜ் ஒரு பிரபல சோஷலிஸ்ட் ஆனதிலிருந்தே அவருக்கு அவர்களைத் தெரியும்.

1976 ஜனவரி 26 அன்றும், அதற்குப் பிறகும் நிகழ்ந்தவை பற்றி பட்டாபி தம்பதிகள் அதிர்ச்சி அடைந்ததும், அதை விட என்ன நடந்தாலும் சரி, இந்திரா காந்தியை எதிர்த்தே தீருவது என்று முழு மூச்சோடு ஈடுபட்டதும் ஆச்சரியமாக இருந்தன. ஆகஸ்ட் 75-ல். முதல் தடவையாக ஜார்ஜ் முதன் முதலாகப் பெங்களூர் போனபோது இவர்களைத்தான் சந்தித் தார். சோஷலிஸ்ட் கட்சியின் முன்னாள் காரியதரிசி வெங்கட் ராமோடு கூட, இவர்களும் பெங்களூரில் ஜார்ஜின் பிரதான தலைமறைவு தொடர்புகளாக இருந்தார்கள். அக்டோபரில் வெங்கட்ராம் கைதான பிறகு, பெங்களூரில் பிரதானதொடர் பாக இருந்து தென்னாட்டில் நடப்பவைகளை மேற்பார்வை

பார்ப்பது, எங்களுக்குத் தெரியப்படுத்துவது, இந்த எல்லா பொறுப்புகளுமே சினேகாவிடம் ஒப்படைக்கப்பட்டன. இந்தியாவிலும் அயல்நாடுகளிலும் நடைபெறும் எங்கள் நடவடிக்கைகளும் அவருக்குத் தெரியப்படுத்தப்பட்டன. தென்னிந்தியாவில் நடத்தப்பட்ட எங்களுடைய எல்லா ரகசியக் கூட்டங்களிலும் சினேகலதா கலந்து கொண்டார். எங்களுடைய எல்லா திட்டங்களும் அவருக்குத் தெரியும். அவருடைய பெண் நந்தனா கர்னாடகாவில் இளைஞர்களை ஒன்று திரட்டிய சில நிகழ்ச்சிகளுக்குக் காரணமாக இருந்தார்.

1976–மே மாதம் 1–ஆம் தேதி அன்று போலீஸ் சினேகலதாவைப் பிடித்தபோது, அவர்களுக்கு இந்த வேலைகளில் சினேகாவுக்கு இருந்த தீவிர ஈடுபாட்டைப் பற்றித் தெரியுமே தவிர, அவரது கணவர் பட்டாபியையோ, நந்தனாவையோ சந்தேகப்படவில்லை. போலீஸின் கட்டுப்பாட்டில் கூட சினேகா, ரொம்பவும் தைரியமாகவும், விட்டுக் கொடுக்காமலும் இருந்தார். அவரிடமிருந்து எந்தவிதச் செய்தியும் போலீஸுக்குக் கிடைக்கவில்லை. கிடைத்திருந்தால், அதன் மூலமாக நூற்றுக்கணக்கானவர்களைக் கண்டு பிடித்திருப்பார்கள். இதன் காரணமாகத்தான் போலீஸ் அவரைச் சித்திரவதைக்கு உள்ளாக்கி, கடைசியில் அவருடைய மரணத்துக்கும் காரணமாக இருந்திருக்கிறார்கள். தன் வாழ்நாள் முழுவதும் அவர் பெருந்தன்மை, அசாதாரண தைரியம், விசுவாசம் இவற்றைப் பரிபூரணமாகக் கொண்டிருந்தார். இவருடைய அன்பு, பாசம். பெருந்தன்மை இவற்றை அனுபவித்த பட்டாபி, மகள் நந்தனா, மகன் கொனாரக் இவர்களையும், ஆயிரக்கணக்கான நண்பர்களையும் தவிக்க விட்டு விட்டு. சினேகலதா, ஒரு தியாகியாக இறந்து போனார்.

எம். எஸ். அப்பாராவ் 1942–ல் பிரபல மாணவர் தலைவர். நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, சோஷலிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். கட்சியில் நல்ல ஈடுபாடு கொண்டிருந்தாலும் அந்தஸ்துக்கோ, பதவிக்கோ அவர் ஆசைப்பட்டது கிடையாது. எப்போதும் விசுவாசமும், தாராள மனப்பான்மையும்,

நம்பகரமாக பிறருக்கு உதவும் நோக்கமும், படோடாபமும் இல்லாத மிகச் சில நல்ல மனிதர்களில் அவரும் ஒருவர். நிச்சயமாக இவரை நம்பித் தொடர்பு கொள்ளலாம். உதவு வார். ஆபத்து நிலை வந்தபோது தைரியத்தோடும், திடசித்தத் தோடும் முன் வந்தார். இதைத் தெரிந்த ஜாாஜ் ஆகஸ்ட் 76–ல் சென்னைக்கு வந்தபோது நேராக அப்பாராவ்வீட்டுக்குப் போனுர், அதிலிருந்து தென்னுட்டில் எங்களுடைய நடவடிக் கைகளுக்கெல்லாம் ஒரு பெரிய தூண் போல் நின்று உதவி ஞர். ஓடி வந்தவர்களுக்குப் புகலிடம் கொடுத்தார். எங்கள் வேலைகளை வெற்றிகரமாகச் செய்து முடிக்க பல தொடர்பு களை ஏற்படுத்திக் கொடுத்தார். அவருக்குக் கொடுக்கப்பட்ட எல்லா வேலைகளையும் ஏற்று முடித்தார், அவரது மகள் அமுக்தா, தந்தையைப போலவே தைரியசாலி. இருவரும் தைரியம் மிக்க பல இளைஞர்களை ஒன்று திரட்டி, இந்தத் தலை மறைவு வேலைகளில் ஈடுபடுத்திஞர்கள் இவர்கள் இருவ ருமே கைது செய்யப்பட்டனர். அபபாராவ் ஜனவரி— 77வரை சிறையில் வைக்கப்பட்டிருந்தார். ஆனுல், அவர் ஏன் எங்க ளோடு சேர்த்துக் குற்றம் சாட்டப்படவில்லை என்பது மர்ம மாகவே இருக்கிறது.

# 5. மாறு வேடத்தில் ஜார்ஜ்

ஜார்ஜ் பெர்னுண்டஸ் கோபால்பூரில் இருந்தபோது, 26—6—75 அன்றே கைதாகியிருக்க வேண்டும், தப்பிவிட்டார். அன்று முதல் அவர் தாடிவளர்க்க ஆரம்பித்தார். அவர் அதிர்ஷ்டக்காரர். தாடி வேகமாக வளர்ந்து இரண்டே மாதங்களில் அவர்முகத்தை அடையாளம் தெரியாமல் அடித்து விட்டது. போதாதற்கு நரை முடிகள் வேறு அதில் கலந்து, அவர் வயதுக்குமீறிய வயதான தோற்றத்தைத் தந்து விட்டது. மூக்குக் கண்ணுடியையும் மாற்றி விட்டார். பெரிய உலோக பிரேம் போட்ட கண்ணுடியை அணிந்து கொள்ள ஆரம்பித்தார். ஆகஸ்ட் 75–ல் அவர் தப்பிய இரண்டு மாதத்துக்குள் நான் அவரைச் சந்தித்தபோது எனக்கே அடையாளம் புரியவில்லை. சந்திக்கப் போகிறேம் என்று முன்பாகவே தெரியும். இல்லாவிட்டால் அடையாளமே தெரிந்திருக்காது.

அவருடைய புதுத் தோற்றம், அவருடன் கூடவே நெருங்கிப் பழகியவர்களுக்குக்கூட, அவர் அருகில் உட்கார்ந்திருந்தபோதும் கண்டு பிடிக்க முடியாதபடி இருந்தது. நவம்பர் மாதம் டெல்லியில் எங்களிடம் அனுதாபம் கொண்ட ஒரு பெரிய வக்கீலோடு ஜார்ஜை சந்திக்க ஏற்பாடு செய்தேன். அவருடைய ஜுனியர் வக்கீல் வீட்டில் இந்த சந்திப்பு நடப்பதாக இருந்தது. அது ரகசியச் சந்திப்பு என்றும், அவசரநிலை எதிர்ப்பு சம்பந்தமானது என்று மட்டுமே அவருக்குத் தெரியும். சந்திப்பு முடியும் சமயம் அவர் தன்னை சோஷலிஸ்ட் கட்சி உறுப்பினர் என்றும், பெர்னுண்டஸை நன்கு தெரியும் என்றும் அறிமுகப்படுத்திக் கொண்டார். இவ்வளவையும் அவர்

பெர்னுண்ட்ஸ் அருகில் உட்கார்ந்து கொண்டே சொன்னர் எனக்கு ஏற்பட்ட ஆச்சரியத்தில் நானே ஜார்ஜைக் காட்டிக் கொடுத்து விடுவேனே என்று பயந்துபோனேன்.

ஆகஸ்ட் மாதத்திலேயே அவருடைய தாடி, சீக்கியரின் தாடி போல நீளமாக வளர்ந்து விட்டது. நவம்பர் மாதம் அவர் சீக்கியர் மாதிரி சூட்போட்டு உடை அணிந்த போது, அவர் இருக்கும் ஊர்வரை வந்து தேடியபோதும் போலீஸுக்கு அவரை அடையாளம் காண முடியவில்லை. சீக்கியர் போல உடை அணிவது சுலபமாக இருந்தது. ஆனல் தலைப்பாகை மட்டும் கஷ்டமாக இருந்தது. அவருக்கென்று ஒரு தலைப்பாகை தயாரித்து, அதை உருக்குலையாமல் ஜாக்கிரதையாக வைத் திருந்தோம். அடிக்கடி சீக்கிய நண்பர்களிடம் போய், 'ஒரு நாடகத்துக்கு சீக்கிய தலைப்பாகை வேண்டும்' என்று கேட்டுப் பெறமுடியவில்லை. அதற்கென்று ஒரு பெட்டியைத் தயார் செய்து வைத்திருந்தோம்.

சீக்கியர் வேடத்தில், அவர் ஊர் விட்டு ஊர் போய்க் கொண்டிருந்தார். யாரும் சந்தேகப்படாமல் இருக்க, அவர் எப்போதும் ஒரு பெண்ணோடு பயணம் செய்வார். அவர் தங்கு மிடத்தில் வேஷம் அணிந்து கொள்வதோ கலைப்பதோ கிடையாது. இது கேட்பதற்குச் சுலபமாக இருந்தாலும், பல கஷ்டங்கள் இருந்தன. உதாரணமாக அவருடைய தலைப் பாகை, சீப்பு, தாடிவலை, கங்கணம் இவற்றை எல்லாம் எங்கே வைப்பது? அவரோடு செல்பவரைத் தவிர, வேறு யாருக்கும் அவர் எப்படிப் பிரயாணம் செய்கிருர் என்பது தெரியாது. அதனல்தான போலீஸுக்கு கடைசிவரையில் அந்த உடையில் எப்படி பிரயாணம் செய்தார் என்பது தெரியாமலிருந்தது. அவர் சுற்றி வளைத்துத்தான் பிரயாணம் செய்வார். கூடிய வரையில் விமானத்தில் பிரயாணம் செய்வதோ, ஒரு இடத்தி லிருந்து மற்றொரு இடத்திற்கு நேர்வழியில் காரில் செல்வதோ கிடையாது.

பிரயாணம் செய்யும்போது மட்டும்தான் ஜார்ஜ் சீக்கியர். நகருக்குள் போகும்போது லுங்கி அணிந்து, ஒரு சாமியார்

போல உவவீ வந்தார். அப்போது அவர் தாடியை நடுவில் வகிடு எடுத்ததுபோல இரண்டாகப் பிரித்து விட்டுக் கொள்வார். சீக்கியர் வேஷம் சிலருக்குத்தான் தெரியும். வெளி யூர்களுக்குப் போகும்போது, விமான நிலையத்தில் அவருக்கு ரொம்பத் தெரிந்தவர் ஒருவர், அவுரை வரவேற்று அழைத்துப் போய், மறைவான ஒரு இடத்தில் ஜார்ஜின் சீக்கிய உடைகளைக் களைந்துவிட்டு, சாமியார் உடையில் குர்தா, லுங்கிகளை அணியச்செய்வார். சீக்கிய உடைக்காக தலைமுடிக்கும், தாடிக் கும் போடப்படும் பாகையை, சாது வேஷம் போடும் முன் கழுவிவிட வேண்டும். இந்த வேஷ மாற்றங்கள் கடைசி வரையில் ரகசியமாகக் காப்பாற்றப்பட்டன. போலீஸ் ஒரு சாதுவை, சாமியாரை, பொதுவாகத் தாடி வைத்த ஒரு ஆசாமியைத் தேடிக்கொண்டிருந்தார்கள். இம்மாதிரி ரயிலில், விமானத்தில் வந்தவர்கள் போலீஸாரால் கண்காணிக்கப் பட்டனர். விசாரிக்கப்பட்டனர். ஆனால், ஒரு தடவை கூட 'சீக்கியர்' ஜார்ஜை யாருமே சந்தேகப்படவே இல்லை.

இது பத்திரமாக இருந்தாலும், சமயங்களில் தொந்தர வாக இருந்தது. ஒரு தடவை சென்னையில் இருந்தபோது ஒரு ஸ்டீல் வளையலும், தாடி பசையையும் வாங்க வேண்டிய தாயிற்று. இரண்டாவது விஷயம் சென்னையில் லேசில் கிடைக்கவில்லை. ஒரு தடவையாவது ஜார்ஜ் பிடிக்கப்பட்டு விடுவார் என்ற ஆபத்து வரவேயில்லை. அந்த அளவுக்கு எங்கள் ஒற்றர் சர்வீஸ் சாமர்த்தியமாக இருந்தது. பெங்களூரில் ஒரு சமயம் தம் நண்பருடைய கம்பெனியில் விருந்தினர் விடுதியில் தங்கி இருந்தார். காலை உணவு சாப்பிட்டுக் கொண்டிருந்த போது கூட்டமாகப் பலர் உள்ளே வந்து, வீட்டைச் சோதனை போட்டனர். தலைகீழாகக் கொட்டி தேடிப் பார்த்தார்கள். இவ்வளவு நடக்கும்போதும் ஜார்ஜ் கண்களைக்கூட இமைக் காமல் டோஸ்ட் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். அவரைப் பார்க்க வந்த நண்பர்கள், வெளியே ஜீப்பும், ட்ரக்கும் நிற்பதைப் பார்த்து ஓடி விட்டார்கள். கடைசியில், அது வருமான வரி இலாகாவினர் நடத்திய சோதனை என்று

தெரிந்தது. போட்டி கம்பெனி கொடுத்த தகவலின் பேரில் அவர்கள் வந்திருந் தனர்.

கவலைப் படும்படியான, பயப்படும் சந்தர்ப்பங்களும் வந்தன. கல்கத்தாவில் பாலம் விமான நிலையத்தில் அவரை வரவேற்கப் போயிருந்தேன். இருவரும் பார்த்துக் கொண்ட பிறகு நான் ஒன்றும் பேசாமல் கார் பார்க்கிங் இடத்தில் போய் காத்திருப்பது என்று ஏற்பாடு. நாங்கள் காரில் கிளம்பும்போது அவர் பின்னால் வந்த ஒருவர், இன்னொரு காரில் எங்கள் காரைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தார். வசந்த் விகார் வரை அப்படி வந்தார். ஜார்ஜை காரிலிருந்து குதிக்கச் சொல்லலாமா என்று நான் நினைத்துக் கொண்டிருக்கும் போதே, பின்னால் வந்த கார் மோதிபாக் பக்கம் திரும்பி விட்டது. 'ஸ்டியரிங் வீலை'ப் பிடித்திருந்த என் கைகளில் வியர்த்து விட்டது.

ரொம்பவும் திகிலடையச் செய்த நிகழ்ச்சி நடந்தது. ஜார்ஜ், நான், சினேகா, பட்டாபி இவர்களோடு அனந்தப்பூரி லிருந்து பெங்களூருக்குத் திரும்ப வந்தபோது நிகழ்ந்தது. தென்னிந்தியாவில் எங்கள் இயக்கத்துக்கு ஆதரவு தேட சஞ்சீவ ரெட்டியைச் சந்திக்க நாங்கள் அனந்தப்பூர் போயிருந்தோம்.

1969-ல் ஜனாதிபதி தேர்தலிலும், 1971-ல் லோக் சபா தேர்தலிலும் தோற்ற பிறகு சஞ்சீவ ரெட்டி அரசியலில் ஈடு படுவதை விட்டு விட்டு, முழு நேரமும் விவசாயத்தில் ஈடுபட் டார். ஆனால், அவசரநிலை அறிவிக்கப்பட்டபிறகு, திரும்பவும் முழு மூச்சோடு அரசியலில் குதித்தார். மற்ற அரசியல்வாதி களோடு இவரும் இந்தியாவில் சுற்றுப் பயணம் செய்து, மக்க ளிடம் எதிர்ப்பு உணர்ச்சியை உண்டாக்க முயன்றார். ஆனால், அவர் அனுமதிக்கப்படவில்லை. அவர் கூட்டங்களை நடத்த அனுமதிக்காமல், அவர் செயலாக்கத்தைத் தடுத்து விட்டனர். ஒவ்வொரு தடவையும் அவர் போலீஸ் பாதுகாப்போடு தன் வீட்டுக்குத் திருப்பி அனுப்பப்பட்டார். அவரைக் கைது செய்ய

வில்லை. மாருக அவரது கூட்டங்களை ஏற்பாடு செய்தவர்களைக் காவலில் வைத்தார்கள்.

அக்டோபர்–75–ல் நாங்கள் அவரைச் சந்திக்கப் போன போது, ஏமாற்றமடைந்த நிலையில் மிகவும் கோபத்தோடு இருந்தார். தென்னிந்தியாவில் எதிர்ப்பு இயக்கத்தை நடத்திச் செல்ல தகுந்தவரும், பிறரால் ஒப்புக் கொள்ளக்கூடியவரும், சஞ்சீவ ரெட்டிதான் என்று ஜார்ஜ் கருதினர். எல்லா முன் ஜாக்கிரதை நடவடிக்கைகளையும் எடுத்தோம். பட்டாபியை யும், சினேகாவையும், என்னையும் யாரும் சந்தேகப்படப் போவதில்லை. பெங்களூருக்கும் அனந்தப்பூருக்கு மிடையே சாலைப் போக்குவரத்து நெரிசல் அதிகம். அனந்தப்பூருக்குப் போனதும் நானும், பட்டாபியும், ஜார்ஜைச் சந்திக்க சஞ்சீவ ரெட்டி சம்மதிக்கிருரா என்று தெரிந்து வர சஞ்சீவ ரெட்டியைப் பார்க்கப் போனேம். தனக்கு இஷ்டமென்றும் அரை மணி நேரத்தில் ஜார்ஜ் தங்கியிருந்த இடத்துக்கு எங்களோடு வருவதாகவும் கூறினர். தான் போலீஸ் கண் காணிப்பில் அப்போது இல்லை என்றும் கூறினர். எங்களை யாரும் பின் தொடரவும் இல்லை. சஞ்சீவ ரெட்டி–ஜார்ஜ் சந்திப்பு எந்தவிதச் சலசலப்புமின்றி நடைபெற்றது. இருந் தாலும், நான் வராந்தாவில் கவலையோடு நின்றபடி, தெருவில் ஏற்படும் ஒவ்வொரு அசைவையும் உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். எதிர்பார்த்தபடியே சஞ்சீவ ரெட்டி தலைமையை ஏற்று நடத்துவதாகச் சொல்லி, சென்னைக்கு வருவதாகவும் உறுதி கூறினர். சென்னையில் தென்னட்டில் உள்ள தலைவர்களைச் சந்திப்பதாக ஏற்பாடாகி இருந்தது. ஆனல், கருணநிதியின் உறுதியற்ற போக்கினல் இந்தக் கூட்டம் நடைபெறவில்லை.

பெங்களூருக்குக் காரில் திரும்பும்போது எதுவும் நடக்க வில்லை. ஆனல், பெங்களூர் புறப்பகுதியில் சாலையில் கார்கள் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தன. நிறையப் போலீஸார் ஒவ்வொரு காரையும் சோதனை போட்டு, அதில் இருந்தவர் களையும் விசாரித்துக் கொண்டிருந்தார்கள். பொறியில்

நாமாகவே சிக்கி விட்டோம் என்று நினைத்தோம். ஜார்ஜை அனந்தப்பூரில் பார்த்து விட்டார்களா? அல்லது சஞ்சீவரெட்டி எங்களைச் சந்தித்தது தெரிந்து விட்டதா? அதனால் சோதனை போடலாம் என்று நினைத்தார்களா? எங்களுடைய யோசனையும், திட்டங்களும் எப்படியிருந்தாலும், சுற்றிலும் போலீஸ் இருந்தபடியால் தப்புவதற்கு வழி புலப்படவில்லை. பொறுமையோடு என்னென்ன பதில்கள் சொல்ல வேண்டும் என்று யோசித்தோம். நான், பட்டாபி, சினேகா, இந்த மூவரும் அனந்தப்பூர் போக நிறைய காரணம் இருக்கிறது. அந்த ஊரில் நிறைய 'ரெட்டிகள்' இருந்தார்கள். அதில் கிட்டத்தட்ட பாதிப்பேர் எங்களுக்குச் சொந்தக்காரர்கள். ஜார்ஜை, எங்கள் 'குடும்ப குரு' என்று சொல்லி விடலாமா? தப்ப முடியுமா? சாமியார் உடையில்தான் அவர்கள் ஜார்ஜை எதிர்பார்த்துத் தேடிக் கொண்டிருப்பார்கள். என்ன சொல்லித் தப்ப முடியும்?

எங்களுக்கு வியர்த்து விட்டது. நிமிஷங்கள் நகர்ந்தன. இப்போது நாங்கள் எதிர்பாராத உச்ச கட்டம் வந்தது. எங்கள் காரை லேசாக ஒரு பார்வை பார்த்து விட்டு கையை ஆட்டி காரை நகர்த்தச் சொல்லி விட்டார் போலீஸ் இன்ஸ்பெக்டர். அவர்கள் யாரோ கள்ளக்கடத்தல் கார்களையோ, அல்லது நன்கு தெரிந்த குற்றவாளி ஒருவரையோ தேடிக் கொண்டிருந்தார்கள் போலிருக்கிறது. ஜார்ஜ் யார் என்று தெரியாமலேயே பலர், ஜார்ஜுக்கு தங்கள் வீட்டில் இடம் கொடுத்தார்கள். அந்த வீட்டுக்கு வந்தவர்களும், வேலைக்காரர்களும் அவரை ஒரு சன்னியாசி என்று நம்பினார்கள். சிலர், இவரும் ஒரு போலி சாமியார்தான் என்றார்கள். இக்கட்டான சூழ்நிலைகளும் ஏற்பட்டது உண்டு.

சென்னையில் என் நண்பர் ஒருவரிடம் நடமாட்டமில்லாத பகுதியில் அவருக்கு இருந்த விருந்தினர் இல்லத்தைத் தருமாறு கேட்டிருந்தேன். நேரத்தை மகிழ்ச்சியோடு கழிக்கவே இம்மாதிரி இல்லங்கள் இருந்ததால், அந்த நண்பர், நான் என்னோடு ஒரு பெண்ணை அழைத்து வந்து ஜாலியாக இருக்கப் போகி

றேன் என்று நினைத்தாராம். அந்த நல்ல மனிதர் ஒரு நாள் நான் சௌகர்யமாக இருக்கிறேனா என்று பார்க்க வந்தபோது, ஒரு அழகான பெண்மணி படுக்கை அறைக்குள் பரபரப்போடு ஓடியதைப் பார்த்தார். ஜார்ஜ் ஒரு ஊரிலிருந்து இன்னொரு ஊருக்குப் போகும்போது, இயற்கையாகத் தோன்றுவதற்காக இந்தப் பெண் கூடவே நண்பராக வருவது வழக்கம் என்பது அவருக்குத் தெரியாது. சொன்னாலும் நம்பியிருக்க மாட்டார். நான் சிறையிலிருந்து வந்த பிறகு சொன்ன போது நம்பினார்.

டெல்லியில், என் வீட்டுக்கு சிலரைச் சந்திக்க, 'காலை நேரத்திலோ, இரவு சாப்பாட்டு நேரத்திலோ வருவார். இவை நண்பர்கள் சந்தித்துப் பேசுவதைப் போல சாதாரணமாகத் தோன்றும். ஆனால், என்னிடம் இருந்த ஒரு வேலைக்காரன் ரொம்பப் புத்திசாலி. வீட்டுக்கு வருபவர் பேசுவதையெல்லாம் கேட்கும் வழக்கம் அவனுக்கு உண்டு. பரோடா வழக்கில் கைதுகள் ஆரம்பமான போது, அவனுக்கு ஒரு நல்ல வேலை வாங்கிக் கொடுத்து பெங்களூருக்கு அனுப்பி வைத்தேன். ஆனால், போலீஸார் நான் கைதான பிறகு, அவனை பெங்களூரில் தேடிப்பிடித்து உபயோகமான புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியாவிட்டாலும், ஏற்கனவே என்னைப்பற்றி அவர்களுக்குத் தெரிந்த விவரங்களை, அவை சரிதானா என்று ஊர்ஜிதப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தச் சமயத்தில் ஜார்ஜுக்காகவும், போலீஸரால் தேடப்பட்டு வந்த மற்ற முக்கியமான தலைமறைவு ஊழியர்களுக்காகவும் பத்திரமான இடங்களிலும், ஆபத்தில்லாத நேரங்களிலும் ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று. இது எப்போதுமே சுலபமாக இருந்தது கிடையாது. எங்கள் அனுபவத்தில் கண்டது பார்க், சாலை ஓரம் போன்ற நடமாட்டம் அதிகம் உள்ள பொது இடங்கள்தான் ஆபத்தில்லாத இடங்களாக இருந்தன. ஜார்ஜைச் சந்திக்க வேண்டியவரை குறிப்பிட்ட நேரத்தில் குறிப்பிட்ட இடத்தில் இருக்கச் சொல்லுவோம். அவரை அழைத்துக் கொண்டு ஓரிடத்துக்குப் போவோம். அங்கு இன்னொருவர் அவரை அழைத்துக்

கொண்டு போவார். அவர் ஊருக்குப் புதிதாக இருந்தால், நேராக அழைத்துப் போகாமல் சுற்றி வளைத்து, சந்துபொந்துகளில் புகுந்து ஜார்ஜ் காத்திருக்கும் இடத்துக்கு அழைத்துப் போவோம். சமயங்களில், ரொம்பவும் துணிச்சலான, வெளிப்படையான வழிகளே ஆபத்தில்லாதவையாக இருக்கக் கண்டிருக்கிறோம். சமயங்களில் ஜார்ஜை நான் சந்திக்க வேண்டியவர் வீட்டுக்கு நேராக அழைத்துச் சென்றிருக்கிறேன். அதே போல் சந்திக்க வேண்டிய மனிதரையும் எங்கே போகிறோம் என்று சொல்லாமல் நேராக ஜார்ஜிடம் அழைத்துப் போயிருக்கிறேன். ஆனால், அந்தச் சமயங்களில்கூட முன் ஜாக்கிரதையோடு இருந்திருக்கிறோம். இம்மாதிரி முன் ஜாக்கிரதையோடு இருக்க வேண்டியிருந்ததால் நாங்கள் நினைத்த அளவுக்குப் பொதுக்கூட்டங்கள் நடத்த முடியவில்லை; ஒப்புக்கொள்ளப்பட்ட சந்திப்புக்களை நிகழ்த்த முடியவில்லை. சில சமயங்களில் ஜார்ஜை சந்திப்பதற்காக ஒரு ஊருக்கு வரவழைக்கப்பட்ட சிலர் இரண்டு மூன்று தினங்கள் கூட காத்திருக்கும்படி இருந்தது. இன்னும் சில சமயங்களில் அவர்கள் ஜார்ஜை சந்திக்காமலேயே திருப்பி அனுப்பப்பட்டிருக்கிறார்கள். இருந்தும் குறிப்பிட்ட இடத்தில் இல்லாவிட்டாலும் குறிப்பிட்டிருந்த நாட்களில் முடியாவிட்டால் சந்திக்க வேண்டியவரை ஜார்ஜ் எப்படியோ சந்தித்து விட முடிகிறது, முடிந்தது.

இந்தச் சூழ்நிலையில், மற்ற முக்கியமானவர்கள் வழக்கமான கூட்டங்களுக்கு வர முடியவில்லை. ஆனால், இவர்களை ஜார்ஜ் தனித்தனியாக வேறு இடங்களில் சந்திக்க ஏற்பாடு செய்தோம். அக்டோபர் 75–ல் லோக் சங்கர்ஷ் சமிதி அகமதாபாத்தில் ஒரு கூட்டம் போட்டனர். அந்த உறுப்பினர்களை கூட்டத்துக்கு முன்பாகவும், பிறகும் சந்தித்தார். அதே போல சோஷலிஸ்ட் கட்சியின் செயற்குழு உறுப்பினர்கள் கோயம்புத்தூரில் கூடிய பிறகு அவர்களை சென்னையில் சந்தித்தனர்.

ஜார்ஜ் பயணம் செய்வதைப் பற்றி மிகவும் ரகசியமாக இருக்க வேண்டியதைத் தவிர, அவருடன் எப்போதும்

இரண்டு பேர் கூடவே பயணம் செய்ய வேண்டியிருந்தது. அவர் அனேகமாக தனியாகப் பயணம் செய்ததே கிடையாது. இம்மாதிரி சந்தர்ப்பங்களில் யாராவது ஒரு சீக்கியர் அவர் அருகில் வந்து உட்கார்ந்து பஞ்சாபி மொழியில் ஏதாவது பேச ஆரம்பித்து விடுவார் என்ற பயம் இருந்தது. ஜார்ஜுக்கு பஞ்சாபி மொழியில் ஒரு வார்த்தை கூடத் தெரியாது. அவரோடு கூட பிரயாணம் செய்ய ஒருவர் தேவைப்பட்டது போல, அவரோடு தங்குவதற்றும் ஓரிரண்டு பேர் தேவைப் பட்டனர். இவர்கள் ஜார்ஜுக்குப் பாதுகாப்பாக இருந்தது மட்டுமன்றி, தூதர்களாகவும், தொடர்புகளாகவும், இருப்ப தற்காகவும் இப்படிச் செய்யப்பட்டது. அவரால் தானுகவே தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள இயலாது. அவர் தலை மறைவாக இருந்த ஓராண்டுகாலத்தில் ஒரு தடவை கூட அவர் டெலிபோனில் பேசவில்லை. அவரை போட்டோ எடுக்க வும் அனுமதிக்கவில்லை; அயல்நாட்டுப் பத்திரிக்கையாளர்கள் இதனுல் ஏமாற்றமடைந்தபோதிலும், ஜார்ஜ் எப்படி இருக்கி ருர், எங்கே இருக்கிருர் என்பது ரகசியமாக இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டு உதவினுர்கள்.

அவர் பிரயாணம் செய்யும்போது அவர் தங்கும்போது கூடவே இருக்க சிலரை ஏற்பாடு செய்வது பணச் செலவு மட்டுமின்றி, இடைஞ்சலாகவும் இருந்தது. அவருடைய சொந்தச் செலவு தவிர, அவரோடு கூட தூதர்களாகவும், தொடர்புகளாகவும் பிரயாணம் செய்பவர்கள் பாதுகாப்புக் காக நண்பர்களோடு பிரயாணம் செய்ய வேண்டி இருந்த தால், பணம் அதிகம் பிடித்தது. எங்கள் பட்ஜெட்டில— அதாவது தலைமறைவு இயக்கத்துக்குப் பட்ஜெட் என்ற ஒன்று இருக்க முடிந்தால்—மக்களையும், பொருட்களையும் ஒரு இடத் திலிருந்து இன்னொரு இடத்துக்கு அனுப்புவதற்கே நிறையப் பணம் தேவைப்பட்டது.

தலைமறைவாக வேலை செய்து கொண்டு, என்னைப் போல வெளி உலகில் சாதாரணமான வேலைகளில் ஈடுபட்டிருப்பவர் களுக்கு இந்தப் பாதுகாப்புகள் தேவைப்படவில்லை. தவிர,

அரசியலை விட்ட பிறகு நான் 20 ஆண்டு காலம் வெளியில் நடத்தி வந்த தொழில், வாழ்க்கை முறைகள் என் செயல் களுக்கு நல்ல ஒரு மறைப்பாக இருந்தது. அவசரநிலை, சர்வாதி காரம் இவை பற்றிய என் கருத்துக்கள் என் நெருங்கிய நண்பர்களுக்குத் தெரியுமென்றாலும், நான் எப்படி ஈடுபட் டிருக்கிறேன் என்பது ஓரிருவருக்குத்தான் மேலெழுந்தவாரி யாகத் தெரியும். நாட்டில் ரொம்பவும் தேடப்பட்ட மனித ரான ஜார்ஜோடு எனக்குத் தொடர்பு இருந்தது என்பதில் யாருக்கும் கொஞ்சம்கூட சந்தேகம் கிடையாது. கண்ணிய மான எனது வாழ்க்கை எனக்கு முழுப் பாதுகாப்பையும் கொடுத்தது.

'ஹிந்து' பத்திரிக்கைக்கும் எனக்கும் தொடர்பு இருந்த போது, பத்திரிக்கை உலகில் எனக்கு இருந்த முக்கியத்துவத் தால், அரசாங்கத்தின் தலைமை இடங்களில் இருந்தவர் களோடு எனக்குத் தொடர்பு இருந்தது. அவசர நிலைக் காலத் தில் நான் அவர்களைச் சந்தித்தது, விவாதித்தது இவையெல் லாம் எங்களுக்கு மிகவும் தேவையான பல விஷயங்களைக் கொடுத்தன. சர்வாதிகாரம் எப்படியெல்லாம் இயங்குகிறது என்பதை ஊடுருவிப்பார்த்துத் தெரிந்து கொள்ளவும் எந்தெந்தச் சமயங்களில் யார், யார் சர்வாதிகாரியின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருந்தார்கள் என்பதையும் என்னால் தெரிந்து கொள்ள முடிந்தது. தடை செய்யப்பட் டிருந்த அயல்நாட்டுச் செய்திதாள்களையும், பத்திரிகைகளை யும், பார்க்க முடிந்தது. இதனால் நம்மைப் பற்றிய உலக அபிப்பிராயங்கள் எப்படி இருந்தது என்று அறிந்து கொள்ள முடிந்தது. பத்திரிகை நிருபர்களிடமிருந்தும் செய்திகள் கிடைத்தன. அவைகள் எல்லாவற்றையுமே நம்ப முடியாது. இருந்தாலும் சேர்த்து, இணைத்துக்கூட்டிக் கழித்துப் பார்த்து, சர்வாதிகாரத்தின் கர்ப்பகிருகத்தில் என்ன நடந்து வந்தது என்பதை மிகசரியாக அறிந்து கொள்ள முடிந்தது.

பொதுவான செய்திகளைத் தவிர, ஜார்ஜைப் பிடிக்க ரகசியப்போலீஸார் எந்த மாதிரி நடவடிக்கைகளை எடுக்கிறார்

கள் என்று தெரிந்து கொள்ள முயன்றேன். ஜார்ஜைப் பற்றி அவர்களிடம் தகவல் எதுவுமில்லை. அவரைப் பிடிக்க எப்படி வலை விரிக்க வேண்டும் என்ற மார்க்கமும் அவர்களுக்குப் புரிய வில்லை என்று அறிந்தபோது, என்னால் நம்ப முடியவில்லை. 1975–ல் இந்திரா காந்தியே இதைப்பற்றி, போலீஸிடம், தீவிர நடவடிக்கை எடுக்க வற்புறுத்தினாராம். எதையுமே தெரிந்து கொள்ள முடியாததால், அவர்கள் ஜார்ஜ் அயல் நாட்டுக்கு ஓடிவிட்டார் என்று கதை கட்டி விட்டார்கள். அவரை நேபாளத்திலும், மேற்கு ஜெர்மனியிலும், பாகிஸ் தானிலும் கூட காணப்பட்டதாக பெரிய போலீஸ் அதிகாரி கள் கூறுவதைக் கேட்க ரொம்ப வேடிக்கையாக இருந்தது. இதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பாகத்தான் ஜார்ஜை சந்தித்த எனக்கு, இந்தச் செய்தியை ஏற்றுக் கொள்வது சற்று கடினமாக இருந்தது. இந்த அதிகாரிகளில் பலர் எனக்கு ரொம்பவும் வேண்டியவர்கள். என் மீது அக்கறை கொண்ட வர்கள். ஜார்ஜோடு எந்த விதச் சம்பந்தமும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று எச்சரித்தார்கள். 'நான் அரசியலை விட்டு 20 ஆண்டுகள் ஆகிவிட்டன' என்றும், ஜார்ஜை ஒரு "வீரச்சாகசக்காரர்" என்று நான் கருதியதாக வும் அவர்களுக்கு நான் பதில் கூறி விடுவேன். நான் அயல் நாடு சென்று திரும்பும் ஒவ்வொரு தடவையும், டோக்கியோ வுக்கு. அங்கிருந்த ஒரு நண்பர் மூலமாக, இந்தியாவில் யாரா வது என்னுடைய அயல் நாட்டு நடவடிக்கைகளைப் பற்றித் தெரிந்து கொண்டு விட்டார்களா என்று விசாரித்துக் கொள் வேன்.

இம்மாதிரி சந்தர்ப்பங்களில் நான், ராஜ்யசபா உதவித் தலைவர் முரஹரியை சோதனைக் களமாகப் பயன்படுத்திக் கொள்வேன். பழைய சோஷலிஸ்டான இவர், இந்திராவின் செய்கைகளுக்கு நியாயம் கற்பிக்குமளவிற்கு சோஷலிஸத்தி லிருந்து விலகியவர். இந்திராவின் நம்பிக்கைக்குப் பாத்திர மானவர் போல நடிப்பார். நான் அடிக்கடி அவர் வீட்டுக்குப் போய் அவரிடமிருந்து செய்திகளைக் கறக்க முயற்சிப்பேன்.

சென்னையில், நானும், அவரும் அப்பாராவ் வீட்டில் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது ஒரு வேடிக்கை நடந்தது. பேச்சு வாக்கில் நான், "ஜார்ஜ் பெர்னண்டஸ் வெற்றிகரமாக ஒரு தலைமறைவு இயக்கத்தை நடத்துகிறாராமே, உங்களுக்குத் தெரியுமா?" என்று முரஹரியைக் கேட்டேன். எல்லாம் தெரிந்தவர் போல முகத்தை வைத்துக் கொண்டிருந்த அவர் எல்லோரிடமும், ஜார்ஜ் பம்பாயில் போலீஸ் பிடியிலிருந்து அக்டோபரில் தப்பி, சென்னைக்கு வந்து தி. மு. க. ஆட்களின் உதவியோடு சிங்கப்பூர் போய், அங்கிருந்து மேற்கு ஜெர்மனிக்குப் போய்விட்டதாகக் கூறினர். ஆனல், அன்று ஜார்ஜ் டெல்லியில் பத்திரமாகத் தன் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

என்னுடைய முழுநேர வேலை, என் வசதிப்படி எனக்குப் போதிய அவகாசம் கொடுத்ததால் நினைத்தபோதெல்லாம் உள் நாட்டிலும், வெளிநாட்டிலும் பிரயாணம் செய்ய வசதியாக இருந்தது. ஆலோசகர் என்ற முறையில் 'ஹிந்து' பத்திரிகை யோடு சம்பந்தப்பட்டிருந்ததால் அவசர நிலைக்கு முன் பாகவே நான் அடிக்கடி சென்னைக்குப் போய் வந்து கொண் டிருந்ததால், என் சென்னை விஜயங்களை யாரும் சந்தேகிக்கவே இல்லை. ஐ. இ. என். எஸ். சார்பில் பிரதான உறுப்பினராக நான் இருந்ததால், மற்ற நகரங்களுக்கும் அடிக்கடி போய் வர இது நல்ல சாக்காகப் பயன்பட்டது. உலக ஸ்தாபனங் களோடு என்னுடைய தொடர்பு ஸ்டேட் ட்ரேடிங் கார்ப்ப ரேஷனின் நியூஸ் பிரிண்ட் வர்த்தகக் குழுவில் நான் உறுப் பினராக இருந்ததும் அயல் நாடுகளுக்கு நான் அடிக்கடி போய் வர நல்ல காரணங்களாகப் பயன்பட்டன. ஏதோ ஒரு அசந்தர்ப்ப சூழ்நிலையில்தான் நான் போலீஸில் பிடி பட்டேனே தவிர, அவர்களது துப்பறிதலால் அல்ல. என்னைக் கைது செய்த பிறகு அவர்களிடம் இதை நானே சொன்னேன். மார்ச் மாதம் 9-ம் தேதி அன்று, பரோடாவில் கைதானவர் களுக்கு என் பெயர் கூடத் தெரியாது. இதேபோல் என்னைப் போல பல்வேறு நகரங்களில் தலைமறைவு வேலையில் ஈடு

பட்டவர்களுக்கும் என்னை யார் என்றே தெரியாது. அப்படியே தெரிந்திருந்தாலும் அவர்கள், எந்தக் காரணம் கொண்டும் என்னை ஜார்ஜோடு சம்பந்தப்படுத்திப் பார்க்கவில்லை.

என்னைப் போல் இன்னும் பலர் இருந்தனர். அவர்களில் முகுந்த் ஸ்டீல் கம்பெனி சேர்மன் திரு. விரேன் ஜேஷா. இவர் இன்னும் கொஞ்சம் எச்சரிக்கையோடும், இன்னும் குறைவான ஆர்வத்தோடும் காரியங்களைச் செய்திருந்தால், பரோடா கைதுகளைத் தொடர்ந்து பலர் பிடிபட்டதில் இவர் மாட்டிக் கொண்டிருக்கவே மாட்டார். என்னைப் போலவே அவரும், எங்களுக்குப் பொதுவான தொடர்பாக இருந்த பரத் பட்டேல் என்பவர் வழக்கில் அப்ரூவராக மாறிவிட்டதால் பிடிபட்டுவிட்டார்.

# 6. தலைமறைவு இயக்கத்தின் செய்தித்துறை

அவசர நிலை காலத்தில் பல தலைமறைவு செய்தித் தாள்கள் வெளிவந்து கொண்டிருந்தன. அனேகமாக ஒவ்வொரு நகரத்திலும் இது நடந்து வந்தது. அவர்களுக்குள் தொடர்பு எதுவுமில்லை. தனித்தனியாக செய்தித்தாள்களை வெளியிட்டுக் கொண்டிருந்த இவர்களுக்குள் ஒரு உறவை ஏற் படுத்துவதும் இயலாத காரியமாக இருந்தது. இந்த முயற்சி களில் பெரியது நாங்கள் வெளியிட்டு வந்த மூன்று பத்திரிகை கள். டெல்லியிலிருந்து ஆங்கிலத்தில் 'ரெசிஸ்டன்ஸ்' என்ற பத்திரிகையையும், வட இந்தியாவில் 'ப்ரதிரோத்' என்ற பத்திரிகையையும் வெளியிட்டோம். ரொம்பவும் பரவலாக வெளியிடப்பட்ட 'க்ருஸேடர்' பத்திரிகை மூன்று இதழ்கள் தான் வெளியாயிற்று. தொடர்பின்மையாலும், பத்திரிகை கள் நிறைய வெளிவந்தாலும் அவை தைரியத்தை வளர்த்தனவே தவிர, தரப்பட்ட செய்திகளின் நம்பகத் தன்மை பாதிக்கப்பட்டது. பத்திரிகைகளை வெளியிட்டவர்கள் பல சமயங்களில் வந்த செய்திகளைச் சரி பார்ப்பதில்லை. சரி பார்க்கவும் அவர்கள் விரும்பவில்லை. பல சமயங்களில் வதந்திகள் செய்திகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டன. சில சமயங்களில் இவை மிகைப்படுத்தப்பட்டன. தலை மறைவுப் பத்திரிகைகளுக்குள் தொடர்பை ஏற்படுத்த முடிந் திருந்தாலும், நல்ல முறையில் வினியோகிக்க முடிந்திருந்தா லும், நாங்கள் விரும்பிய அளவுக்கு அவற்றை நடத்த முடிந் திருக்காது. நடத்தவுமில்லை. எல்லா பத்திரிகைகளுமே கொஞ்சம் பேர்களுக்குத்தான் போய்ச் சேர்ந்தன. அதுவும் பெரிய நகரங்களில் மட்டுமே இது முடிந்தது.

ரேடியோ தொடர்பாக இருந்தால் பரந்த அளவில் செய்திகளை அனுப்ப முடியும். தவிரவும் எங்கள் செய்தித் துறைக்கு இது ஒரு பெரிய வசதியாக இருந்திருக்கும். ஆரம்பத்திலிருந்தே நாங்கள் திருட்டுத்தனமாக ரேடியோ நிலையம் ஒன்றை ஏற்படுத்த முடியுமா என்று ஆராய்ந்து பார்த்தோம். 1975–ஆகஸ்ட் முடிவில், எங்கள் லண்டன் நண்பர்கள் ட்ரான்ஸ்மிட்டர் ஒன்று தங்களுக்குக் கிடைத்திருப்பதாகச் சொன்னார்கள். இது கிரீஸ் நாட்டிலும், சைப்ரஸ் தீவில் கிரீஸ் ஆதரவாளர்களாலும் வெற்றிகரமாகப் பயன்படுத்தப்பட்டிருந்தது. அதை எங்கு பொருத்தவேண்டுமோ அங்கு அனுப்பத் தயாராக இருந்தார்கள். அதை இயக்க எவ்வளவு மின்சாரம் தேவைப்படும் என்பது போன்ற விவரங்கள் கிடைத்தபோது பார்த்தால், இந்த ட்ரான்ஸ்மிட்டரை வைத்துக்கொண்டு நாடு பூராவுமே செய்திகளை ஒலி பரப்ப முடியுமளவிற்கு அது சக்தி வாய்ந்தது என்பது தெரிந்தது. ஆனால், அது மிகப் பெரியதாக இருந்தது. மின்சாரம் நிறையத் தேவைப்பட்டது. ஆண்டனா, ஏரியல் போன்ற அமைப்பு, ஆர்ப்பாட்டங்கள் அதற்குத் தேவைப்பட்டன. அதை கிட்டத்தட்ட நிரந்தரமான முறையில் பொருத்தவேண்டும். புரட்சி ஏற்பட்டு, நாட்டின் ஒரு பகுதியே புரட்சிக்காரர்களின் ராணுவக் கட்டுப்பாட்டில் இருந்தால் இம்மாதிரியான ஒரு ரேடியோ அமைப்பு ஏற்றது. அம்மாதிரியான ஒரு நிலை அப்போதைக்கு ஏற்படவில்லை. கொஞ்ச காலத்துக்கு ஏற்படாது என்றும் தெரிந்தது. எங்கள் கட்டுப்பாட்டுக்குள் நாட்டின் எந்தப் பகுதியையும் கொண்டுவர திட்டம் போடவுமில்லை.

பக்கத்து நாடு ஏதாவது ஒன்றில் ட்ரான்ஸ்மிட்டரைப் பொருத்தி, அதன் வழியாகச் செய்திகளை அனுப்பலாம் என்ற ஒரு மாற்று திட்டமும் யோசனையில் இருந்தது. அதற்குப் பாகிஸ்தான், நேபாளம், பங்களாதேஷ் நாடுகளோடு பேச்சு வார்த்தை நடத்தவேண்டும். நேபாளம் இப்படி ஒரு யோசனையை ஏற்குமா என்பதே சந்தேகமாக இருந்தது. கொஞ்ச காலம் நேபாளத்தில் இருந்த கர்ப்பூரி தாகூர்,

குறைந்த அளவுக்கு அரசியல் விவகாரங்களில் ஈடுபடக்கூட அவருக்கு நேபாள அரசு அனுமதிக்கவில்லை. பாகிஸ்தானோ, பங்களாதேஷோ அவர்கள் நாடுகளிலிருந்து இம்மாதிரியான ஒரு ரேடியோ அமைப்பைச் செயல்படுத்த அனுமதித்திருப் பார்கள். ஆனல், அவர்கள் பதிலுக்கு ஏதாவது எதிர்பார்ப் பார்கள். அப்படி ஏதாவது உடனேயே இல்லாமல் இருந்திருந் தால்கூட அம்மாதிரி ஒரு ஏற்பாடு வரவேற்கத்தக்கதாக இருந்திருக்காது. பாகிஸ்தான் அல்லது பங்களாதேஷைப் பொறுத்தமட்டில், நமக்கும் அவர்களுக்கும் உள்ள பகைமை அப்போது உச்சகட்டத்தில் இருந்தது. நம்முடைய எதிரியின் எதிரி, நமது நண்பன் என்ற கொள்கையைக்கூட இவர்கள் விஷயத்தில் யாரும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள். இயக்கத் தில் இருந்த மற்றவர்களும் இதற்குச் சம்மதித்திருக்கமாட் டார்கள். ஏற்கனவே பொருமை உணர்ச்சிகள் பெர்ஞண் டிஸின் புகழைக் குறைத்து விட்டிருந்தன. சாமர்த்தியமில்லாத எந்த ஒரு நடவடிக்கையும் அவரது நிலைமையை இன்னும் மோசமாக்கி இருக்கும்.

ஆகவே, நாங்கள் மனமில்லாமல், இந்த ட்ரான்ஸ் மிட்டரை உபயோகிக்கும் எண்ணத்தைக் கைவிட்டோம். ஆனல், எப்போதும் உபயோகித்துக் கொள்ளலாம் என்ற வசதி கடைசி வரை, அவசரநிலை முடியும் வரை எங்களுக்கு இருந்து வந்தது.

இந்தியாவிலேயே ஒரு ட்ரான்ஸ்மிட்டரைக் கட்டும் முயற்சியில் எங்கள் கவனத்தைத் திருப்பினேம். எங்கேயும் எடுத்துச் செல்லக்கூடியதாகவும், எந்த வித ஆர்ப்பாட்டமு மில்லாமல் எளிமையாக இயக்கக் கூடியதாகவும், குறைந்த மின்சாரத்தை உபயோகித்துக் கொள்ளும்படியாகவும் அந்த ட்ரான்ஸ்மிட்டர் இருந்தால், ஆபத்து குறைவாக இருக்கும். ட்ரான்ஸ்மிட்டர்களைக் கட்டுவதில் அனுபவம் வாய்ந்த டெக்னிஷியன் ஒருவர், நன்கு வேலை செய்யக்கூடியதும் சுலப மாக ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்கு எடுத்துச் செல்லக் கூடியதாகவும் உள்ள ஒன்றைக் கட்டித் தருவதற்கு முன்

வந்தார். அது 30 கிலோ மீட்டர் தூரத்திற்கு ஒலிபரப்பக் கூடிய மீடியம் வேவ் ட்ரான்ஸ்மிட்டர் பாட்ரியால் இயக்கமுடியும். அகில இந்திய ரேடியோ இயக்கிய ஒலி அலை களிலேயே இயக்கலாம். அகில இந்திய ரேடியோவில் செய்தி கள் ஒலிபரப்பப்படும்போது, இடைமறித்து நமக்குவேண்டிய கோஷங்களைப் போடுவது சிறந்த முறையாகக் கருதப்பட்டது. தனி ஒலிபரப்புகளிலும் இதனல் சாத்தியம்.

1976—ஜனவரி கடைசியில், இந்த செட் பரீட்சிக்கப்பட்டு உபயோகத்துக்கு ரெடியாக இருந்தது. பிப்ரவரியில் அது டெல்லிக்கு வந்திருக்கவேண்டும். ஆனல், அதைக் கொண்டு வந்தவர் மார்ச் 10-ம் தேதிதான் வந்தார். அதற்குள் பரோடா கைதுகள் ஆரம்பமாகி, எங்களை மூலைக்கு ஒருவராகச் சிதற டித்து விட்டதால், இந்த ரேடியோ இயக்கத்தை ஆரம்பித் தால் ஆபத்தில் வந்து முடியும் என்று கருதினேம்.

நான் 1975-ம் ஆண்டு நவம்பர்-டிசம்பரில், அயல்நாடு களுக்குப் போயிருந்தபோது, என்னுடைய வேலைகளில் ஒன்று எங்களுக்குத் தேவையான ட்ரான்ஸ்மிட்டர் ஒன்றைக் கண்டு பிடிப்பது. இது மாதிரி ஒன்றை நான் ஜப்பானில் தேர்ந்தெடுத் தேன். சான்யோ கம்பெனி தயாரித்து வந்த 5 வாட் ட்ரான்ஸ் ரிசீவர் எங்களுடைய தேவைக்குப் போதுமானதாகக் கருதப் பட்டது. ட்ரான்ஸிஸ்டரால் செய்யப்பட்ட அதை ஆறு 'சானல்களில்' உபயோகிக்கலாம். 10 பென்லைட் பாட்டரி களால் இயக்கலாம். அதன் எடை எட்டு பவுண்ட்தான். இடத்தை அடைக்காது. விலையும் குறைவு-80 அமெரிக்க டாலர்கள்தான். முதலில் இம்மாதிரி 25 ரேடியோக்களை வாங்கவும் பிறகு, அவற்றின் உபயோகத்தைப் பார்த்துக் கொண்டு இன்னும் 25 ஏற்பாடுகள் செய்தேன்.

இந்த ட்ரான்ஸ்மிட்டர்களை, நமது நாட்டின் பெரிய நகரங்களில் வினியோகிப்பது என்றும், அவற்றை ஒவ்வொரு ஊரிலும் யாராவது ஒரே ஒரு ஆசாமி இயக்கினல் போதும் என்றும் முடிவு செய்தோம். எளிய கோஷங்களைத் தேர்ந் தெடுத்து அவற்றை பிராந்திய மொழிகளில் மொழிபெயர்த்

துக் கொள்ள வேண்டும். இந்தக் கோஷங்களை அகில இந்தியா ரேடியோவின் செய்திகளின்போது நடுவில் வரும் இடை வெளியில் பொறுத்த வேண்டும். இப்படி ஒரே சமயத்தில் இந்தக் கோஷங்களை உபயோகப்படுத்தி இருந்தால், நாட் டையே, மின்சாரம் பாய்ந்தது போல, பெரிய பரபரப்பில் ஆழ்த்தியிருக்கலாம். இயக்கத்தின் தொய்ந்து போயிருந்த உற்சாகத்தை இது மட்டுமே உயிரூட்டியிருக்கும். இந்திரா காந்திக்குப் பெரிய அளவில் எதிர்ப்பைக் காட்டியிருக்க முடியும்.

'இந்த ட்ரான்ஸ்மிட்டர்களை நாட்டுக்குள் கொண்டு வரு வது கஷ்டமாக இருந்தது. வழக்கமாக உள்ள இறக்குமதி மார்க்கங்களின் வழியாக அவற்றைக் கொண்டு வர இயலாது. ஒவ்வொன்றாக நாட்டுக்குள் கடத்திக் கொண்டு வரலா மென்றால், பலரை நம்பி இதைச் செய்ய வேண்டியிருக்கும். இதில் விஷயம் தெரிந்த யாராவது ஒருவருடைய உதவியை நாடுவதுதான் சிறந்த வழி. துபாயில் வியாபாரத் தொடர்பு உள்ளவரும், இம்மாதிரி கடத்தல்களில் ஈடுபட்டுள்ளவர்களை அறிந்தவருமான பரத் பட்டேலைத் தவிர சிறந்த ஆசாமி வேறு யாரும் இருக்க முடியாது என்று நினைத்தோம். பட்டேலோடு தொடர்பு கொண்டு, இது பற்றிப் பேச ஜனவரி 31-ல் டெல் லியில் சந்திப்பதாக ஏற்பாடாயிற்று. 1976—மார்ச் மாதத்தில் அவர், என்னையும்—ஜார்ஜையும் போலீஸில் காட்டிக் கொடுக்க டெல்லிக்கு வந்ததற்கு முன்பாக, இப்போதுதான் நான் அவரை முதல் தடவையாகவும் கடைசித் தடவையாகவும் சந்தித்தேன். அந்த ரேடியோ செட்டுகளை நாட்டுக்குள் கொண்டு வரக்கூடிய சாத்தியக்கூறுகளை ஆராய்வது போலப் பாசாங்கு செய்துவிட்டு, பட்டேல் அம்மாதிரி ஒன்றும் தன்னால் செய்ய முடியாது என்று தந்தி கொடுத்து விட்டார். அவர் என்னை ஜனவரியில் சந்தித்ததும், எனக்கு அனுப்பிய தந்தி, என்னையும் ஜார்ஜையும் மாட்ட வைத்து விட்டன. அவரை மட்டும் நம்பி, இந்த ட்ரான்ஸ்மிட்டர்களைக் கொண்டு வரும் விஷயத்தில் அவரோடு தொடர்பு கொள்ளாமலி

ருந்திருந்தால், நானும், ஜார்ஜும் அவசரநிலை காலம் முடியும் வரையில்கூட கைது செய்யப்படாமல் தப்பி யிருப்போம்.

பட்டேல் எங்களைக் கைவிட்டு விட்டாலும், ஜப்பானிலி ருந்து ட்ரான்ஸ்மிட்டர்களை இந்தியாவுக்குள் கொண்டுவரும் வேலையை ஏற்றுக் கொள்ள, பம்பாயில் ஒரு ஆசாமியைப் பிடித்தோம். இது நடந்தது பிப்ரவரி மாத இறுதியில், எங்க ளால் செய்ய முடிந்ததெல்லாம் எங்கள் ஜப்பானிய நண்பர் களுக்கு 25 செட்களை வாங்கி விடும்படி கூறியதுதான். பம்பாய் ஆசாமியோடு இந்தியாவுக்குள் கொண்டுவரும் ஏற்பாடுகளைப் பேசி முடிப்பதற்குள் நான் கைது செய்யப்பட்டு விட்டேன். ஜார்ஜும் தலைமாறிவாகி விடும்படி ஆகிவிட்டது.

துரதிருஷ்டவசமாக, திருட்டுத்தனமாக ஒரு ரேடியோ நிலையத்தைச் செயல்படுத்த முயற்சிகள் செயல்படவில்லை. அது மட்டும் நடந்திருந்தால், தலைமறைவு இயக்கத்துக்கு ஒரு புதிய வலிவும், புத்துணர்வும் ஏற்பட்டிருக்கும். இந்திரா காந்தியும், அவரது ரகசியப் போலீஸும் நிலையிழிந்து போய் எனன செய்வது என்று புரியாமல் தவித்திருப்பார்கள்.

# 7. உலக சோஷலிஸ்ட்களின் ஆதரவு

தலைமறைவு இயக்கத்தில் எனக்கும், ஜார்ஜுக்கும் தொடர்பு ஏற்பட்டதிலிருந்தே வெளிநாடுகளில் எப்படி யாவது எங்கள் இயக்கத்துக்கு ஆதரவு திரட்ட வேண்டு மென்றும், அதன் மூலமாக நம்மீது நல்ல அபிப்பிராயம் கொண்ட நாடுகளுக்கு நம்மைப்பற்றிய செய்திகளை அனுப்ப வேண்டிய அவசியத்தைப்பற்றியும் விவாதித்தோம். ஏற் கனவே, எங்களோடு அயல்நாடுகளில் தொடர்பு கொண்டிருந் தவர்களுக்கு தொடர்ச்சியாக செய்திகளையும், அபிப்பிராயங் களையும், நாட்டில் வளர்ந்து வரும் நிலைபற்றியும் அவ்வப் போது தெரியப்படுத்துவது தலையாய வேலையாயிற்று. நமது தூதரகங்கள் மூலமாகவும், மற்ற அரசு தொடர்புகளின் மூல மாகவும், எங்களுக்கு எதிரான பலமிக்க இந்திரா காந்தியின் பிரச்சாரத்தையும், எங்களுடைய தொடர்புகளின் மூல மாகவே முறியடிக்க வேண்டியதாயிற்று. கணக்கிலடங்காத தூது கோஷ்டிகளை அயல்நாடுகளுக்கு இந்திரா காந்தி அனுப்பி வைத்து, அவர்கள் மூலமாக எதிர்க் கட்சிகளைக் கண்டித்தும், அவசர நிலையின் அவசியத்தை ஆதரித்தும் பிரச்சாரம் செய்து வந்தனர். எங்கள் தொடர்புகளை விரிவுபடுத்துவதின் அவசியத் தையும், எங்களுடைய அயல்நாட்டுப் பிரச்சாரத்தில் எங் களுக்கு உதவியாக இருக்கக்கூடிய தனிப்பட்ட மனிதர்களையும், ஸ்தாபனங்களையும் கண்டுபிடித்து, அவர்களை நம் பக்கம் சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியத்தையும் நாங்கள் உணர்ந்தோம்.

இதைச் செய்வதற்கு அயல்நாடுகளில் ஏற்கனவே நன்கு அறிமுகமானவரும், நம்முடைய கட்சியை நன்கு எடுத்துக் கூறி, அவர்களை நம் பக்கம் திருப்பி நமக்காக வேலை செய்யும்

படி செய்யக்கூடியவருமான ஒருவர் நேரிடையாக அங்குபோய் வரவேண்டும். நான் ஜூலை 75–ல் ஒரு உலக சுற்றுப் பயணம் மேற்கொண்டபோது இம்மாதிரி மனிதர்களையும், ஸ்தாபனங்களையும் சந்தித்துப் பேசியிருந்தேன். ஆனால் தொழிற்சங்கப் பிரமுகரையோ, ஜார்ஜுக்கு நன்றாகத் தெரிந்து நமக்கு உதவி செய்யக்கூடியவராக உள்ளவர்களையோ நான் அப்பொழுது சந்திக்கவில்லை. நான் திரும்பவும் ஒருதடவை உலக சுற்றுப் பயணம் போய் நமக்கு உதவுபவர்களோடு பயனுள்ள வகையில் தொடர்பு ஏற்படுத்தி வரவேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது. எனக்கு பயணத்தை ரகசியமாக வைத்துக் கொள்ளுமளவிற்கு ஒரு காரணம் கண்டுபிடிப்பது பிரச்னையாகிவிட்டது. அயல்நாடுகளோடு தொடர்பு கொண்டிருந்தாலாவது ஒரு தொழில் நிறுவனத்தோடு என்னை சம்பந்தப்படுத்திக்கொண்டு அவர்களுடைய வியாபார நிமித்தமாக அயல்நாடுகளுக்குப் போவதாக சொல்லுவது நல்ல ஒரு வழியாகப்பட்டது.

நான் ஏற்கனவே, அடிக்கடி வியாபார நிமித்தமாகவும், அகில உலக மாநாடுகளில் கலந்துகொள்ளும் நிமித்தமாகவும் அயல்நாடுகளுக்குப் போய் வந்து கொண்டிருந்ததால், ஏற்றுமதித் தொழில் செய்து வந்த ஒரு கம்பெனியில் ஆலோசகராக நான் நியமிக்கப்பட்டால் யாரும் சந்தேகிக்க மாட்டார்கள், கவனிக்கக்கூட மாட்டார்கள். எங்களுக்குச் சில தொழிலதிபர்களைத் தெரிந்திருந்தாலும், அவர்கள் நாங்கள் ஈடுபட்டிருக்கும் தலைமறைவு இயக்க விவரங்களில் ஆதரவு கொண்டிருந்த போதும், என் அயல்நாட்டு விஜயத்துக்கு ஒரு சாக்காக எனக்கு வேலைதர அவர்கள் தயங்கினார்கள். ஆகவே, ஏற்கனவே எங்களோடு சம்பந்தப்பட்டிருந்த பரத் பட்டேலின் உதவியை நாடுவது என்று தீர்மானித்தோம். அவருக்கு துபாயில் வியாபாரத் தொடர்பு இருந்ததால் என்னை அவருடைய பிரதிநிதிகளில் ஒருவராக வேலைக்கு அமர்த்திக் கொண்டு, என் அயல்நாட்டு வியாபாரத்துக்கும், செலவுக்கும் ஏற்பாடு செய்யச் சொல்லலாம் என்று நினைத்தோம்.

ஆகஸ்ட் கடைசிக்குப் பிறகு, பரத் பட்டேல் இந்தியா வுக்கு வராததால் அவர் கிடைக்கவில்லை. ஆகஸ்ட் கடைசியில் அவர் இந்தியா வந்தபோதும் அவரை எங்களால் சந்திக்க இயலவில்லை. என்னுடைய பயணம் மிகவும் அவசியம் என்று ஆகிவிட்டதால், அவர் அடுத்த தடவை இந்தியா வரும்வரை எங்களால் காத்திருக்க இயலவில்லை. காரணம், அவசர காலத்தைக் கொண்டு வந்ததன் அவசியத்திற்கான நியாயங் கள் சரிதான் என்றும், ஆயிரக்கணக்கான மக்களைச் சிறையில் தள்ளியதும் அவசியம்தான் என்றும் நம்பும்படியாக இந்திரா சொன்ன காரணங்களை அயல்நாட்டு மக்கள் ஏற்றுக் கொள்ள, இந்திராகாந்தி அரசு எடுத்த முயற்சிகளில் கொஞ்சம் வெற்றி காண முடிந்தது. அரசியல் நிர்ணய சட்டத்துக்கு கடுமையான திருத்தங்கள், பத்திரிகைகளுக்குத் தணிக்கை முறை, நீதித் துறையின் சுதந்திரத்தில் தலையீடு, சொன்னபடி கேட்கும் பார்லிமெண்ட் இவை போன்று அவரது பதவி அசைக்க முடியாதபடியும், அவரை வெளியேற்றவே முடியாதபடியும் செய்ய எடுக்கப்பட்ட மற்ற நடவடிக்கைகள், இவைகளுக்காக அவர் கூறிய காரணங்களை, அயல் நாட்டு மக்கள் நம்ப வைக்கும் முயற்சியிலும் அவருக்கு வெற்றி கிடைக்கும்போலத் தோன்றியது. உண்மையாக நடந்தவைகளைப் பற்றியும், இந்திராவின் உண்மையான நோக்கங்களைப் பற்றியும் தாமதம் எதுவுமின்றி, ஒழுங்காகச் சரியான முறையில் அயல்நாட்டு மக்களுக்கு எடுத்துக் கூறிவிட்டால், அவர்கள் இந்தியாவுக்கு நல்லது செய்யும் ஒரு சர்வாதிகாரி தேவைதான் என்று ஏற்றுக் கொண்டு விடுவார்கள் என்று கருதினோம்.

அதுவரை பலமான, ஆழமான ஜனநாயக மரபுகளைக் கட்டிக்காத்து வந்த இந்தியாகூட, தன்னுடைய முன்னேற்றத் துக்காக இந்த மரபுகளைத் தியாகம் செய்துதான் தீரவேண்டும் என்ற வாதத்தைக்கூட கொஞ்சம் கொஞ்சமாக ஒப்புக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். இந்தச் சூழ்நிலையில் ஏற்கனவே அயல்நாடுகளில் உள்ள இந்தியர்களின் உதவியோடு ஏற்படுத்தப்பட்ட கமிட்டிகளின் மூலமாகச் செய்துவந்த

பிரச்சாரம் கொஞ்சம்கூடப் போதவில்லை. இந்திராகாந்தி முடுக்கி விட்டிருந்த பலமுள்ள பிரச்சார எந்திரத்தை எதிர்த்த இவர்களுடைய நடவடிக்கைகள் எடுபடவே யில்லை. அளவில்லாத பணபலம் கொண்ட இந்திரா காந்தியின் பிரச்சார முயற்சிகளைத் தோற்கடிக்க வேண்டுமானால், நேரில் போய் சந்தித்துப் பேசி நிலைமைகளை விளக்க வேண்டும். தலை மறைவு இயக்கத்திலிருந்த ஒருவர் போனால் பரபரப்பாகவும், பலனுள்ளதாகவும் இருக்கும். தவிரவும், அங்கு பலர் கவனத் தைத் திருப்பி இந்திரா காந்தியால் கூட்டம் கூட்டமாக அனுப்பப்பட்ட ஏஜெண்டுகளின் பிரச்சாரங்களை எதிர்க்கும்படி யாக இருக்கும்.

அமெரிக்கா, ஜப்பான், இங்கிலாந்து போன்ற நாடுகளில் மக்கள் தொடர்பை ஏற்படுத்தும் நோக்கத்தில் எனக்கு ஒரு வேலை தரும்படி ஹாங்காங்கில் உள்ள ஒரு புத்தகம் வெளி யிடும் நிறுவனத்தோடு ஏற்பாடு செய்துகொண்டேன். அவர் களுக்கு நான் செய்யவேண்டிய வேலையையும். அதற்காக நான் விரிவான முறையில் அயல்நாடுகளில் சுற்றுப் பயணம் மேற் கொள்ள வேண்டியிருக்கும் என்பதையும், எனக்கு வேலைதரும் கடிதத்தில் சேர்த்து எழுதி அவர்கள் அனுப்ப வேண்டும். இந்தக் கடிதமும், உலகம் பூராவும் சுற்றக்கூடிய விமான டிக்கட்டும் எனக்கு நவம்பர் மூன்றுவது வாரவாக்கில் அனுப்பி வைக்கப்பட்டன. இந்தக் கடிதத்தை வைத்துக்கொண்டு ரிசர்வ் பாங்க் அனுமதி பெறுவது சுலபமாகப் போய்விட்டது நவம்பர் 26-ம் தேதி புறப்பட்டு மறுநாள் லண்டன் போய்ச் சேர்ந்தேன்.

ஜெ பி—யை விடுதலை செய்யக் கோரி ஏற்பாடு செய்யப் பட்ட கமிட்டியின் முக்கிய உறுப்பினர்கள் என்னை லண்டனில் சந்தித்து, அன்று என்னை பிரஸ்ஸல்ஸ் நாட்டுக்குப் போகச் சொன்னார்கள். அங்கு அகில உலக சோஷலிஸ்டுகளின் கூட்டம் ஒன்று நடப்பதாக இருந்தது. நான் இந்தியாவை விட்டுக் கிளம்பும்போது இந்தக் கூட்டம் நடக்கப் போவதைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. இதை, அதிர்ஷ்டவசமாக ஏற்

பட்ட ஒரு தெய்வாதீனமான செயல் என்றுதான் கூற வேண்டும்.

நவம்பர் 28, 29, 30 தேதிகளில் பிரஸ்ஸல்ஸில் அந்தக் கூட்டம் நடந்தபோது நான் அங்கு இருந்தேன். கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் இந்தியாவைப்பற்றி எதுவும் பேசுவதாக இல்லை. தனது பெயரை மாற்றிக்கொண்டு விட்ட காரணத்தால் இந்திய சோஷலிஸ்ட் கட்சி அதில் அங்கம் வகிக்க முடியவில்லை. திரும்பவும் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும் என்ற கோரிக்கை பரிசீலனையில் இருந்தது கமிட்டிக்குள் பலம் பொருந்திய ஒரு குழு அதை எதிர்த்து வந்தது. சோஷலிஸ்ட் கட்சிக்குப் பதிலாக இந்திரா காங்கிரஸ் கட்சியைச் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று இந்திரா காங்கிரஸ் கட்சியினர் இந்தக் குழுவிடம் கேட்டிருந்தனர்.

ஆகவே, இந்த மாநாடு பொதுவாக இந்திரா காந்திக்கு எதிராக—எதிர்க் கட்சியினருக்கும் குறிப்பாக, ஜார்ஜ் பெர்னாண்டஸின் தலைமறைவு இயக்கத்துக்கும் ஆதரவு தரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இந்தக் கூட்டத்தைப் பயன்படுத்திக்கொண்டு என்னால் எந்த அளவுக்கு அதிகமான பிரதிநிதிகளை சந்திக்க முடியுமோ அந்த அளவுக்குச் சந்தித்து, நமது நிலைகளை நேரில் அவர்களுக்கு விளக்கி அவர்களது ஆதரவையும், உதவியையும் பெற முயற்சித்தேன். ஆனால், நிகழ்ச்சிகளின் போது இந்தியாவின் நிலைமைகள் விவாதிக்கப்பட்டது மட்டுமின்றி, என்னை அதில் பேசவும் அழைத்தார்கள். இது மட்டுமின்றி பெல்ஜியம் நகரின் சோஷலிஸ்ட் கட்சி, என்னை தங்கள் விருந்தினராக்கிக் கொண்டு அங்கு நான் தங்கி இருந்த போது என்னுடைய ஹோட்டலின் செலவுகளையும் ஏற்றுக் கொண்டது.

சோஷலிஸ்ட் இன்டர் நேஷனலின் செக்ரட்டிரி ஜெனரல் ஹான்ஸ் ஜானிட்ஸ்செக்கின் இடையறாத முயற்சிகள் இல்லாமலிருந்திருந்தால் இது சாத்தியமாகி இருந்திருக்காது.

அவசரநிலை அறிவிக்கப்பட்ட உடனேயே இந்திரா காந்திக்குப் பயப்படாமல் நடவடிக்கைகள் எடுக்க அயல்நாடு

களில் ஏற்படுத்தப்பட்ட எல்லா கமிட்டிகளிலும், இயக்கங்களிலும் ஹான்ஸ் முக்கிய அங்கம் வகித்தார். அவர் சோஷலிஸ்ட் இண்டர்நேஷனலின் முதல்செக்ரட்டரி ஜெனரல் ஆகப் பணியாற்றினுர். அந்த நிறுவனத்தின் பல்வேறு காரியங்களுக்கு வழிகாட்டியாக நின்று, அவற்றை அர்த்தத்தோடு செயல்படுத்த உதவினுர். இவர் சோஷலிஸ்ட் இண்டர் நேஷனல் செக்ரட்டரி ஜெனரலாகப் பதவி ஏற்கும்வரை அந்த நிறுவனம் ஒரு இணைப்புச் செயல் ஸ்தாபனமாகச் செயல் பட்டதே தவிர அந்த ஸ்தாபனத்தின் சம்பந்தமில்லாத, செயல் திறனில்லாத தீர்மானங்களைச் செயல்படுத்த அதனுல் இயலவில்லை. உலகின் எந்தப் பிரச்னையையும் இந்த ஸ்தாபனம் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளவில்லை. இதன் அலுவலகம் லண்டனிலில்லை. இதன் தலைவர்கள் வெறும் தபாலாபீஸ் வேலைகளை மட்டுமே செய்து வந்தார்கள். ஆனல், இந்தப் பொறுப்பை ஹான்ஸ் ஏற்றுக் கொண்டவுடன் இந்த ஸ்தாபனம் குறிக்கோள்களை கருத்தில் கொண்டு, அர்த்தமுள்ள முறையில் செயல்பட ஆரம்பித்தது. உலகப் பிரச்னைகளில் இந்த ஸ்தாபனத்தின் அபிப்பிராயங்கள் ஏற்றுக் கொள்ளப் பட்டன. இதனுல் ஐரோப்பாவில் உள்ள சோஷலிஸ்ட் கட்சிகளையும், சோஷலிஸ்ட் அரசாங்கங்களையும் இவர் ஊக்குவிக்க முடிந்தது.

இவருடைய உற்சாகமான முயற்சிகளால் இந்த ஸ்தாபனம் சர்வாதிகாரத்தையும், காலனி ஆதிக்கத்தையும் எதிர்த்துப் பாடுபட்டு வந்த இயக்கங்களை ஆதரித்து, மக்களுக்கு உதவி செய்ய ஆரம்பித்து, தனது பெயரையும், புகழையும் உயர்த்திக் கொண்டது. இவரது முயற்சியால்உலக நாடுகளின் நிலை—அது சிசிலி போர்ச்சுகல், பங்களாஷதேஷ். எந்த நாடாக இருந்தாலும்—தெளிவாகப் புரிய ஆரம்பித்தது. பங்களாதேஷ் விவகார சமயத்தில் ஹான்ஸ் அந்த நாட்டுக்கு மிகவும் உதவி செய்தார். முஜிபுர் ரஹமானையும், இந்த விவகாரத்தில் இந்தியா எடுத்துக் கொண்டிருந்த நிலையையும் அவர் ஆதரித்தார். இந்தியா—பாகிஸ்தான் போருக்குச் சற்று

முன்பாக 1970–ல் அவர் இந்தியா வந்திருந்தார். இந்திய அரசுக்கும், பங்களா தேஷுக்கும் ஆதரவாக உலக நாடுகளின் அபிப்பிராயத்தைத் திருப்பும் வகையில் நிரம்ப உதவி செய்தார். அவர் இந்தியா வந்தபோது இந்திய சோஷலிஸ்ட் கட்சியோடு தமக்கிருந்த உறவைப் புதுப்பித்துக் கொண்டார். இந்திய மக்களோடும் சோஷலிஸ்ட் கட்சியோடும் உணர்ச்சி பூர்வமாக உறவு கொண்டார். ஜார்ஜ் பெர்னாண்டஸுக்கும் ஹான்ஸுக்குமிடையே 'பாசம்' என்று சொல்லுமளவிற்கு உறவு வளர்ந்தது.

இதை அடிப்படையாகக் கொண்டு, அந்த இண்டர்நேஷனல் சோஷலிஸ்ட் மாநாட்டின்போதும், அதற்குப் பிறகும் ஹான்ஸ் நமக்கு மிகவும் உதவியாக இருந்தார். இந்தியாவில் இந்திரா காந்திக்கு எதிராக உள்ள அபிப்பிராயங்களுக்கு வெளிநாடுகளில் ஆதரவு கிடைத்ததற்கும், நமது நிலைகளை அவர்கள் சரியாகப் புரிந்து கொள்வதற்கும் உதவி செய்தவர் என்று யாராவது ஒருவரைக் குறிப்பிட வேண்டுமென்றால் சந்தேகத்துக்கு இடமில்லாமல் அவர் ஹான்ஸ்ஜானிட்ஸ் செக்தான் எனலாம். இவரது முயற்சியால்தான் எனக்கு பிரஸ்ஸல்ஸ் நகரில் பெல்ஜிய சோஷலிஸ்டுகளைச் சந்திக்கவும், அவர்கள் கூட்டத்தில் பேசவும் வாய்ப்புக் கிடைத்தது. அவர் அடிப்படையாகவே முயற்சிகள் செய்து, செய்த காரியங்களில் நான் சொன்னதையெல்லாம் அவர்களால் சரியானமுறையில் எடுத்துக் கொள்ள முடிந்தது.

சோஷலிஸ்ட் இண்டர்நேஷனல் ஸ்தாபனத்தின் பத்திரிகையான 'சோஷலிஸ்ட் அஃபேர்ஸ்'களில் இந்தியாவில் அவசரநிலை பற்றியும், இந்திரா காந்தி எடுத்திருக்கும் பல அடக்குமுறை நடவடிக்கைகளை பற்றியும் ஒரு கட்டுரை வெளிவரச் செய்தார். அந்தப் பத்திரிகைகளின் ஜுலைமாத இதழில் முதல் பக்கத்தில் ஜார்ஜ் பெர்னாண்டஸின் வேண்டுகோள் ஒன்று வெளியாகி இருந்தது. அதில் அவர், உலக நாடுகளுக்கும், சோஷலிஸ்ட் கட்சிக்கும் தாங்கள் இந்திரா காந்தியின் செயல்களையும் நடவடிக்கைகளையும்

எதிர்ப்பதாகவும், எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யக் கோரும்படியும், சட்டப்படியும், சட்டத்தை மீறியும் ஜனநாயக உரிமைகளை மக்களுக்குத் திரும்ப அளிக்கும்படியும், இந்திரா காந்தியை வற்புறுத்தும்படியும் கேட்டுக் கொண்டிருந்தார். அந்தக் கட்டுரையில் இந்தியாவில் உள்ள நிலைகளை விளக்கி, இந்திரா காந்தி தொடர்ந்து நெடுநாட்களுக்குச் சர்வாதிகாரியாக இருக்க முடியாது என்றும் குறிப்பிட்டு இருந்தார்.

சோஷலிஸ்ட் இண்டர் நேஷனல் ஸ்தாபனம் முதலில் எனக்கு 15 நிமிடங்களே ஒதுக்கியது. ஆனல் பிறகு சுமார் இரண்டுமணி நேரம், அதாவது கிட்டத்தட்ட காலை நேரம் முழுவதும் எனக்காகச் செயல்பட்டது. நான் கூறியதை அக்கறையோடு கேட்டு, பிறகு அதைப்பற்றி விவாதித்தார்கள். இந்தியா முதலில் நிகழ்ச்சி நிரலில் இல்லை. பிறகு அது சேர்த்துக் கொள்ளப்பட்டு விவாதத்தில் முதலிடம் கொடுக்கப் பட்டது.

நான் லண்டனுக்குக் கிளம்பும் முன்பாக ஒரு சிறு பிரசுரத்தைத் தயாரித்திருந்தேன். அதன் பெயர், 'இந்திராவின் இந்தியா-சர்வாதிகாரத்தின் வடிவம்'. இதில் இந்திரா காந்தி அமல் செய்த அவசர நிலையின் ஆரம்பம், வளர்ச்சி, அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு ஏற்படுத்தப்பட்ட பல திருத்தங்கள், எதிர்க்கட்சியை ஒடுக்க, இந்திரா காந்தியின் கைக்கு அடங்கிய பார்லிமெண்ட் கொண்டு வந்த சட்டங்கள், சட்டப்படியும் சட்டத்தை மீறியும் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் முதலியவைபற்றி இதில் குறிப்பிடப்பட்டிருந்தன. இதில் இஷ்டப்படி எடுக்கப்பட்ட நடவடிக்கைகள், அவிழ்த்து விடப்பட்ட கொடுங்கோலாட்சி முறைகள் முதலியனவும் சித்தரிக்கப்பட்டிருந்தன. இந்தப் பிரசுரத்தில், எல்லா ஜனநாயக உரிமைகளையும் இழந்து நின்ற மக்களைக் கொண்ட நாடாக இந்தியா சித்தரிக்கப் பட்டிருந்தது. எதிர்க்கட்சிக்கு எதிராக இந்திரா காந்தி செய்து வந்த பிரச்சாரமும், அரசு செய்து விட்டதாகச் சொல்லப்பட்ட சாதனைகளும் எவ்வளவு

பொய்யானவை என்பதை நான் அதில் அம்பலப்படுத்தியிருந்தேன்.

முதலில் நான் இந்தப் பிரசுரத்தை என்னேடு எடுத்துப் போக வேண்டாம் என்றும், நம்பகரமான ஒருவரிடம் கொடுத்து நான் லண்டன் போய் சேரும் சமயத்துக்கு, அது கிடைக்கும்படியாகச் செய்து கொள்ளலாம் என்றும் நினைத்திருந்தேன். கடைசி நேரத்தில், ஆபத்தாக இருந்தாலும் பரவாயில்லை என்று ஒரு பிரதியைக் கையோடு கொண்டு வந்தது நல்லதாகப் போயிற்று. அப்படிச் செய்யாமலிருந்திருந்தால் சோஷலிஸ்ட் இண்டர்நேஷனல் கூட்டத்திலும், அதற்குப்பிறகு ஐரோப்பிய தலைநகரங்களில் நான் சந்தித்த மற்றவர்களுக்கும் வினியோகிக்க முடியாமல் போயிருந்திருக்கும்.

ஹான்ஸ் நம்முடைய இயக்கத்தின் வளர்ச்சிக்கு எடுத்துக் கொண்ட அக்கறை எவ்வளவு என்பது, நான் பிரான்ஸுக்குப் புறப்படுமுன் லண்டனில் தங்கியிருந்த சில மணி நேரத்திலேயே, நான் கொண்டு போயிருந்த பிரசுரத்தின் பல பிரதிகளை அச்சடித்து வாங்கிவிட்டார் என்பதிலிருந்து நன்கு புரிந்தது. கூட்டத்துக்குப் பிறகு சில தினங்களில் மேலும் சில பிரதிகளை அச்சடித்தோம். பின்னர் அதை ஜெர்மன், பிரான்ஸ், இத்தாலி, ஜப்பானிய மொழிகளில் மொழி பெயர்த்து உலகின் பல நாடுகளிலும் வினியோகித்தோம். இந்த அறிக்கையை லண்டனில் உள்ள ஜெ.பி.விடுதலை கமிட்டி சீர்படுத்திக் கொடுத்தது. இந்திராகாந்தி தனக்குச் சாதகமாகக் கிளப்பி விட்டிருந்த பிரச்சாரத்தை முறியடிக்கப் பெருவாரியாக உதவியது. இந்திராகாந்தி ஆட்சியின் முடிவு காலம் வரை உலகில் உள்ள மற்ற நாடுகளிலுள்ளோர், இந்தியாவில் என்ன நடக்கிறது என்பது பற்றிய இந்திரா காந்தியின் பிரச்சாரத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்ள இயலவில்லை என்றல், அதற்கு முக்கிய காரணம், அவர்கள் நாங்கள் கொடுத்திருந்த அந்தப் பிரசுரத்தை அதிகாரப் பூர்வமான ஒரு அறிக்கையாக அவர்கள் எடுத்துக் கொண்டது

தான். இந்தப் பிரசுரங்கள் மாநாட்டுப் பிரதிநிதிகளின் மனதில் ஏற்பட்டிருந்த சந்தேகங்களைத் தெளிவிக்கவும், இந்திராகாந்தி எடுத்த நடவடிக்கைகளின் சந்தேகத்தன்மை யையும், அவர் தன்னை ஒரு சர்வாதிகாரியாகவே நிலை பெறச் செய்து கொண்டுவிட்டார் என்பதை நம்பச் செய்யவும் பெரிதும் உதவியது. நான் பேசியதைக் கேட்ட பிறகு மாநாடு கீழ்க்கண்ட தீர்மானத்தை நிறைவேற்றியது :—'இந்த சோஷலிஸ்ட் இண்டர்நேஷனல் மாநாடு இந்திய சோஷலிஸ்ட் கட்சியின் தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸிடமிருந்து வந்த அறிக்கையைப் பெற்றுக் கொண்டது. தொடர்ந்து, அதைக் கொண்டு வந்தவர் கூறிய விளக்கங்களையும் கேட்டது. முப்பது நாட்களில் சிறையில் அடைக்கப்பட்டு சமீபத்தில் விடுதலை செய்யப்பட்ட ஜெயப்பிரகாஷ் நாராயணனின் உடல்நிலை, இந்திய அரசாங்கத்தின் அறிக்கைகளுக்கு மாறாக, அவர் உயிரைப்பற்றியே பயப்படும் அளவுக்கு மோசமாகிவிட்டது குறித்து இந்த மாநாடு கவலை தெரிவிக்கிறது. தவிரவும் (1) பல்லாயிரக்கணக்கான அரசியல் ஊழியர்கள், தொழிற் சங்கவாதிகள், பத்திரிகையாளர்கள், மாணவர்கள், அறிஞர் கள் இவர்கள் கைது செய்யப்பட்டு, இன்னமும் சிறையிலிருக் கிறார்கள். தினம் தினம் புதிது புதிதாகக் கைது செய்யப் படுகின்றனர்.

(2) இவர்களில் பல கைதிகள் மனித நிலைக்குக் கேவல மான முறைகளில் நடத்தப்படுகிறார்கள். நீதி மன்றங்களுச்கு அப்பீல் செய்யும் உரிமைக்கு மறுக்கப்படுகிறார்கள்.

(3) எதிர்கட்சிகள் சட்டப்படி தடை செய்யப்படவில்லை என்றாலும், அவர்கள் சரியாக வேலை செய்ய முடியாதவாறு தடுக்கப்பட்டு விடுகிறார்கள்.

(4) ரேடியோ, பத்திரிகை போன்ற செய்தி ஸ்தாபனங் கள் கடுமையான தணிக்கை விதிகளுக்கு உட்படுத்தப்படுவது மட்டுமின்றி, அவர்கள் அரசாங்கம் அனுப்பும் உண்மை கலப் பில்லாத அறிக்கைகளையும், விளக்கங்களையும் பிரசுரிக்க வேண்டும் என்று பலவந்தப்படுத்தப்படுகிறார்கள்.

(5) பேசக்கூடிய உறுப்பினர்கள் எல்லாம் கைது செய்யப்பட்டுவிட்ட நிலையில் மக்களின் அடிப்படை உரிமைகளைப் பறிக்கும் வகையில், பல்வேறு அடக்குமுறைகளைக் கொண்டு வரும் வகையில் பல சட்டங்களையும், அரசியல் நிர்ணயச் சட்டத்தையும் ஒரு ரப்பர் ஸ்டாம்ப் பார்லிமெண்ட் திருத்தி விட்டது.

(6) தொழிலாளர்களுடைய உரிமையான, சங்கம் அமைத்துக் கொள்வது, வேலை நிறுத்தம் செய்வது, அதற்கான ஆயத்தங்களைச் செய்வது போன்ற நியாயமான தொழிற்சங்க நடவடிக்கைகளில் ஈடுபடும் சுதந்திரத்தை அரசு இஷ்டம் போல் பறித்துவிட்டது.

மேற்கூரிய இந்த அடிப்படை உரிமைகளையும், சிவில் உரிமைகளையும் மீறும் செயல்களை இந்த மாநாடு கண்டிக்கிறது.

இந்தியாவில் அவசரநிலையை ரத்து செய்யவும், பத்திரிகை தணிக்கை முறையை எடுத்துவிடவும், விசாரணை இல்லாமல் காவலில் வைக்கப்பட்ட அரசியல் தொழிற்சங்கக் கைதிகளை விடுதலை செய்யவும், திரும்பவும் மக்களுக்கு எல்லாவித உரிமைகளைக் கிடைக்கும்படி செய்யவும், இந்திய அரசை இந்த மாநாடு கேட்டுக்கொள்கிறது.

ஜனநாயகத்துக்காகவும், சோஷலிஸத்துக்காகவும் இந்தியாவில் போராடும் சோஷலிஸ்ட் கட்சிக்கும், மற்ற இயக்கங்களுக்கும் தனது ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறது.

இந்திய சோஷலிஸ்ட் கட்சிக்கு இந்த விஷயத்தில் தங்களால முடிந்த எல்லா உதவிகளையும் அளிக்கும்படி சக கட்சிகளைக் கேட்டுக் கொள்கிறது

இந்தத் தீர்மானமானது இதுவரை இந்த அமைப்பு நிறைவேற்றிய மிகக்கடுமையான தீர்மானங்களில் ஒன்று. இதனால், இந்த அமைப்பும், உலகின் பல நாடுகளிலும் உள்ள சோஷலிஸ்ட் கட்சிகளும் (இவற்றில் சில ஆளுங்கட்சிகளாக இருக்கின்றன) நமக்கு ஆதரவு தருவதாக வாக்களித்தன.

எந்தவித நிபந்தனையுமின்றி அந்த அமைப்பு நமக்கு உதவுவ தாக ஏற்றுக் கொண்டது. லண்டனில் உள்ள ஜெ. பி. விடுதலை கமிட்டிக்கு மற்ற சோஷலிஸ்ட் கட்சிகளிடமிருந்து பண உதவி பெற்றுக் கொள்ள உதவியது. இந்திரா காந்தி ஏவிவிட்ட பிரமாண்டமான பிரச்சார இயக்கத்தைச் சமாளிக்க சிறுசிறு தொகைகளாக நன்கொடைகளை வசூலித்துப் பிரச்சாரம் செய்து கொண்டிருந்த ஜெ. பி. விடுதலை கமிட்டி யால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. இதற்குப் பின்னர், இந்தக் கமிட்டிக்கு உலகின் பல சோஷலிஸ்ட்களிடமிருந்தும் பல்வேறு அமைப்புகளிடமிருந்தும், தொழிற்சங்கங்களிட மிருந்தும் ஆரம்பத்தில் எதிர்பார்த்ததற்கும் மேலாகவே கிடைத்த பண உதவிக்குக் காரணமே பிரஸ்ஸல்ஸ் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம்தான்.

ஸ்தாபன ரீதியாக ஜெ. பி. கமிட்டிக்கு உதவுவதற்கு இந்தத் தீர்மானம் உதவியதோடு, அங்கு வந்த சோஷலிஸ்ட் கட்சிப் பிரதிநிதிகளின் மூலமாகப் பல பேர்களை நேரில் சந்திக்க வாய்ப்பும் கிடைத்தது. இந்தத் தொடர்புகள், எவ்வளவோ எதிர்ப்புகளுக்கிடையே உறுதியோடு நமது இயக்கத்தை நடத்திச் செல்ல நல்ல உற்சாகத்தைக் கொடுத் தது. இந்தத் .தொடர்புகள் என்னுடைய பிரயாணங்களின் போது ஐரோப்பா, இங்கிலாந்து, வட அமெரிக்கா, ஜப்பான் இங்கெல்லாமிருந்த சோஷலிஸ்ட் கட்சியின் பெரிய தலைவர் களோடு பேச்சு வார்த்தைகள் நடத்தச் சௌகர்யமாக இருந்தன. உலக நாடுகளிலுள்ள பெரிய பத்திரிகைகளின் ஆசிரியர்களோடு தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு நமது இயக்கத்தின் நியாயத்தன்மையையும், உண்மையையும் நிலை நிறுத்த இது பெரிதும் உதவியது. அவசரநிலை காலம் முடியும் வரையிலும் இந்திராகாந்தி எவ்வளவோ பிரச்சாரம் செய்தும் இந்தச் செய்தி ஸ்தாபனங்கள் அபிப்பிராயங்களை ஏற்படுத்துவதிலும் நமது பக்கமே நின்றார்கள்.

இந்த பிரஸ்ஸல்ஸ் கூட்டத்திற்குப் பிறகு தான், ஸ்வீடன், பின்லாந்து, மேற்கு ஜெர்மனி, ஆஸ்திரேலியா, ஸ்விட்சர்

லாந்து, இத்தாலி, பிரான்ஸ் போன்ற ஐரோப்பிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்தேன். பிறகு, லண்டன் திரும்பினேன். இந்த நாடுகளில், சோஷலிஸ்ட் கட்சித் தலைவர்கள், தொழிற் சங்கத் தலைவர்கள் இவர்களை மட்டுமின்றி, பத்திரிகையாளர் களையும், மக்களிடையே அபிப்பிராயங்களை ஏற்படுத்தக் கூடியவர்களையும் சந்திக்க முடிந்தது. இந்திராவிற்கு எதிராக, உலக நாடுகளின் அபிப்பிராயங்களைப் பலப்படுத்த, இந்தத் தொடர்புகள் சொந்த அடிப்படையில் ஏற்படுத்திக் கொள்ளப்பட்டன.

இந்த ஆறு வார கால சுற்றுப் பயணத்திற்கு 3800 டாலர் கள் செலவாயிற்று. விமான டிக்கெட் 2100 டாலர், ஐரோப்பியப் பயணத்துக்கு 700 டாலர், ஹோட்டல், டெலி போன், டாக்ஸி, மற்றச் செலவுகள் 1000 டாலர். பல இடங் களில் நண்பர்களோடும், பல ஸ்தாபனங்களிலும் விருந்தின ராகத் தங்கினேன் என்பது உண்மை. இருந்தாலும்கூட, இவ் வளவு குறைந்த செலவில் சுமார் ஆறு வார காலம்உலகின் பல நகரங்களுக்கும் போய் வந்திருக்க முடியாது. நமது தேசத் தூதர்களும், அரசின் தூதுக் குழுக்களும் இதைவிட நிறையச் செலவு செய்கிறார்கள். இதைவிட நிறையச் சௌகர்யங்களை யும், வசதிகளையும் அனுபவிக்கிறார்கள். இவர்களுடைய பயணத் திட்டங்களும் மற்ற ஏற்பாடுகளும் முன்கூட்டியே செய்யப்படுகின்றன. இவ்வளவு செலவு செய்தும் இவர்கள் சாதிப்பது என்னவோ மிகவும் குறைவுதான். இதே சமயத்தில் இதேமாதிரி காரியத்துக்காக இந்திரா காந்தியால் வெளிநாடு களுக்கு அனுப்பப்பட்டவர்கள். இதைவிட அதிகப் பணம் செலவு செய்து விட்டு குறைவாகவே சாதிக்க முடிந்தது. எங்க ளிடமிருந்த பணத்தட்டுப்பாட்டை, எடுத்த காரியத்தைச் செய்து முடிக்கும் ஆர்வமும், ஈடுபாடும் சரிக்கட்டி விட்டது. நமது தூதுக் குழுக்களும் தூதரக அதிகாரிகளும் பணம் போத வில்லை என்று புகார் செய்து கொண்டிருப்பதைவிட, நாட்டுக் காகத் தங்களால் அதிக பட்சம் முடிந்ததைச் செய்யக் கற்றுக் கொண்டால் எவ்வளவோ நல்லதாக இருக்கும்.

# 8. உலகம் முழுவதும் எதிர்ப்பை ஏற்படுத்த...

ஐரோப்பியப் பயணத்தை முடித்துக்கொண்டு லண்டன் திரும்பினேன். லண்டனில் ஜெ. பி. விடுதலை கமிட்டியினர் தங்கள் நடவடிக்கைகளை விரிவுபடுத்த சோஷலிஸ்ட் கட்சிகளிடமிருந்தும், தொழிற்சங்கங்களிடமிருந்தும், பண உதவியை எதிர்பார்த்தனர். அதுவரை நன்கொடைகள் மூலமாகவே செய்யப்பட்ட காரியங்களை ஸ்தாபன ரீதியாக்கி, அதன் மூலமாக ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் ஆரம்பமாகியிருந்த அம்மாதிரியான அமைப்புகளின் செயல்களை ஒருங்கிணைக்க வேண்டியிருந்தது.

ஐரோப்பியப் பயணத்தை முடித்துக்கொண்டு நிறையப் பணம் திரட்டி விடலாம் என்ற பெருத்த நம்பிக்கையோடு திரும்பி வந்தவுடன் இந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. என் பயணத்தின்போது நான் சந்தித்தவர்களிடம் எல்லாம் லண்டனில் உள்ள கமிட்டி அவர்களோடு தொடர்புகொண்டு அவ்வப்போது செய்திகளைத் தந்து கொண்டிருக்கும் என்று சொல்லியிருந்தேன். லண்டன் கமிட்டிக்கு இந்தியாவிலிருந்து அவ்வப்போது செய்திகளையும், இங்குள்ள சூழ்நிலைகளைப் பற்றிய விளக்கங்களையும், சர்ச்சைகளையும் தந்து கொண்டிருக்கலாம் என்பது என்னுடைய அப்போதைய திட்டம். இவற்றை எல்லாம் ஒருங்கிணைத்து நான் கொடுத்திருந்த பட்டியலின்படி எல்லோருக்கும் அவர்கள் அனுப்ப வேண்டும். அவர்கள் அதைத் தேவைப்படி உபயோகித்துக் கொள்வார்கள். லண்டன் கமிட்டிக் கூட்டத்தில், பணத்தட்டுப்பாடு இருக்காது என்றும், தொடர்ந்து 'ஸ்வராஜ்' பத்திரிகையைக்

கொண்டுவர முடியும் என்றும், இது தவிர பல்வேறு இடங்களில் நடைபெறும் காரியங்களை ஒருங்கிணைக்க ஒரு அலுவலகத்தை யும் ஏற்படுத்திக் கொள்ளலாம் என்றும் நான் அவர்களுக்கு உறுதி கூறியிருந்தேன்.

ஆனால், அப்போது நான் எதிர்பார்த்தவையெல்லாம் நடக்கவில்லை. டச்சு சோஷலிஸ்ட் கட்சி, ஜெர்மனிய ரயில்வே ஊழியர்கள் இவர்களிடமிருந்து வந்த ஐயாயிரம் டாலர் நன்கொடையைத் தவிர வேறு எதுவும் கிடைக்கவில்லை. அமெரிக்கா, கனடா, ஜப்பான் போன்ற நாடுகளிலிருந்து நிறைய வரும் என்று நான் எதிர்பார்த்தது பொய்யாகி விட்டது. ஆகவே, சிறுசிறு நன்கொடைகளின்மூலம் வசூலான பணத்தை வைத்துக்கொண்டு கமிட்டி, மிகவும் சிக்கனமாகத் தனது நடவடிக்கைகளைக் கவனித்துக் கொள்ளும்படியாக இருந்தது.

பண ஆதரவு திருப்திகரமாக இல்லையென்றாலும், என்னுடைய அயல்நாட்டு விஜயமும், நான் ஏற்படுத்திக் கொண்ட தொடர்புகளும் நான் எதிர்பார்த்ததைவிட அதிக மாகவே பயன் தரும் வகையில் அமைந்தன. நான் ஐரோப்பிய நாடுகளுக்குப் போய் வந்ததைத் தொடர்ந்து அந்த நாடுகளின் பத்திரிகைகளில் பல கட்டுரைகள் வெளியாகின. இதுமட்டு மின்றி நான் ஏற்படுத்திக் கொண்ட தொடர்புகளால் லண்டனில் இருந்த ஜெ. பி. கமிட்டி, இந்திராவின் அரசாங் கத்துக்கு எதிரான அபிப்பிராயங்களை உருவாக்கவும், அவர்கள் செய்த பிரச்சாரத்தை முறியடிக்கும் வகையில் எதிர் பிரச்சார மும் செய்யவும் முடிந்தது. என்னைப் பேட்டி கண்டு எழுதப் பட்ட பேட்டிக் கட்டுரைகளும் பத்திரிகைகளில் வெளியாகின. ஏற்கனவே தெரிந்த சிலரைத் தவிர மற்றவருக்கு உண்மையில் நான் யார் என்று புரியவில்லை. அங்கிருந்த தூதரகங்கள் நான் யார் என்று கண்டுபிடிக்க பகீரதப் பிரயத்னங்கள் செய்தன.

ஜப்பான், தென் கிழக்கு ஆசிய நாடுகளைத் தவிர மற்ற நாடுகளில் நான் பயணம் செய்தபோது, என் பெயர் கிருஷ்ண

ராவ். அந்தப் பெயரில்தான் நான் இண்டர்நேஷனல் சோஷலிஸ்ட் சங்கத்துக்கும் மற்ற அமைப்புகள், அரசியல் கட்சிகள், செய்தித்தாள்கள், அரசாங்கங்களின் தலைவர்கள் இவர்களுக்கெல்லாம் அறிமுகப்படுத்தப்பட்டேன். அவர்களைப் பொறுத்தமட்டில் என்னுடைய உண்மைப் பெயரைப்பற்றி அக்கறையில்லை. நான் ஜார்ஜ் பெர்னுண்டஸால் அனுப்பப் பட்டவன். சோஷலிஸ்ட் இன்டர்நேஷனலிடமிருந்தும், தொழிற்சங்கங்கள், எனக்குத் தெரிந்த பத்திரிகை ஆசிரியர்கள் இவர்களிடமிருந்தெல்லாம் கடிதங்களைக் கொண்டு போயிருந் தேன். அதுபோதும் அவர்களுக்கு. விமானங்களில் பயணம் செய்யும்போது என் சொந்தப் பெயரிலேயே பதிவு செய்து கொண்டேன். என் சொந்த பாஸ்போர்ட்டையே உபயோகித் தேன். என்னை அங்கு வரவழைத்தவர்கள் எனக்கு இட வசதி களை ரிசர்வ் செய்துவிட்டதால், ஓட்டல்களில் எனக்கு எந்தத் தொந்தரவும் இருக்கவில்லை. ஆனுல் நியூயார்க்கில் என் நண்பர் ஒருவர் எனக்காக ஹௌடான் ஓட்டலில் தங்குவ தற்கு ஏற்பாடு செய்திருந்தார். அவர்கள் என் பாஸ்போர்ட் டைக் கேட்டதால், என் சொந்தப் பெயரிலேயே தங்கினேன். அதிருஷ்டவசமாக நான் அங்கு தங்கியிருந்ததை என நண்பர் கள் மட்டுமே தெரிந்துகொண்டார்கள். சிக்காகோவில் இருந்த 'ஜனநாயகத்துக்காக இந்தியர்கள்' சங்கத்தைச் சேர்ந்த நண்பர்களிடம் என் நிகழ்ச்சி நிரலைச் சொன்னேன். சிகாகோ அருகில் லான்சிங் என்ற இடத்தில் வசித்த நண்பர் ஸ்ரீகுமார் போதார் என்பவரையும் என்னைச் சந்திக்க சிகாகோவிற்கு வரச்சொன்னேன். அவர்கள் எல்லோருக்கும் நான் கிருஷ்ணு ராவ் என்றுதான் தெரியும். ஆகவே, அவர் அந்தப் பெயர் சொல்லிக் கூப்பிட்டபோது 'இல்லை' என்று சொல்லிவிட்டார் கள். புத்திசாலியான அவர், எந்த அறையிலிருந்து தன் நம்ப ரைக் கூப்பிட்டார்களோ அந்த அறையில் உள்ளவர்களிடம் கொடுக்கச் சொல்லி பேசிவிட்டார். இருந்தும் அவர் என்னைக் கண்டு பிடித்ததை மற்ற நண்பர்களுக்குச் சொல்லவில்லை. சிகாகோவில் நான் சந்தித்த ஆனந்தகுமார் என்பவர் என்னை அடையாளம் கண்டுவிட்டார். இவர் டாக்டர் லோஹியாவின

நெருங்கிய நண்பரான ரங்கநாத்தின் மருமகன். அவர் சின்னப் பையனுக இருந்தபோதே என்னைப் பார்த்திருக்கிறுர்.

மான்ட்ரீல் நகரில் சாட்டுவாரியர் என்ற மிகச் சிறந்த விடுதியில் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். இங்குதான் ராஜியத் தூதர்கள் கூடிப் பேசுவார்கள். நான் அங்கு போனதும், கனடா தொழிற்கட்சி உறுப்பினர்கள் சிலர் என்னைப் பார்க்க வந்தார்கள். அவர்களோடு வந்தவர் முன்னுள் எதிர்க்கட்சித் தலைவர் மிஸ்டர் லெவிஸ் என்பவர் மான்ட்ரியாவில் இருந்தபோது எனக்கு மாட்டிக் கொண்டு விடுவோமே என்ற அச்சம் இருந்துகொண்டே இருந்தது. சாட்டுவாரியர் விடுதியில் மிகப்பெரிய 'லாபி'யும், அதன் ஒரு பக்கம் லிப்டுகளும் உண்டு. நண்பர்களைச் சந்திக்க லிப்டில் இறங்கி வந்தபோது, லாபியின் மறுபக்கம் நமது ஹைகமிஷனர் உமாசங்கர் பாஜ்பாயைப் பார்த்தேன். அவருக்கு என்னை நன்ருகத் தெரியும். கொஞ்ச நேரத்தில் நான் பிரபல மான தொழிற்சங்கத் தலைவர்களுடனும், அரசியல் வாதி களோடும் இருந்ததைப் பார்த்திருந்தால் அவர் ஒரே முடிவுக் குத்தான் வந்திருக்க வேண்டும். என் நடவடிக்கைகள் அதோடு முற்றுப் பெற்றிருக்கும். நல்ல வேளையாக அவர் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்ததால், கூடிப் பேசுவதற்காக என் நண்பர்களை அழைத்துக் கொண்டு அவசர அவசரமாக பக்கத் தில் உள்ள பார்லிமெண்ட் கட்டிடத்துக்குப் போய்விட்டேன்.

பாரிஸில் இந்திய தூதர் வசித்து வந்த அதே கட்டிடத்தில் தங்கியிருந்த என் நண்பர் ஒருவரைப் பார்க்கப் போயிருந்தேன் அவர்கள் இருவரும் நண்பர்கள். அவசரநிலைப் பற்றிய என் நண்பரின் கருத்துக்களும், இந்தியாவில் உள்ள எதிர்க்கட்சிக்கு ஆதரவாக அவருடைய நடவடிக்கைகளும் நமது தூதருக்குத் தெரியும். லிப்டில் நானும் நமது தூதரும் சந்தித்து கொண் டோம். நல்ல வேளையாக எல்லா இந்தியத் தூதர்களையும் போலவே அவருக்கும் சக இந்தியர்களோடு பேச நேரமில்லை. அவர்களோடு பேசுவதை மதிப்புக் குறைவாகவும் நினைப்பவர்.

பொய் சொல்ல வேண்டிய ஒரு இக்கட்டான நிலையிலிருந்து இது என்னைக் காப்பாற்றிவிட்டது.

இதே மாதிரி பல சந்தர்ப்பங்களில் நான் மயிரிழையில் தப்பித்திருக்கிறேன். அவை எல்லாமே எழுதுமளவிற்கு சுவாரஸ்யமில்லாதவை. ஒரே ஒரு நிகழ்ச்சி மட்டும் சிரிப்பை வரவழைக்கக்கூடியது. நம்பமுடியாத அளவுக்கு நடந்தது.

வாஷிங்டனில் ஒரு டாக்ஸியைக் கூப்பிடுவதற்காக பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தபோது, டார்ஸி விட்டாச்சி என்ற பிரபலமான இந்தியப் பத்திரிகையிலிருக்கும் எனக்குப் பொதுவான ஒரு நண்பரை திடீரென்று நேருக்கு நேராகச் சந்தித்தேன். நானும் டாஸியும் கிட்டத்தட்ட இரட்டையர்கள் மாதிரியே இருப்போம். அவ்வளவு உருவ ஒற்றுமை. இருவரையும் தவறுகப் புரிந்துகொண்டதால் பல வேடிக்கைகள் நடந்திருக்கின்றன. இந்த வாஷிங்டன் நண்பரும் என்னைத் தவறுகப் புரிந்துகொண்டு 'டார்ஸி' என்று கூப்பிட்டார். நான் பதில் பேசாமலிருந்ததால் 'நீங்கள் ரெட்டியா?' என்ருர். நான் 'இல்லை' என்றேன். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. குழம்பிப் போய் "ஒரே மாதிரியாக மூன்று பேர்கள் இருக்க முடியாதே!" என்ருர். சற்றுமுன்பு ரெஸ்டாரண்டில் தான் சாப்பிட்ட மதுவினுல் ஏற்பட்ட கோளாறு இது என்று நினைத்துக்கொண்டு போயிருக்கலாம். ஜப்பானில், ரயில்வே ஊழியர் சங்கத்தைச் சேர்ந்தவரான நம்பியார் என்ற பெயரில் பிரயாணம் செய்தேன். ஜப்பானில் என்னைப்பற்றி வெளியான செய்திகள் எல்லாமே நம்பியார் என்ற பெயரில் வெளியாகின. இருந்தாலும் பத்திரிகையாளர் சங்கத்தில் 'ஜப்பான் டைம்ஸ்' பத்திரிகையின் ஆசிரியர் ஓகாவைச் சந்திக்கப் போவதைக் குறித்து பயந்துகொண்டே இருந்தேன். நமது தூதரகத்தின் பத்திரிகை காரியதரிசி எப்போதும் அங்கு இருந்துகொண்டே இருப்பார். நல்லவேளையாக நான் ஓகாவைச் சந்தித்து அவர் பத்திரிகைக்கும், அதன் மூலம் மற்ற ஜப்பானியப் பத்திரிகைகளுக்கும் இந்திய நிலைமைகளைப்பற்றி விளக்கும்போது அவர் அங்கு வரவில்லை.

யாரும் கண்டு பிடிக்காமல் தப்பித்துக் கொள்ளவேண்டிய எல்லா முன் ஜாக்கிரதை நடவடிக்கைகளையும் நான் கடைப் பிடித்தேன் என்று சொல்ல முடியாது. அயல்நாடுகளில் கைதாகாமல் நான் தப்பியதே நமது தூதரகங்களின் திறமை யின்மையால்தான்.

என் வட அமெரிக்கப் பயணத்தின்போது நான் நியூயார்க் சிக்காகோ, வாஷிங்டன், ஒட்டாவா இங்கெல்லாம் போயிருந் தேன். நான் அங்கு செய்த செயல்முறைகளும் குறிக்கோள் களும் ஐரோப்பாவில் செய்த மாதிரிதான். பத்திரிகை ஆசிரியர்கள், தொழிற்சங்கத் தலைவர்கள், அபிப்பிராயங்களை ஏற்படுத்தும் அரசியல்வாதிகள், சில அரசாங்க ஸ்தாபனங்கள் இவர்கள் தான், என்னுடைய இலக்காக இருந்தனர். அம்மாதிரி யான பலரை நான் சந்தித்தேன். அவர்கள் எல்லோருமே நமது போராட்டங்களைப்பற்றி காது கொடுத்துக் கேட்டார்கள். அனுதாபம் காட்டினார்கள். ஆனால், உதவி என்ற அளவில் பார்த்தால், பத்திரிகையாளர்களைத்தவிர, மற்றவர் விஷயத் தில் இது குறைவாகவே இருந்தது. இந்த மாதிரியான பத்திரிகைத் தொடர்புகளால் வாஷிங்டனிலிருந்து நமது தூதரகம் செய்துவந்த மிகப்பலம் வாய்ந்த பலனுள்ள பிரச்சாரத்தை முறியடிக்க உதவியதோடு மட்டுமின்றி அவர் களின் கவனத்தை இந்திராவுக்கு எதிராகவும், எதிர்க்கட்சி களுக்கு ஆதரவாகவும் திருப்பிவிட உதவியது. நேரடியாக நமக்கு உதவி செய்ய முடியாதவர்கள்கூட இந்திரா காந்திக்கு ஆதரவாக சொல்லப்பட்ட வாதங்களுக்குச் செவி சாய்க்க வில்லை.

இருந்தாலும், அமெரிக்க அயல்நாட்டு இலாகாவின் மனோ பாவமும், நல்லெண்ணமும், மனிதாபிமானமும் கொண்ட வர்கள் என்று பெயர் வாங்கிய சில செனட்டர்களின் மனோ பாவமும் ஏமாற்றத்தைக் கொடுத்தது. முதலில் நான் அயல் நாட்டிலாகாவில் ஒரு பெரிய அதிகாரியைச் சந்திக்க ஏற்பாடாகியிருந்தது. பிறகு, அதைக் குறைந்த அந்தஸ்துள்ள அதிகாரி என்று மாற்றினார்கள். கடைசியாகச் சந்திக்கும்

தினத்தில், அதற்கும் மிகவும் கீழே உள்ள ஒரு அதிகாரியைச் சந்திக்க வேண்டும் என்ருர்கள். என்னுடைய விஷயத்தில் 'அமெரிக்க அயல்நாட்டிலாகா அக்கறை காட்டவில்லை என்பதைப் புரிந்துகொண்டு நான் யாரையுமே சந்திக்கப்போக வில்லை. செனட்டர் கென்னடியை நான் சந்திப்பதாக இருந்த நிகழ்ச்சியையும் கடைசி நேரத்தில் ரத்து செய்துவிட்டார்கள். அந்தச் சமயத்தில் அமெரிக்க அரசின் நிலையில் மாறுதல் ஏற்பட்டதாகத் தோன்றியது. இதற்கு முன்னல் அமெரிக்க தலைவர்கள் சிலர் இந்தியாவில் ஜனநாயக உரிமைகள் பாதிக்க பட்டுள்ளன என்ற வகையில் பேசப்பட்ட பேச்சுக்களுக்கு சமாதானம் கூறும் வகையில், அமெரிக்க அரசு இந்திராகாந்தி யின் பக்கமாக நெருங்கி வருவதற்கு முயற்சிகள் எடுக்கப் படுவதுபோலத் தோன்றியது.

இந்தியாவில் உள்ள பல பெரிய அயல்நாட்டுக் கம்பெனி கள், இந்தியாவில் உள்ள இந்த நிலையைப் பயன்படுத்தி அமெரிக்க அரசின் அபிப்பிராயத்தையும்மாற்ற முயற்சித்தன. அமெரிக்க அரசின் அபிப்பிராயங்களும் இந்திரா காந்தியின் பலத்தையும், அர்த்தமுள்ள எதிர்க்கட்சி எதுவும் இல்லாமல் இருந்ததையும் பொறுத்து மாறுபட்டன. ஆனல், எல்லா அரசுகளையும் போலவே அமெரிக்க அரசு, இந்தியாவில் தங்க ளுக்குத் தெரிந்த மட்டில் இந்தியாவில் நிலவிய உண்மை நிலையை அசட்டை செய்ய முடியவில்லை.

ஆனல், கிழக்கு நாடுகளில் உள்ள தாராள மனப் பான்மை கொண்ட அரசுகளின் போக்கைக் கொண்டு நான் ஆச்சரியப்பட்டேன். இந்த நாடுகளின் தலைவர்கள்-அவர்கள் பேராசிரியர்களாக இருந்தாலும், எழுத்தாளர்களாக இருந் தாலும் என்னேடு இந்தியநிலை குறித்து விவாதிக்கவே தயங் கினர்கள். நான் கூறியவற்றை காதுகொடுத்தும் கேட்கவில்லை. இவர்களுடைய உண்மை நோக்கங்களும், நிலைமைகளும் புரி யாத போது, அமெரிக்காவில் உள்ள தாராள மனப்போக்கு கொண்டவர்கள் கூட, ஒரு சர்வாதிகாரத்தை எதிர்க்கும் நமக்கு ஆதரவு தராமல் ஏமாற்றி விட்டார்கள் என்பதற்குப்

பல காரணங்களைக் கூறலாம். ஆனால், இதற்கு விதிவிலக்கு அமெரிக்கப் பத்திரிகைகள். நிக்ஸன் வெளியேறிய பிறகு அரசாங்கத்தோடு அவர்கள் கொண்டிருந்த நேச உறவு இதற்குக் காரணமாக இருந்திருக்கலாம். உலகம் பூராவும் பரவி இருக்கும் பெரிய கம்பெனிகள்கூட அமெரிக்க அரசின் மனோபாவத்தை மாற்றி இருக்கலாம். அமெரிக்க நண்பர்கள் கூட எந்த நிலைமையையும் மேலெழுந்த வாரியாகப் புரிந்து கொண்டிருந்தனர். என்னோடு பலகாலம் பழகியவர்கள் கூட நான் கூறியதைக் கேட்கவே தயங்கும்போது என்னால் அவர்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

இதற்கு நல்ல உதாரணங்கள் செஸ்டர் பௌல்ஸ்' கால்ப்ரெய்த் போன்றவர்கள் உறுப்பினர்களாக இருந்த, ஈஸ்டர்ன் லிபரல் எஸ்டாபிளிஷ்மெண்ட் என்ற ஸ்தாபனத்தின் பிரபல உறுப்பினர் ஒருவர் நடந்து கொண்ட விதம். நான் அமெரிக்காவிலிருந்து திரும்பும் சமயத்தில்தான் அவரைச் சந்திக்க முயன்றேன். அவரும் என்னைப் பார்க்க ஆவலோடு இருந்தார். ஆனல் இயலவில்லை. ஆகவே அவர் அடுத்து இந்தியா வரும்போது அவரை நான் சந்திக்க வேண்டும் என்று கூறியிருந்தார். ஆனால், ஜனவரி 76—ல் அவர் இங்கே வந்தபோது நான் அவரைச் சந்திக்க முயன்றேன். அவரும் என்னைப் பார்க்க ஆவலோடு இருந்தார். ஆனல் இயலவில்லை. ஆகவே, அவர் அடுத்து இந்தியா வரும்போது அவரை நான் சந்திக்க வேண்டும் என்று கூறியிருந்தார். ஆனல், ஜனவரி 76—ல் அவர் இங்கே வந்தபோது நான் அவரைச் சந்திக்க முயன்றேன். அவர் தயங்கினர். நம் நாட்டின் உள் நாட்டு விவகாரங்களில் அவர் தலையிடுவது விவேகமாகாது என்று அவர் கருதுவதாக எனக்குப் பட்டது. அவர் இந்தியாவுக்கு வரும் முன்பாகவே அவரது நண்பர்களுடன் பேசி ஒரு மாதிரி முடிவு எடுத்து விட்டதாக எனக்குப் புரியவைப்பதைப் போலத் தோன்றியது. நமது நாட்டின் சர்வாதிகாரம் பற்றிய அவர்களுடைய நிலையில் ஏன் இந்த எதிர்பாராத, புரியாத மாறுதல் என்று எனக்கு தெளிவாகப் புரியவில்லை.

எனக்குச் சரியான விவரங்களும் தெரியவில்லை. அப்படி நினைப்பதும் அவசரப் படுத்துவதாகும் என்று நான் கருதி னேன். இன்னும் கொஞ்ச நாட்களில் இதுபற்றிய விஷயங்கள் தெளிவாகும் என்றும் நான் நினைத்தேன்.

இருந்தும் அமெரிக்காவில் தொழிற்சங்கங்களோடு நான் கொண்ட தொடர்புகள் பலனளித்தன. அமெரிக்காவிலும் கனடாவிலும் இருந்த, பலம் பொருந்திய தொழிலாளர் யூனியன்கள் அவசரநிலையையும் அதைத் தொடர்ந்து, தொழிற்சங்க உரிமைகள் பறிக்கப்பட்டதையும் தெரிந்து இந்திரா அரசைக் கடுமையாக எதிர்த்தது எனக்கு மகிழ்ச்சி யாக இருந்தது. இந்த யூனியன்களின் இந்த நிலை அவசரநிலை முடிவுகாலம்வரை நீடித்தது. சொல்லளவில் நமக்கு கொடுத்து, வந்த ஆதரவை, உதவி என்று செயலளவில் கொண்டு வரு வது கஷ்டமாகத்தான் இருந்தது. என்னுடைய அமெரிக்கா கனடா, விஜயங்கள், நான் எதிர்பார்த்த அளவுக்கு நம்மிடம் அனுதாபம் கொண்டவர்கள் என்று நான் நினைத்த, தனிப்பட்ட மனிதர்களிடமிருந்தும், ஸ்தாபனங்களிடமிருந் தும் உதவியும் ஆதரவும் தரவில்லை. என்றாலும், அங்கேயே இருந்து கொண்டு ஏற்கனவே இந்திரா காந்திக்கு எதிர்ப்பை வளர்த்து வந்த இந்திய மக்களை என்னால் இன்னும் அதிக அளவில் உற்சாகப்படுத்த முடிந்தது. இவர்களில் ரொம்பவும் சுறுசுறுப்பாக இயங்கியவர்கள் அமெரிக்காவில் வசித்தவர்கள் தான். அவசரநிலை காலம் முழுவதும் அந்நாட்டு மக்களின் அபிப்பிராயத்தை நன்கு உருவாக்கினார்கள். நமது தூதரகத் தால் அரசின் தரப்பு விவாதத்தை நம்பும்படியாகச் செய்ய இயலவில்லை. இவர்கள் கூட்டங்கள் நடத்தி, செய்தித்தாள் களை வெளியிடுவதோடு மட்டும் தங்களது செயல்களாக நிறுத்திக் கொண்டு விடவில்லை. இந்திரா காந்தியால் அனுப் பப்பட்டவர்கள் பேசும் கூட்டங்களுக்கு இவர்களை அனுப்பி வைத்தது. இந்திரா அரசின் அமைச்சர்களாலும், மற்ற தூதுவர்களாலும் ஒரு கூட்டம்கூட அமெரிக்காவில் வெற்றி கரமாக நடத்த இயலவில்லை. செயலார்வம் கொண்ட

இந்தியர்கள் அந்தக் கூட்டங்களுக்குப் போய் அசௌகர்ய மான கேள்விகளைக் கேட்டு இந்திரா காந்தியின் ஏஜெண்டு களின் முயற்சிகளைப் பலனளிக்காதவாறு செய்து விட்டார்கள். இதனால் எதிரிடையான விளைவுகள் ஏற்பட்டன. இந்த நிலையில், விஜயம் செய்த அமைச்சர்களும், மற்றவர்களும் தங்கள் பேச்சை எதிர்த்துப் பேசாமல் கேட்கும் மக்களை மட்டும் கூட்டங்களில் காட்டி, அந்தக் கூட்டங்களில் பேசி, அந்தச் சிறிய கூட்டங்களைப் 'பிரம்மாண்டமான கூட்டங்கள்' என்று 'சமாச்சார்' மூலமாகத் தெரிவித்து விடுவார்கள்.

இந்தியா திரும்பும் வழியில் சில தினங்கள் ஜப்பானில் கழித்தேன். தங்கின நாட்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் மற்ற நாடுகளில் கிடைத்ததைவிட பலன் மிகவும் அதிகம். நம்மை ஆதரித்தவர்களில் ஜப்பான் ரயில்வே தொழிலாளர் சங்கங்கள் முன்னணியில் நின்றன. அவர் இந்திரா மீது விரோதம் பாராட்டியதற்குத் தனிப்பட்ட காரணம் இருந் தது. இந்திரா காந்தி அவர்களை சி.ஐ.ஏ. ஏஜெண்டுகள் என்று கூறியிருந்ததால் அவர்கள் போர்க்கோலம் பூண்டிருந் தார்கள். அவசரநிலைக்கு முன்பாகவே கூட இவர்கள் பெர்னாண்டஸுக்கு நிறையப் பணம் அனுப்பியிருந்தார்கள். இந்திய எதிர்க்கட்சிகளுக்கு அமெரிக்க ஒற்றர் ஸ்தாபனமான சி.ஐ.ஏ. ஜப்பானிய ரயில்வே யூனியன் மூலமாகத்தான் வருகிறது என்று இந்திரா காந்தி குற்றம் சாட்டியிருந்தார். இதனால்தான் ஜப்பானிய அரசும், மக்களின் அபிப்பிராயமும் இந்திரா காந்திக்கும் அவரது அரசுக்கும் ஆதரவாக இருக்க வில்லை.

இம்மாதிரி அர்த்தமில்லாத குற்றச்சாட்டுகளால் ஆத்திர மடைந்த பலமிக்க போக்குவரத்துத் தொழிலாளர் யூனியனும், தொழிலாளர் சமஷ்டி யூனியனும், ஜப்பானின் இரண்டு சோஷலிஸ்ட் கட்சிகளும், செல்வாக்கு மிக்க பத்திரிகைகளும் இந்திராவுக்கு எதிராக இருந்தன. இந்தச் சாதகமான சூழ்நிலையைச் சாதகமாக்கிக் கொண்டு ஆதரவை வளர்த்தேன். இந்த யூனியன்கள் மிகுந்த ஆதரவோடு எனக்

குப் பல பத்திரிகைகளோடு தொடர்பு ஏற்படுத்திக் கொடுத்தார்கள். இந்தியாவில் நிலவிய உண்மை நிலையையும், இந்திரா காந்தியின் உண்மையான நோக்கங்களையும் அவர்கள் புரிந்து கொள்ளப் பெரிதும் உதவினார்கள். இதனால் ஜப்பானிய மக்கள் இந்திரா காந்தியை வெறுத்தனர். ஆனால், லண்டனில் உள்ள எங்கள் கமிட்டிக்கு ஜப்பான் அனுப்பிய தொகை நாங்கள் எதிர்பார்த்ததைவிட மிகவும் குறைவாக இருந்தது. ஜப்பானிடமிருந்து 25 ஆயிரம் டாலர்கள் லண்டன் கமிட்டிக்குக் கிடைக்கும் என்று நான் எதிர்பார்த்தேன். ஆனால், அது 2000 டாலர்கள் கூட இல்லை. இருந்தாலும் இதை ஈடுகட்டும் வகையில் விளம்பரப் பிரசுரங்களை ஜப்பானிலிருந்து அச்சடித்து வினியோகிக்க ஒப்புக் கொண்டனர். நான் எழுதிக் கொடுத்த 'இந்திராவின் இந்தியா' 'சர்வாதிகாரத்தின் விளக்கம்' என்ற இரண்டு பிரசுரங்களும் ஜப்பானிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு பரவலாக வினியோகிக்கப்பட்டன.

நான் வெளிநாடுகளுக்குப் போவதற்கு முன் அயல்நாடுகளிடமிருந்து பண உதவி பெறுவதற்கான சாத்தியக்கூறுகளைப் பற்றியும், நியாயத்தைப் பற்றியும் விவாதித்தேன். அயல் நாடுகளிலிருந்து உதவி கேட்பது மட்டுமின்றி, அவர்களாகவே கொடுப்பதாக இருந்தாலும் மறுத்துவிடுவது என்று முடிவு செய்தோம். அந்தச் சமயத்தில் நாங்கள் நிறுவியிருந்த சிறு சங்கத்தை நடத்தக்கூட பணமில்லாமல் கஷ்டப்பட்டோம். ஜார்ஜுக்கு விமான டிக்கட் வாங்கக்கூட சமயங்களில் பணம் கிடைப்பது கஷ்டமாகப் போய்விட்டது. அப்படியிருந்தும் அயல்நாட்டு ரகசியப் போலீஸோடு தொடர்பு கொள்வது எவ்வளவு ஆபத்தானது என்பதையும் உணர்ந்திருந்தோம், சி. ஐ. ஏ. போன்ற ஸ்தாபனங்கள் முதலில் உதவி செய்து விட்டு பிறகு பல ஆண்டுகள் கழித்து அவர்கள் வேண்டுமென்றே அந்த விஷயங்களை வெளியிட்டு, சம்பந்தப்பட்ட தலைவர்களை எக்கச்சக்கமாக மாட்ட வைத்திருக்கிறார்கள். இம் மாதிரியான சங்கடங்களில் மாட்டிக்கொள்ள நாங்கள் விரும்ப

வில்லை. சி. ஐ. ஏ. போன்ற ஸ்தாபனங்களிடமிருந்து உதவி கேட்டுப் பெறுவது சுலபம். நாங்கள் பணத்துக்கு ரொம்பவும் கஷ்டப்பட்டதால் நாங்கள் அஜாக்கிரதையாகக்கூட நடந்து சென்றிருக்கலாம். அப்படியும் நாங்கள் இந்தியாவில் எங்கள் நடவடிக்கைகளுக்காக யாரிடமும் பணம் கேட்டுப் பெருதது குறித்து எனக்கு மகிழ்ச்சியே. லண்டனில் இருந்த எங்கள் கமிட்டி பெற்று வந்த சிறுதொகைகூட தொழிற்சங்கம் போன்ற அமைப்புகளிடமிருந்தும், தனிப்பட்டவர்களிடமிருந்தும் வசூலிக்கப்பட்ட சிறு தொகையே ஆகும்.

எனக்கு அரசியல் ஆசைகள் இருந்தது கிடையாது. ஆனுல் எங்களுக்கு ரொம்பவும் ஆர்வத்தோடு உதவி செய்ய ஒப்புக் கொண்ட அதே ஸ்தாபனங்களால் பிற்காலத்தில் ஜார்ஜ் பெர்னுண்டஸின் பொதுவாழ்வுக்கு ஆபத்து வந்துவிடலா எங்களுடைய இந்த எண்ணமும், எங்கள் நிலேயும் பலருக்கும் தெரிந்திருந்தால், அது சி. ஐ. ஏ. ஏஜென்டுகளுக்கும் எட்டியிருக்கும். எங்களேச் சந்தித்து உதவி செய்வதாகச் சொல்லிக் கொண்டு அவர்கள் முன் வராததற்கு இதுவும் ஒரு காரணம்.

என்னேக் கைது செய்த பிறகு, அயல்நாட்டுச் சங்கங்கள், பத்திரிகைகள் ஜார்ஜ் பெர்னுன்டஸின் தலேமறைவு இயக்கத்துக்காகப் பாடுபட்ட ஸ்தாபனங்கள், தனிப்பட்டோர் இவர்களோடு தொடர்பு கொண்டிருந்தவன் நான்தான் என்பதைக் கண்டுபிடித்து விட்டார்கள். நமது ஒற்றர் ஸ்தாபனங்களான சி. பி. ஐ. இன்டெலிஜென்ஸ் பீரோ, ஆர். ஏ. டபிள்யூ. போன்றவை எங்களது இயக்கத்துக்கு அமெரிக்க ஒற்றர் ஸ்தாபனம், சி. ஐ. ஏ. போன்ற அயல்நாட்டு ஸ்தாபனங்கள் பணஉதவி செய்துவந்தன என்று நிரூபிக்க முயற்சி செய்தனர் என்னேக் கேள்விகள் கேட்ட பொழுதெல்லாம் சி. ஐ. ஏ. தொடர்பு பற்றி ஒப்புக்கொள்ள வைக்கும் வகையில் கேள்விகள் கேட்கப்பட்டன. உண்மையைச் சொன்னுல், அயல்நாடுகளிலிருந்து எங்களுக்காக இந்தியாவுக்குள்ஒரு டாலர்கூட வரவில்லை. ஆனுல், எங்களுக்கு அயல்நாடுகளிலிருந்து பணம் வந்தது என்று இன்டெலிஜன்ஸ் பீரோவினர் ஒரு ரிப்போர்ட்

கொடுத்தார்கள் என்று நான் சந்தேகப்பட்டேன். சர்வாதிகாரி என்னவெல்லாம் காதுகுளிரக் கேட்க விரும்புகிறுரோ, அவற்றையெல்லாம் கூறுவதற்கு அவர்கள் தயாராக இருந்தார்கள். எங்கள் இயக்கத்திற்கு ஊக்கம் கொடுக்கஅப்போது எந்த அயல்நாட்டு ஸ்தாபனமும் தயாராக இல்லை என்ற விஷயம் அப்போது நமது ரகசியப் போலீஸுக்கு ஆச்சர்யமாக இருந்திருக்கும். இது இப்போதும்கூட பலருக்கு ஆச்சரியமாக இருக்கலாம். நான் முயற்சி செய்திருந்தால் அயல்நாடுகளில் பல தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டிருக்க முடியும். இதைப் பற்றி என்னைப் பேசவைக்க ஒரு தடவை முயற்சி நடந்திருக்கிறது என்று நான் நினைக்கறேன்.

ரிச்சர்ஸன் என்பவர் தன்னை ஒரு எழுத்தாளர் என்று அறிமுகப்படுத்திக்கொண்டு, நியூயார்க்கில் என்னைச் சந்தித்து இம்மாதிரியான காரியங்களுக்கு உதவி செய்துவரும் ஒரு ஸ்தாபனத்துக்கு என்னை அறிமுகப்படுத்தி வைப்பதாக தானே முன்வந்தார். ஆனுல், என் நண்பர்கள் இது அமெரிக்க ரகசியப் போலீஸ் (சி. ஐ. ஏ.)ன் ஒரு அங்கம் என்று என்னை எச்சரித்ததால் அந்த உதவியை 'வேண்டாம்' என்று மறுத்துவிட்டேன்.

# 9. எங்கள் வெளிநாட்டு நண்பர்கள்

அவசரகால நிலை அறிவிக்கப்பட்ட உடனேயே அயல் நாடுகளில் இருந்த பல இந்தியர்கள் உணர்ச்சி வசப்பட்டு அவசர நிலைக்கு எதிராக அயல்நாடுகளில் ஒரு பிரச்சார இயக்கத்தை நடத்த வேண்டும் என்பதற்காகத் தாங்களாகவே சங்கங்களை அமைத்துக் கொண்டார்கள். கொஞ்ச காலத்திற்கு ஒவ்வொரு நாட்டிலும் இம்மாதிரி ஒரு அமைப்பு செயல்பட்டது. சில நாடுகளில் இன்னும் அதிகமாகக்கூட இருந்தன. இவைகளுக்குள் அதிகப் பொறுமை இல்லை. ஆனால், தொடர்பு இல்லாத காரணத்தால் இவர்களால் கூட்டாக இருந்து செயல்பட முடியவில்லை. சமயங்களில் ஒருவர் செய்ததையே மற்றவர்களும் செய்தார்கள். ஜனநாயகத்திற்காக இந்தியர்கள்—என்ற சங்கம் அமெரிக்காவில் ஏற்பட்டபிறகு, இந்தப் பிழைகள் திருத்தப்பட்டன. இதேபோல் லண்டனில் ஏற்பட்டிருந்த ஜெ. பி. விடுதலை இயக்கமும், அயல்நாடுகளில் இருந்த மற்ற இந்திய அமைப்புகளும் ஒருங்கிணைந்து அவர்களது நடவடிக்கைகளை ஒருமுகமாக்க முடிந்தது.

1975 ஜூன் 27—ல் துவக்கப்பட்ட ஜெ. பி. விடுதலை இயக்கத்துக்கு பிலிப் நோயல் பேக்கர் தலைவர். பிரபலமாக இருந்த அரசியல்வாதிகள், கல்வியாளர்கள், கலைஞர்கள் முதலியோர் இதில் உறுப்பினர்கள். சருல்ஹோடா ,ா சக்ஸேனா, தரம்பால் முதலியோருடைய முழு முயற்சியாலும், இடையறாத உழைப்பாலும் நடந்துவந்தது. சோஷலிஸ்ட் இன்டர் நேஷனல், அம்னெஸ்டி இன்டர்நேஷனல் தொழிற்சங்கங்களின் ஆதரவு பரிபூர்ணமாகக் கிடைத்துவந்தது. இவர்களில் இன்டர் நேஷனல் போக்குவரத்து ஊழியர் சம்மேளனம் செய்த உதவி

குறிப்பிடத்தக்கது. இதுதவிர, மேற்கு ஜெர்மனி, ஆஸ்திரியா நாடுகளும் உதவின. இவர்களுடைய அறிக்கைகளை பிரிட்டிஷ் ஐரோப்பிய பத்திரிகைகள் அப்படியே நம்பி ஏற்றுக் கொள்ளு மளவிற்கு இவர்கள் நம்பப்பட்டார்கள். செல்வாக்கும்,உலகப் புகழும் பெற்ற பத்திரிகைகளான டைம்ஸ், சண்டே டைம்ஸ், டெல்லி எக்ஸ்பிரஸ் (லண்டன்), ப்ராங்க் பர்ட்டர், அலீகிமீன் (ஜெர்மனி) லெமாண்ட் (பிரான்ஸ்) ஹெல்சிங்கின்சனோமாட் (ஹெல்சிங்கி) முதலியவை எப்போதும் எங்கள் கமிட்டியோடு தொடர்பு வைத்திருந்தன.

இந்தக் கமிட்டி அரசாங்கத்துக்கும் அரசியல் கட்சிகளுக் கும், தொழிலாளர் யூனியன்களுக்கும், பத்திரிகைகளுக்கும் செய்திகளை அனுப்பியது மட்டுமின்றி, இந்திராகாந்தியின் தூதுவர்களின் கூற்றுக்களை முறியடிக்கும் வகையில் அறிக்கை களையும் அனுப்பி வந்தன. இந்தியாவில் ஜனநாயக சுதந்திரத் துக்கு இடைஞ்சல் வரும் போதெல்லாம் அரசாங்கத் தலைவர் கள் இதைக் கண்டுபிடித்து அறிக்கை வெளியிடச் செய்யுமள விற்கு இவர்கள் வெற்றிபெற்றிருந்தார்கள். குறைந்தது இரண்டு தடவையாவது ஜெர்மனியின் வில்லிபிரான்ட், ஆஸ்திரியாவின் ப்ருனோ க்ரீஸ்கி, ஸ்வீடனின் ஓலாவ் பால் மேயும் இந்திராவுக்கு எதிராக வெளிப்படையாகவே அறிக்கை வெளியிட்டார்கள். சோஷலிஸ்ட் இன்டர்நேஷனலும் அம்னெஸ்டி இன்டர்நேஷனலும் பல தொழிலாளர் யூனியன் களும் ஜெ. பி. விடுதலைக் கமிட்டியோடு நெருங்கி ஒத்துழைத் தன. இங்கிலாந்திலும், ஐரோப்பாவிலும் உள்ள லிபரல் பத்திரிகைகள் ஆரம்பத்திலிருந்தே இந்திராகாந்தியின் பொய்ப் பிரச்சாரத்திற்கு செவி சாய்க்காமல், கடைசிவரை அவருக்கு எதிராகவே இருந்தன. ஏனெனில் அதற்கு முக்கிய காரணம் லண்டன் கமிட்டியின் கடின உழைப்புதான்.

இந்தக் கமிட்டி குடியரசு தினம், சுதந்திர தினம்—இந்த நாட்களில் ஆர்ப்பாட்டங்களுக்கு ஏற்பாடு செய்தது. இந்த நாட்களில் இந்திராகாந்திபால் அனுப்பப்படும் தூதர்கள்

கலந்து கொள்ளும் கூட்டங்களில், இவர்களும் கலந்துகொண்டு அவர்கள் செய்யும் பொய்ப் பிரச்சாரங்களை மறுப்பார்கள்.

இந்திரா காந்தி, தான் செய்துவந்த காரியங்கள்மீது மற்றவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட எடுத்துக்கொண்ட முயற்சிகளை இந்தக் கமிட்டி கண்காணிப்பாக இருந்து தோல்வியடையச் செய்தது. இவர்கள் செய்த காரியங்களில் எது அதிக பலனளித்தது என்று கூறுவது கடினம். அப்படியும் அவர்களுடைய இரண்டு சாதனைகளைக் குறிப்பிட்டுக் கூறலாம். ஒன்று டைம்ஸ் பத்திரிகையில் அவர்கள் வெளியிட்ட ஆறு பத்தி விளம்பரம். இதில், இந்தியாவில் உள்ள அரசியல் கைதிகளை விடுதலை செய்யும்படியும், இந்தியாவில் ஜனநாயக உரிமைகளை திரும்பக் கொண்டு வரும்படியும் இதற்காக இந்திரா காந்தியை வற்புறுத்தும்படியும், உலக மனசாட்சிக்கு கோரிக்கை விடுத்து, உலகப் பிரமுகர்கள் சுமார் 700 பேர்கள் இதில் கையெழுத்து இட்டிருந்தார்கள். உலக அபிப்பிராயம் இந்திராவுக்கு எதிராகச் சிறந்த முறையில் உருவானதற்கே இந்த அறிக்கை அடிப்படையாக அமைந்தது. இந்த லண்டன் கமிட்டியின் இரண்டாவது சாதனை, ஸ்வராஜ் பத்திரிகையை ஜூலை 75–ல் வெளிக்கொண்டு வந்தது. ஆசையோடும், கடின உழைப்போடும் வெளிவந்த இந்தப் பத்திரிகை இரண்டு விதங்களில் உதவியது. உலகெங்கும் இருந்த நம்மீது அக்கறையும், அனுதாபமும் மிகுந்த மக்களுக்கு இந்தப் பத்திரிகை போய் சேர்ந்தது. இந்தியாவிலும் சுமார் ஆயிரம் பேருக்கு இது அனுப்பப்பட்டது. இந்தியாவில் உள்ளவர்களுக்குக்கூட இந்தியாவில் நடக்கும். விஷயங்களைப் பற்றியும், அதுபற்றி அயல்நாட்டவர் என்ன கருத்து கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்கும் இது உதவியது. இதன் கடைசி இதழ் 77 மார்ச் ஆரம்பத்தில் வந்தது.

அவசர நிலையின் ஆரம்பத்திலிருந்தே அமெரிக்காவின் பல ஊர்களிலும் இந்தியர்களின் பல சங்கங்கள் தோன்ற ஆரம்பித்தன. ஆகஸ்ட் 1975-ல் இந்தச் சங்கங்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு, 'ஜனநாயகத்துக்கான இந்தியர்கள்' என்ற அமைப்பாக

உருவாகியது. அதிலிருந்து, இந்தியாவில் நடப்பவைகளுக்கு இந்த அமைப்பு பேச்சாளர் போல உருவாகி, உறுதி கொண்டு துடிப்போடு இயங்கும், ஒரு இயக்கமாகப் பரிணமித்து வந்தது. இவர்களுடைய கட்டுக்கோப்பில், அமெரிக்கா முழுவதும் துடிப்போடு செயல்படும். இம்மாதிரி இருபது சங்கங்கள் ஏற்பட்டு இந்திரா காந்தி தொடர்ந்து செய்துவந்த பலம் பொருந்திய பிரச்சாரத்தை முறியடிப்பதில் ஜாக்கிரதையாக இருந்து முடித்தது. அவர்கள் நடத்திவந்த 'இந்தியன் ஒப்பினியன்' என்ற பத்திரிகையின் வாயிலாகவும், இந்தியாவில் நடந்தவைகளைப் பற்றியும், அவற்றின் முக்கியத்துவத்தைப் பற்றியும் அயல்நாட்டு மக்களுக்குத் தெரியப்படுத்தி வந்தது மட்டுமின்றி, கீழ்க்கண்டவைகளையும் அது செய்தது:—

மாடிசனிலிருந்து வாஷிங்டனுக்கு ஊர்வலமாக நடந்து சென்று மனிதாபிமான உரிமைகளை நிலை நாட்டியது.

ஐக்கிய நாடுகளின் மனிதாபிமான உரிமைகள் கமிஷனிடம் மகஜர் சமர்ப்பித்து அவர்களிடம் நமது நிலைகுறித்த விவரங்களை தந்தது.

மனிதாபிமான உரிமைகளைப்பற்றி அமெரிக்க காங்கிரஸ் விசாரணைகளில் நம்மைப்பற்றி எடுத்துக் கூறியது.

அமெரிக்காவுக்கு வரும் எதிர்க்கட்சித் தலைவர்கள் அமெரிக்காவில் சுற்றுப் பயணம் செய்ய வசதிகளைச் செய்து தந்தது. இவர்கள் செய்துவந்த காரியங்களின் திறமை எந்த அளவுக்குப் போய்விட்டது என்றால், இதில் ஈடுபட்டிருந்த ஹிரேமத், எஸ். கே. போதார், ஆனந்த குமார், ஷிண்டே இவர்களது பாஸ் போர்ட்டுகள் இந்திய அரசால் திருப்பி வாங்கிக்கொள்ளப் பட்டன. ஆனந்த் குமாரின் ஸ்காலர்ஷிப்பும் ரத்து செய்யப்பட்டது. 1976 ஜனவரி 31-ம் தேதி இந்தச் சங்கம் பெரிய அளவில் நியூயார்க் நகரில் இந்தியர்களின் மகாநாடு ஒன்றைக் கூட்டி வெற்றிகரமாக நடத்தப்பட்டது. இதற்காக ஒருவர் இந்தியாவுக்குபோய் பெர்னாண்டஸைச் சந்தித்து அவருடைய பேச்சை ஒலிப்பதிவு செய்து வாங்கி வந்தார்.

இந்தியாவின் ஜனநாயகத்தைக் காக்க அயல்நாடுகளில் நடத்தப்பட்ட முயற்சிகளின் பெரும்பங்கு, லண்டனில் இருந்த 'ஜெ. பி. விடுதலை இயக்கத்தையும்' அமெரிக்காவிலிருந்த, 'ஜனநாயகத்துக்காக இந்தியர்கள்' ஆகிய அமைப்புகளையுமே சேரும். இந்திய வளர்ச்சிக்குத் தேவையான பிரசுரங்களை அச்சடித்து வினியோகிக்கவும், விளம்பரப்படுத்தவும் இவர்கள் அமெரிக்காவில் நிறுவிய இந்தியா டெவலெப்மெண்ட் சொஸைட்டியும்,இங்கிலாந்தில்—இந்தியன் டெவலெப்மெண்ட் குரூப்பும், அவசரநிலை காலத்தில் ரொம்பவும் சுறுசுறுப்போடு இயங்கின.

இந்த இரண்டு அமைப்புகளோடும் நாங்கள் இடையறுமல் தொடர்பு கொண்டிருந்தோம். இவர்கள் மூலம் நம்மைப்பற்றி அயல்நாட்டவருக்குத் தெரியப்படுத்துவது மட்டுமின்றி, அவர்கள் நம்மைப்பற்றி எப்படி நினைக்கிறுர்கள் என்பதைத் தெரிந்து கொள்ளவும் வசதியாக இருந்தது. நான் கைதான பிறகும்கூட லண்டனேடும்,அவர்கள் மூலம் சிகாகோவிலிருந்த நமது சங்கத்தோடும் தொடர்பு வைத்திருந்தேன். முதலில் பரோடா கைதுகளும், பிறகு நானும் மற்றவர்களும் மார்ச் மாதத்தில் கைது செய்யப்பட்ட செய்தியும் உடனுக்குடனே லண்டனுக்குப்போய்ச் சேர்ந்துவிட்டன.

ஜார்ஜைக் குறித்து நாங்கள் ரொம்பவும் கவலைப் பட்டோம். காரணம், அவர் பிடிபட்டுவிட்டால் உடனேயே அவர் கொல்லப்பட்டு விடுவார் என்ற பேச்சு இருந்து வந்தது. 1976 ஜூன் 10-ம் தேதி அவர் கைது செய்யப்பட்டு விட்டார் என்று பி. பி. ஸி. ரேடியோவில் கேட்டபோது, நான் லண்டனுக்கு ஒரு கேபிள் அனுப்பினேன். 'ஜியாப்ஃரி உடல்நிலை கவலைக்கிடம். ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கிறுர். மருந்துகளையும், மருத்துவ ஆலோசனைகளையும் உடனே அனுப்பி வைக்கவும்' என்பது தந்தியின் வாசகம்.

இதைத் தொடர்ந்து ஒரு கடிதம் எழுதினேன். லண்டனில் இதற்கென்று ஒரு கமிட்டி நிறுவி, ஜார்ஜைக் கேவலமாக நடத்தாமலிருக்கவும், எங்களை நேர்மையாகவும், பொதுமக்க

ளுக்குத் தெரியும்படியாகவும் விசாரணை செய்யவும் தற்காப்பு நடவடிக்கைகள் எடுக்கக் கோரியிருந்தேன்.

லண்டனில் உடனே, ஜார்ஜ் பெர்னண்டஸ் பாதுகாப்பு கமிட்டி ஒன்று நிறுவப்பட்டது. சோஷலிஸ்ட் இண்டர் நேஷனல் அறிக்கை ஒன்றை வெளியிட்டு, ஜார்ஜ் பெர்னண் டஸின் பாதுகாப்பு குறித்து தாங்கள் கவலைப்படுவதாகவும் அவரை உடனே விடுதலை செய்து விடும்படியாகவும் கூறி இந்திய அரசுக்கு ஒரு தந்தி அனுப்பியது. இந்தச் சங்கம் கேட்டுக் கொண்டதன் பேரில், வில்லி பிரான்ட், ஆஸ்திரிய சான்ஸ்லர், ப்ருனே க்ரெய்ஸ்கி, ஸ்வீடன் பிரதமர் ஓலாஃப் பால்மே, இவர்களும் இந்திரா காந்திக்கு ஒரு தந்தி அனுப்பி னர்கள். பிறகு, ஜார்ஜ் எப்படி நடத்தப்பட வேண்டுமோ அந்த முறையில் நடத்தப்படாதபோது இண்டர்நேஷனல் போக்கு வரத்து ஊழியர்கள் யூனியன், இந்திய விமானங்களையும், கப்பல் களையும் கவனிக்காமல்விட்டுவிடுவோம் என்று மிரட்டினர்கள். ஜார்ஜும் அவரது சகாக்களும் மிகவும் மோசமாக நடத்தப் படவில்லை என்பதற்கும், விசாரணை கொஞ்சமாவது சட்ட திட்டங்களுக்கு உட்பட்டும், எல்லோருக்கும் தெரியும்படியாக வும் நடத்தப்பட்டது என்றால் இதற்கு முக்கிய காரணம், லண்டன் கமிட்டி எடுத்த கடுமையான நடவடிக்கைகள் தான். இம்மாதிரியே அமெரிக்காவில் இருந்த 'ஜனநாயகத்துக்காக இந்தியர்கள்' கமிட்டியும் நடவடிக்கை எடுத்தது.

# 10. என் அருமை 'ஓம்'

திருமதி காந்தி மக்கள் உரிமைகளை ஒரேயடியாகப் பறித்துக் கொண்டு போனபோது, அதோடு கூட மக்களின் சிந்தனை சக்தியையும் சேர்த்து எடுத்துக் கொண்டுபோய் விட்டதாகத் தோன்றியது. யோசித்துப் பார்க்கும் சக்தி அழிந்து போனது மனக்குழப்பத்தினாலா அல்லது, வெறும் பயத்தினாலா என்பது முக்கியமல்ல. ஒரு சமயம் இதற்குக் காரணம் குழப்பம், பயம் இவைகளின் சேர்க்கையாகக்கூட இருக்கலாம்.

குழப்பமடைந்த அல்லது, பயந்து போய் விட்ட மனிதரால் எதையும் புரிந்து கொள்ள முடியாது. அரசியல்வாதியின் மனமும், அறிவாளிகள் என்று கூறப்படுபவர்களின் மனமும் இந்தப் பயத்தாலும், முட்டாள்தனத்தாலும் செயலிழந்து போய் விட்டது போல் தோன்றியது. மனிதர்கள், மிருகங்களின் நிலைக்குக் கொண்டு வரப்பட்டபோதும், சாப்பிட மட்டுமே அனுமதிக்கப்பட்ட போதும், இந்திரா காந்தியின் கட்சியை ஒரு சர்வாதிகார ஆட்சி என்று அழைக்க அவர்கள் இஷ்டப்படவில்லை. குறைந்த பட்சம் சில லட்சம் பேர்களாவது கொல்லப்பட்டால்தான் இந்திராவை சர்வாதிகாரி என்று அழைக்கலாம் என்று காத்திருந்தார்கள்போல காணப்பட்டனர். மேலெழுந்தவாரியாக உள்ளவர்களால் பாராட்டப்பட்டார் என்பதால், நமது நாட்டில் உள்ள அறிவாளிகளும், அரசியயவாதிகளும் உண்மை நிலையைப்புரிந்து கொள்ளாமல் இருந்தது மன்னிக்க முடியாதது.

1975 ஜூன் 26-ம் தேதிய நிகழ்ச்சியால் மிகவும் மனம் நொந்து போனவர்கள் கூட, யதேச்சதிகாரத்தைப் பெயரள

வில் எதிர்த்ததைத் தவிர வேறு எதுவும் செய்யத் தயாராக இல்லை. எதிர்த்து நிற்கத் தயாராக இருந்தவர்கள்கூட நெடு நாட்களாகக் கையாளப்பட்டு வந்தசத்தியாக்கிரக முறைகளைக் கடைப்பிடிக்கவே இஷ்டப்பட்டார்கள், என்பதைப் பார்க்க வருத்தமாக இருந்தது. மகாத்மா காந்தி காலத்திலேயே கூட சத்தியாக் கிரகத்தில் கலந்து கொண்டவர்கள் கடைபிடிக்க வேண்டிய நெறிமுறைகளும், ஒழுங்குகளும் மிகவும் கடினமாக இருந்ததாலும், தைரியம் தேவைப்பட்டதாலும் சத்தியாக்கிர கங்கள் முழுதும் பயனளிக்கவில்லை. தவிரவும் , இங்கிலாந்து மற்ற உலக நாடுகளின் அப்பிராயங்களும், இங்கிலாந்திலேயே இருந்த பலரின் அபிப்பிராயங்களாலும் பிரிட்டிஷ் அரசு உந்தப்படாமலிருந்திருந்தால் மகாத்மாகாந்தியின் சத்தியாக கிரக முயற்சிகள் வெற்றியளித்திருக்குமா என்பது சந்தே கமே. உலக நாடுகளின் அபிப்பிராயத்துக்குக் கவலைப்படாத ஒரு அரசோடு போராட வேண்டுமென்றால், சமாதான முறை யில் நடத்தப்படும் சத்தியாக்கிரகங்களுக்குப் பலன் அவ்வள வாக இருந்து விடாது. அனேகமாக எல்லா சர்வதிகார ஆட்சி களுமே பின்னால் நடக்கப் போவதைப்பற்றி கவலைப்படாமல் தான் செயல்படுகின்றன. 1975-ம் ஆண்டு அக்டோபர் 2-ம் தேதி துவக்கப்பட்டு ஜனவரி 1976 நடுப்பகுதி வரையில் நடத்தப்பட்ட சத்தியாக்கிரகத்துக்கும் இந்தக் கதிதான் ஏற் பட்டது. ஒரு விதத்தில், வழக்கப்படி சொல்லப்போனால், சத்தியாக்கிரகத்தை வெற்றி என்று கூறலாம். ஏனெனில் சுமார் முப்பதினாயிரம் பேர் கைது செய்யப்பட்டதாக கூறப் படுகிறது. இவ்வளவு பெரிய எண்ணிக்கை, ஈவு இரக்கமில் லாத. எதைப் பற்றியம் கவலைப்படாத ஒரு அரசை ஒன்றும் செய்ய இயலவில்லை. இந்தச்செய்திகள் இருட்டடிப்பு செய்யப்பட்டு விட்டதால் மக்களின் மத்தியிலும் இதற்கு எந்தப் பலனுமில்லை.

இந்தச் சூழ்நிலையில், சாத்வீக போராட்டத்தின் மேல் நம்பிக்கை கொண்டவர்கள் முட்டாள்களானது மட்டுமின்றி' தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்பவர்களுமானார்கள்.

சத்தியாக்கிரகத்தின் மீது அதிக நம்பிக்கை கொண்டதாகக் கூறியவர்கள் தங்கள் மனப்பயத்தை அப்படிப்பட்ட 'தவறிய' கொள்கையில் மறைத்துக்கொண்டு பேசினுர்கள் என்றுகூடக் கூறலாம். அதற்காக, சத்தியாக்கிரகம் செய்தவர்கள் கொள்கைப்பிடிப்பு இல்லாதவர்கள் என்ருே, கஷ்டப் படவில்லை என்ருே நான் சொல்லவில்லை. அதே போல சிறைக்கு அனுப்பப்பட்டவர்களின் கூடுதலான எண்ணிக்கை காலக்கிரமத்தில் பலனளிக்கவில்லை என்றும் கூறவில்லை. ஆனுல், பயத்தைப் போக்கடிக்க உடனடியாக ஏதாவது செய்யவேண்டிய அவசியம் இருந்தது. இந்தச் செய்கை இந்திராகாந்தியைச் சுற்றி இருந்தவர்களின் மனதிலும் ஒரு பயத்தை ஏற்படுத்த வேண்டும். இந்த நோக்கத்தை மனதில் கொண்டு பார்த்தால், 1975 முடிய நடத்தப் பட்ட போராட்டம் வெற்றியைத் தந்தது என்று கூற முடியாது.

சர்வாதிகாரியோடு பேச்சு வார்த்தை நடத்திப் பார்ப்பது சாத்தியமே என்று நம்பிக்கை கொண்டிருந்த, சிலநடை முறை அறிவில்லாத, படித்தவர்களும், அரசியல்வாதிகளும் இருக்கத்தான் செய்தார்கள். நம்மிடம் போதிய பலமிருந் தால்தான் பேச்சு வார்த்தை நடத்த முடியும். அதே போல் பழைய நிலைக்குத் திரும்பிவர எதிர் தரப்புக்கும் ஆசையும், அவசியமும் இருந்தால்தான பேச்சு வார்தைத வெற்றிகரமாக இருக்கும். 1975 ஜூன் 26லிருந்து இந்திராகாந்தி தேர்தல் களை அறிவித்த வரை உள்ள காலத்தில், இந்த மாதிரியான சூழ்நிலைகளும், நிலைமைகளும் காணப்படவில்லை. எதிர்ப்புக் காட்டும் சக்தியிருந்த எல்லோரும் ஒட்டு மொத்தமாகக் கைது செய்யப்பட்டு விட்டதால் எதிர்க்கட்சியினர் நிலைகுலைந்து போயிருந்தனர். இந்திராகாந்தியோ எந்தவிதக் கவலையு மின்றி, யாரும் அசைக்க முடியாதபடி இருந்தார். திரும்பவும் பழையபடி 1975 ஜூன் 25 நிலைக்குப் போகும் பேச்சுக்கே இடமில்லை என்று இந்திராகாந்தி பல தடவை சொல்லி விட்டார். 'எதிர்க்கட்சிகள் தோற்கடிக்கப் பட்டு விட்டார் களே தவிர, முறியடிக்கப்படவில்லை' என்று பேசியதன் மூலம்,

தனது மனநிலையையும் அவர் வெளிப்படுத்திக் காட்டினர். ஆகவே, பேச்சுவார்த்தைகள் என்பது அர்த்தமற்றவை மட்டு மின்றி, நாட்டில் மிச்சம் மீதியிருந்த தைரியத்தையும், திட நோக்கத்தையும் உறிஞ்சி விடக்கூடிய வேண்டாத காரியங் களாகவே தோன்றின.

இருப்பினும், இந்திராகாந்திக்கும் தங்கள் பேச்சுக்களை யார் கேட்பார்களோ அவர்களுக்குமிடையேயும் பல பேச்சு வார்த்தையாளர்கள் ஓடிக் கொண்டிருந்தார்கள். எரிந்து போன சாம்பல் குவியலிலிருந்து எதையாவது உயிர்ப்பிக்க லாம் என்று இவர்கள் நம்பிக்கை கொண்டிருந்தார்களா அல்லது, தனி மனித சுதந்திரத்தில் நம்பிக்கை கொண்ட ஒரு ஜனநாயகவாதி இந்திராகாந்தி என்று கருதினர்களா என்ப தெல்லாம் தெரியவில்லை. இவர்கள் செய்து வந்ததை ரொம் பவும் உயர்த்திக் கூற வேண்டும் என்ருல், மடத்தனமாக ஏதோ செய்து கொண்டிருந்தார்கள், என்று மட்டும் கூறலாம். இவர்களுடைய முயற்சிகளுக்கு அரசாங்கம் பெரிய அளவில் விளம்பரம் கொடுத்து, சர்வாதிகாரத்தை ஒழிக்கப் போரட்டம் நடத்த எண்ணம் கொண்டிருந்தவர்கள் மனதில் பொய்யான நம்பிக்கையை ஏற்படுத்தவும் அவர்களை அதைரியப்படுத்தவும் முயற்சி செய்தது.

துரதிருஷ்டவசமாக இந்தப் பேச்சு வார்த்தை முயற்சிகள் ஏற்கனவே பலமிழந்து கிடந்த எதிர்க்கட்சியினரை மேலும் பலமிழக்கச் செய்ய மறைமுகமாக உதவியது மட்டுமின்றி, பலதரப்பட்ட இன்னல்களுக்கிடையே போராடி வந்தவர்களை மறைமுகமாகத் தாக்குவது போலவுமிருந்தது. இந்தப் பேச்சு வார்த்தை விரும்பிகள் தலைமறைவு இயக்கத்துக்கு கஷ்டத்தைத்தான் கொடுத்து வந்தனர்.

பேச்சு வார்த்தை மூலம் பிரச்னைக்குத் தீர்வு காணும் முயற்சி 1976 டிசம்பர் மாத மத்தியில் ஒரு பயங்கரமாக உருவெடுத்தது. பழைய காங்கிரஸ், பாரதீய லோக்தாள், ஜனசங்கம், சோஷலிஸ்ட் கட்சிகளின் பிரதிநிதிகள் ஒன்றுகூடி விவாதித்து, ஒர்க்கிங் பேப்பர் என்று கூறப்பட்ட ஒன்றைத்

தயாரித்தனர். சொல்லப்போனுல் இந்தச் 'சாஸனத்தை' சில தலைவர்கள் தனிப்பட்ட முறையில் உள்துறை அமைச்சர் ஓம் மேத்தாவோடும், மற்றவர்களோடும் நடத்திய பேச்சு வார்த்தைக்குப் பிறகு எழுதினுர்கள். இது ஒரு சாதாரண சரணுகதிப் பத்திரம்—எதையெல்லாம் இந்திராகாந்தி எதிர்க் கட்சிகளின் மீது குற்றம் சாட்டினுரோ, எதையெல்லாம் அவசரநிலையைக் கொண்டு வந்ததற்கு மறைமுகமாகக் காரணமாக காட்டினுரோ அதையெல்லாம் ஒப்புக்கொண்டு எழுதிக் கொடுக்கப்பட்ட ஒரு சரணுகதிப் பத்திரம். அதில் இந்திராகாந்தி கேட்டிருந்தபடியே, இனிமேல் எதிர்க்கட்சி யினர் ஒழுங்காக நடந்து கொள்வார்கள் என்று குறிப்பிடப் பட்டிருந்தது. இந்தப் பத்திரத்துக்காக ஒன்றுகூடி இதற்கு ஒரு மரியாதை தந்தவர்களுடைய அரசியல் அறிவு சூன்யம், நினைத்துப் பார்க்க முடியாத ஒன்று. தலைவர்கள் என்று கூறிக் கொண்ட இவர்களுக்கும் இந்திராகாந்திக்குமிடையே ஏதோ ஒரு ஏற்பாடு இருந்திருக்கவேண்டும். மற்றவர்களும் இவ்வளவு சுலபமாக இந்த வலைக்குள் அப்போது விழுந்து விட்டார்கள் என்பதைப் பார்க்கும்போது ஆச்சரியமாகவும், அதிர்ச்சியாக வும் இருந்தது. நாங்கள் எதிர்பார்த்தபடியே இந்திராவின் கையாட்களால் தூண்டி விடப்பட்ட இந்த வேண்டாத விளையாட்டின் நோக்கமே எதிர்க்கட்சியினரிடம் மிச்சம் மீதி இருந்த சக்திகளை உறிஞ்சி விடுவதுதான். அரசுப் பிரதி நிதிகளுக்கும் இந்த டிசம்பர் கூட்டத்தினருக்குமிடையே மேற் கொண்டு நடப்பதாக இருந்த பேச்சு வார்த்தைகளை ஓம் மேத்தா தடுத்துவிட்டார். இதைத் தொடர்ந்து 1977-ம் ஆண்டு ஆரம்பத்தில் ஓம் மேத்தாவுக்கு பிஜு பட்நாயக் ஒரு கடிதம் எழுதினுர். இந்தக் கடிதம் இப்போது 'மை டியர் ஓம்' கடிதம் என்ற ஒரு அவப்பெயரை வாங்கிவிட்டது. ஜெயிலுக்கு வெளியே இருந்த தலைவர்கள் தங்களுக்குச் செய்து கொண்ட அவமானத்திற்கெல்லாம் ஒரு சிகரம் போல இந்தக் கடிதம் அமைந்து விட்டது. இன்னமும் பணிந்து போகாமல் சிறை யில் இருந்த தலைவர்களின் மனதிலும், தொடர்ந்து போராடத் தயாராக இருந்த மற்றவர்களின் மனதிலும் கவலையையும்,

அதைரியத்தையும் இது ஏற்படுத்திவிட்டது. எதிர்க்கட்சியினர் பணிந்து போகும் மனநிலைக்கு வந்துவிட்டார்கள் என்பதை யும், அவர்களிடத்தில் தைரியம் குறைந்து போய்விட்டது என்றும் இது இந்திராகாந்திக்கு நன்றாக காட்டியிருக்கும்.

இந்தப் பேச்சு வார்த்தைகள் அவசரநிலை காலத்தின் அவமானச் செயல்களில் ஒன்றாக இருக்கும் என்றாலும், இது இந்தியாவில் ஜனநாயகத்தைத் திரும்பவும் உயிர்ப்பிக்கச் செய்ய உதவியது என்றே நினைக்கிறேன். இதனால் திருமதி இந்திரா காந்திக்கு, தனது ஆட்சிக்கும், தன்னுடைய சர்வாதிகார ஆட்சிக்கும் நியாயம் தேடிக் கொள்ள தைரிய மளித்தது. எதிர்க்கட்சிகள் தன்னோடு அவர் நிபந்தனைகளுக் குட்பட்டு பேச முன்வந்ததால்தான் தேர்தல்களில் ஜெயித்து விடமுடியும் என்று இந்திராகாந்தி கணக்குப் போட்டார். அதைத் தொடர்ந்து வந்த நிகழ்ச்சிகளும், சூழ்நிலைகளும் அவர் போட்ட கணக்குகளைத் தப்பாக்கி, அவருக்கு மரண அடி கொடுத்தது. இதை இந்திராகாந்தியைப் போலவே, எதிர்க்கட்சித் தலைவர்களும் எதிர்பார்க்கவில்லை.

தலைமறைவு காரியங்களுக்காகவும் சர்வாதிகாரத்தை எதிர்க்க மேற்கொண்ட நடவடிக்கைகளுக்கும் நான் ஆதரவு தேட முனைந்த போது, நாட்டின் அரசியல் தலைவர்கள், அறிஞர்கள் இவர்களுடைய மனநிலையையும், மன உறுதியை யும் காட்டிக் கொடுத்துவிட்டது. நாட்டின் தலைவர்கள் ஆண் மையையே இழந்து விட்டார்கள் என்பதையும் அவசரநிலை யுடனும், சர்வாதிகார ஆட்சியோடும் உயிர்வாழத் தயாராகி விட்டார்கள் என்பதை நம்புவதே கஷ்டமாக இருந்தது.

இந்தப் பயம் வேண்டுமென்றே மக்கள் மனதில் ஆழமாகப் பதிய வைக்கப்பட்டது. ஏராளமான கைதுகளே நம்பிக்கை யின்மையைத் தோற்றுவித்திருந்தன. கைது செய்யப்பட்டவர் கள் எல்லோருமே பிரபலமானவர்களோ, அல்லது இந்திராவை எதிர்த்தவர்களோ அல்ல. அவசரநிலைகாலம் முழுவதுமே குறிப்பாக ஆரம்ப நாட்களில், ரகசியப் போலீஸ் எப்படி எல்லா விஷயங்களையும் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறது,

எவ்வளவு சாமர்த்தியம் படைத்தது என்பதுபற்றி பல வதந்தி கள் கிளப்பி விடப்பட்டன. பஸ்ஸிலும், ரயிலிலும். கியூக் களிலும் அரசை எதிர்த்து லேசாகப் பேசியவர்கள்கூட எப்படி போலீஸாரால் பிடித்துப் போகப்பட்டார்கள் என்பது போன்ற புரளிக்கதைகள் கிளப்பிவிடப்பட்டன. அரசாங்கத் தைக் கண்டித்து லேசாகப் பேசியவர்களேக்கூட பிடித்துக் கொடுக்க எல்லா இடங்களிலும் ஒரு ஒற்றர்படை தயாராக நிற்பதாக ஒரு பிரளயம் ஏற்படுத்தப்பட்டு, தொடர்ந்து நிலை நிறுத்தப்பட்டது.

இனிமேல் அரசாங்கத்துக்கு துப்பாக்கிகள் தேவையில்லை. பீதியையும், பயத்தையும் பரப்பினல் அதுவே போதும் என்று சொல்லப்பட்டது. யாரையும் கொல்லவோ, சிறையில் அடைக்கவோ அவசியமிருக்கவில்லை. உயிருக்கும் உடமை களுக்கும் ஆபத்து ஏற்படலாம் என்று பரவலாகக் கிளப்பி விடப்பட்ட பயமே போதுமானதாக இருந்தது. இந்தப் பய உணர்ச்சியை அதிகப்படுத்த எல்லா முயற்சிகளும் எடுக்கப் பட்டன. அடிப்படை சுதந்திரத்தில் நம்பிக்கை வைத்து அதைப் பேணிக்காத்தவர்கள்கூட இந்தக் கிலியிலிருந்து விடு படமுடியவில்லை. 1975 ஜூன் 25 வரை போர்க்கோலம் பூண்டு இந்திராகாந்தியை எதிர்க்கத் தயாராக இருந்தவர்கள், தங்கள் உடமைகள் பறிக்கப்பட்டு, தாங்களும் சிறையில் அடைக்கப்பட்டு விடுவோம் என்ற பயத்தில் வீழ்ந்து விட்டதைக் கண்டபோது வேதனையாக இருந்தது. எண்ணங் களில் மட்டுமின்றி செயல்களிலும் தங்களுக்குத் தலைமை உண்டு என்று சொல்லி வந்த அறிவாளர்கள் பயந்து ஓடிப் பதுங்கினர்கள்.

அவர்களுடைய கேவலமான நடவடிக்கைகளுக்குப் பல சமாதானங்கள் சொல்லப்பட்டன. இவைகளில் அதிகமாகச் சொல்லப்பட்ட சமாதானம், 'தங்களுக்கு வன்முறையில் நம்பிக்கை கிடையாது' என்பதும், 'ஜனநாயக நெறிகளும் பண்பாடுகளும் திரும்பி வரும்வரை நாம் காத்திருக்கவேண் டியது தான்' என்பதும் இதற்கு மேலும் எதிர்ப்பு தெரிவித்

தால் இந்திராகாந்தியே இன்னும் அதிகமான மக்களைக் கொல்ல வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு வந்து விடுவார் என்றும், அடக்கு முறைகள் அதிகமாக்கப்பட்டு விடும் என்றும் இன்னொரு சமா தானம் கூறப்பட்டது. வன்முறையில் நம்பிக்கை இல்லை. சட்ட ரீதியான முறைகள், மக்கள் நலம் என்று ஏதாவது ஒரு போர்வை போர்த்தப்பட்டது. இவ்வளவு சமாதானங்களுக்கும் காரணம் கோழைத்தனமும், மனதில் உறுதியின்மையும்தான் என்று எப்போதும் யாரும் ஒப்புக் கொண்டதே இல்லை.

குஜராத்திலும், தமிழ் நாட்டிலும் ஆட்சியிலிருந்த எதிர்க் கட்சிகளுக்குக்கூட அரசியல் தைரியம் இல்லை.

அகிம்சை, ஜனநாயக முறைகள் என்ற பெயரில் குஜராத் அரசு தன்னைக் காப்பாற்றிக் கொண்டது. இந்திராகாந்தி தங்கள் அரசைக் கவிழ்த்துவிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு விட்டால் அந்தச் சமயத்தில் அதற்கு எப்படி எதிர்ப்பு தெரிவிக்க வேண்டும் என்று அந்த அரசு மக்களுக்கு எடுத்துக்கூறி, அவர்களைத் தயார்படுத்தி வைக்கவில்லை. தலை மறைவாக வேலை செய்தவர்களுக்கு மிகவும் உகந்த இடம் குஜராத் என்று பொதுவாகச் சொல்லப்பட்டது. அவசரநிலை காலத்தின் ஆரம்பத்தில் சில மாதங்கள்வரை இது உண்மை யாக இருந்தது. ஆனல், போகப்போக இந்திராகாந்தி குஜரத் அரசை மறைமுகமாக மிரட்ட ஆரம்பித்தார். குஜரத் அரசும் தலைமறைவு நடவடிக்கைகளில் மிகவும் குறைந்த பட்சத்துக்கு மேல் எதையும் ஆதரிக்கவில்லை. தலைமறைவுப் பிரசுரங்களை அச்சடிப்பதும், ரகசியக் கூட்டங்களை நடத்துவ தும் மிகவும் கஷ்டமாகப் போய்விட்டது. குஜரத் அரசு பயந்து போய், எதிர்ப்பதற்குப்பதில் இந்திரா அரசுக்கு ஒத்துழைப்புத் தரத் தயாராகிவிட்டது.

தமிழ்நாட்டில் தி. மு. க. அரசின் போக்கு கொஞ்சம் வித்தியாசமாக இருந்தது. தி. மு. க. வும் அதன் தலைவர் கருணாநிதியும், இந்திரா காந்தியைச் சாமர்த்தியமாகத் தோற்கடிக்கலாம் என்று கருதினர்கள். அசெம்பிளியில் தங்க ளுக்கு மிக அதிகமான பெரும்பான்மை இருந்ததால் தங்கள்

அரசை இந்திராகாந்தி டிஸ்மிஸ் செய்யமாட்டார் என்று அலட்சியமாக நினைத்திருந்தார்கள். அந்த நம்பிக்கை யிலிருந்த அவர்கள், இந்திராவின் எந்தச் செயலும் வட நாட்டின் ஆதிக்கம் என்று கருதப்பட்டு விடும் என்று, நம்பி யிருந்தார்கள். ஆகவே இந்த மாதிரி எந்தச் செயலும் தமிழ் நாட்டு மக்களால் மூர்க்கத்தனமான ஆவேசத்தோடு பரவலாக எதிர்க்கப்படும் என்றும் நினைத்தார்கள்.

பதவிக்கு வரும் முன்பாக பெரும் போராட்ட சக்தியாக இருந்த தி. மு. க. இப்போது வெறும் தேர்தல் இயந்திரமாக மாறி விட்டது. மக்களிடமிருந்து மிகவும் தள்ளி வந்து விட்டது. ஊழல்கள் மலிந்துவிட்டன. நிர்வாகமும், தேர்தல் இயந்திரமும் பதவிகளைப் பங்கிட்டுக் கொள்வதிலும், லைசென்ஸ் காண்ட்ராக்ட் இவைகளை வேண்டியவர்களுக்குக் கொடுப்பதி லும் மும்முரமாக ஈடுபட ஆரம்பித்தன. அவர்களுடைய 10 ஆண்டு தட்டிக் கேட்காத ஆட்சி காலத்தில், இம்மாதிரி யெல்லாம் செய்வதுதான் தாங்கள் என்றைக்குமே பதவியில் நிலைத்து நிற்கும் வழிகள் என்ற நம்பிக்கை அவர்களிடம் வளர்ந்துவிட்டது.

1975 ஜூன் கடைசியிலிருந்து, நான் கைதாகும் வரை, சென்னையில் உள்ள தி. மு. க. தலைவர்களை மாதம் ஒரு தடவை யாவது சந்திப்பேன். ஜார்ஜ் பெர்னாண்டஸும் கருணாநிதியை இரண்டு தடவை சந்தித்திருந்தார். இந்த சந்தர்ப்பங்களில் நாங்கள், இந்திரா காந்தி, தி. மு. க.வை தமிழ்நாட்டில் பதவி யில் விட்டுவைத்திருக்க இயலாது என்றும், எப்படியாவது அவர் தி. மு. க. அரசை ஒழித்து விடுவார் என்றும் தி. மு க. தலைவர்களிடம் சொன்னோம். அந்த நிகழ்ச்சிக்குத் தயாராக இருக்கும்படியும் வற்புறுத்திக் கூறினோம், அதற்கு ஒரே வழி மக்களுக்கு விஷயங்களை எடுத்துக் கூறி அவர்களைத் தயார் படுத்துவதுதான். துரதிருஷ்டவசமாக கருணாநிதி எங்களோடு ஒத்துப் போகவில்லை. அசெம்பிளியில் தங்களுக்கு இருந்த பலமும், காரியங்களை தங்களிஷ்டப்படி செய்து முடிக்கும் திறமையின் காரணமாகவும் இந்திரா காந்தியைச் சாமர்த்திய

மாக வெற்றி காண முடியும் என்று நம்பிக் கொண்டிருந்தனர். இந்த மனநிலையில் இருந்த அவர்களை எங்கள் இயக்கத்துக்கு குறைந்த பட்ச ஆதரவைத்தரச் செய்வதைத் தவிர வேறு எந்த வித நேரடி எதிர்ப்புக்கும் அவர்களைத் தயார்படுத்த முடியவில்லை.

தி. மு. க. தலைவர்களில் எங்களைப் போலவே எண்ணம் கொண்டிருந்தவர் இரா. செழியன். அவர் நிலைமைகளை நன்றாகப் புரிந்து வைத்திருந்தார். இந்திரா காந்தி நடத்தி வந்த அரசு கலப்படமில்லாத ஒரு சர்வாதிகார ஆட்சி என்று எங்களைப் போலவே கருதினார். அதை எதிர்க்க தைரியமும், திட சிந்தனையும் வேண்டும் என்று நினைத்தார். தி. மு. க. விற்கு இந்திராகாந்தி கொடுக்கவிருக்கும் பலமான அடியைத் தவிர்த்து விடலாம் என்ற நினைப்பால் தி. மு. க. விற்கு வர விருக்கும் ஆபத்தை உணர்ந்த ஒரே தி. மு. க. தலைவர் அவர் தான். துரதிருஷ்டவசமாக அவர் தலைமைப் பீடத்தின் உயர்ந்த இடத்தில் இல்லாததால் இவருடைய எண்ணங்கள் கருணாநிதியைப் பாதிக்கவே இல்லை. இந்த இடைஞ்சல் இருந்த போதும் செழியன் தொடர்ந்து எங்களுக்குப் பெரிய பலமாக இருந்து வந்தார்.

மத்திய அரசோடு எனக்கு இருந்த தொடர்புகளினால் தி. மு. க. அரசு டிஸ்மிஸ் செய்யப்படப்போகும் விஷயம் எனக்கு 15 நாட்களுக்கு முன்பாகவே தெரியும். ஜனவரி மாத நடுவில் நான் சென்னைக்குப் போய் இதுபற்றி தி. மு. க தலைவர்களை எச்சரித்தேன். இதைக் கேட்டதும் அவர்கள் நடுங்கிப் போய்விட்டாலும், தங்களுக்கு வரப்போகும் கெடுத லுக்கு தங்களைத் தயார் படுத்திக் கொள்வதற்கு தவறி விட் டார்கள். இது நடப்பதற்கு இரண்டு தினங்களுக்கு முன்பாக, ஏனோதானோ என்று ஏதோ சிறு முயற்சிகளைச் செய்தார்கள். இவையும் பிசுபிசுத்துப் போயின. கருணாநிதியின் கடைசி பேச்சு கூட அழாத குறையாக இருந்தது. தி. மு. க. அரசு கலைக்கப் படுவதற்கு இரண்டு நாட்கள் முன்பாக கருணாநிதியின் நெருங்கிய நண்பர் ஜார்ஜ் பெர்னாண்டஸை அவசியம் சந்திக்க

விரும்பினர். கொஞ்சம் கஷ்டப்பட்டு இந்தச் சந்திப்புக்கு டெல்லியில் ஏற்பாடாயிற்று. காலந்தாழ்ந்து போய்விட்டாலும் கூட, தி.மு.க. தலைவர்களை தலைமறைவாக்கிவிட நடவடிக்கைகள் எடுக்க உடனடியாக அந்தச் சந்திப்பில் முடிவு செய்தோம். அதேபோல் எங்கள் ஆசாமிகளின் மூலம் இதற்காக உதவி செய்வதென்றும் பிறகு ஒரு பெரிய எதிர்ப்புக்குத் தயார்படுத்திக் கொள்வதென்றும் முடிவாயிற்று. இந்தச் சந்திப்பில் கலந்து கொண்டவர் தமிழ்நாட்டுக்கு திரும்பாமல் ஹைதராபாத்தில் அல்லது பெங்களூரில் இருந்துவிடவேண்டும் என்றும், நான் அவரை பிப்ரவரி முதல் தேதி சந்திப்பது என்றும் ஏற்பாடாயிற்று. இதற்கிடையில் கருணாநிதி, ஜனாதிபதி தி.மு.க. அரசை டிஸ்மிஸ் செய்வதை மிக வன்மையாகக் கண்டித்தும் மத்திய அரசின் நியாயமில்லாத இந்தச் செயலை தமிழ்நாட்டு மக்கள் எதிர்த்து நிற்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டும் ஒரு அறிக்கையை வெளியிட வேண்டும்.

மிகுந்த தொந்தரவுக்கிடையில் எங்கள் தரப்பில் எல்லா ஏற்பாடுகளும் செய்து முடிக்கப்பட்டன. கருணாநிதியின் பிரதிநிதியும் சொன்னபடியே செயல்பட பெங்களூருக்குப் போய் தங்கிக் கொண்டார். திட்டபடியே நான் பிப்ரவரி முதல் தேதி சென்னை போய் சேர்ந்தேன்.

அதற்குள் கருணாநிதி சரணடைந்து விட்டிருந்ததைக் கண்டு அதிர்ச்சியடைந்தேன். அன்று காலை செய்தித் தாளில் வந்திருந்த அவரது அறிக்கை வெகுவாகத் தணிக்கை செய்யப்பட்டு வெளிவந்திருக்கிறது என்று நான் முதலில் நினைத்தேன். உண்மையில் அவரது அறிக்கையில் இந்திராவை லேசாகத் தாக்கிக்கூட எதுவுமில்லை. நேர்மாறாக தமிழ்நாட்டு மக்கள் அமைதியாக இருந்து, தங்கள் ஒத்துழைப்பை நல்கும்படி கேட்டுக் கொண்டிருந்தார். தன்னுடைய ஒத்துழைப்பைக் காட்டும் வகையில், பெங்களூரில் தங்கியிருந்த தன் நண்பரைப் புறப்பட்டு சென்னைக்கு வந்து சரணடையும்படி வற்புறுத்தினர்.

இம் மாதிரியான தற்கொலை முயற்சியில் ஈடுபட்டிருந்த கருணாநிதியின் விஷயத்தில் என்னால் ஒன்றும் செய்ய இயல வில்லை என்றாலும், ஒருமுறை தவறிவிட்டால் திரும்பவும் நாட்டு மக்களிடம் எதிர்ப்பு சக்தியை தோற்றுவிக்க இயலாது என்றும், அவருடைய சொந்தப் பெயரையும் அரசியல் புகழை யும் இந்திரா காந்தி நிச்சயமாகச் சிதைத்து விடுவார் என்றும், நான் அவரை எச்சரித்தேன். இந்திரா காந்திக்கு தான் ஒரு மாத கெடு கொடுக்கப் போவதாகவும், அதற்குள் தனக்குத் திருப்தி ஏற்படவில்லை என்றால் அதற்குப் பிறகு என்ன செய்ய லாம் என்று யோசிக்கப் போவதாகவும் கருணாநிதி கூறியது வேடிக்கையாக இருந்தது.

இரண்டு மாநில அரசுகளின் போக்கும், நடத்தையும் இப்படி இருந்திருக்கும் போது, அரசியலில் இருந்த தனி நபர் களின் நிலை எப்படி இருந்திருக்கும் என்பதைப் புரிந்து கொள் ளலாம். அரசியலில் நெடுநாட்களாகவே ஈடுபட்டு தங்களைத் தீவிரவாதிகள் என்று கூறிக் கொண்டவர்களில் மிகச் சிலரே தான் தலைமறைவு இயக்கத்துக்கு ஆதரவு தரும் ஆபத்தை ஏற்கத்தயாராக இருந்தார்கள். அவர்களில் சிலர் ரகசியமாகக் கூட தங்களால் இயன்ற உதவிகளைச் செய்ய விரும்பவில்லை. இதனால் சிறைக்குப் போகாமல் வெளியிலிருந்த எதிர்க்கட்சிக் காரர்களின் ஒத்துழைப்பை நாடிப் பெறுவதில் எனக்கு நம்ப முடியாத ஏமாற்றம் அளவுக்கு மேல் ஏற்பட்டது.

அறிவாளிகள் என்று சொல்லப்பட்டவர்களோடு எனக்கு ஏற்பட்ட அனுபவம் கொஞ்சம் பரவாயில்லை. இந்த 21 மாத அவசரநிலை கால சரித்திரத்தை எழுதும்போது, கோழைத் தனம், நேர்மையின்மையைப் புரிந்து கொள்ளாமை, இவை களில் இவர்களுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும்,

எல்லா நாடுகளிலும் இம்மாதிரி 'ஹம்பக்' கள் உண்டு. ஆனால், எந்த நாட்டிலும் நமது நாட்டைப் போல் இவ்வளவு பெரிய அளவில் வெற்றிகரமான (போலி) 'ஹம்பக்'குகளைக் காண முடியாது. இந்திய அறிஞரின் சோம்பேறித் தனமும், என்ன நடக்கிறது என்று எதிலும் ஆர்வம் காட்டாததனமும்,

போலியான கலையார்வமும் கொண்டவன். எந்த விஷயத்தி லும் தானே போய் நேரில் தெரிந்து வருவதை விட பிறர் கூறியிருப்பதை திரும்பவும் சொல்லிக் கொள்ளும் ஆசை படைத்தவன். சென்ற முப்பது ஆண்டுகளாகவே, அடிமைத் தனத்தின் மூலம் சிரஞ்சீவியாக வாழும் வெட்கங்கெட்ட ஒரு திறமையை ஏற்படுத்திக் கொண்டவன். சமாதானம் செய்து கொள்வதில் வேண்டாத ஆர்வம் காட்டி, அதிகாரத்தில் உள்ளவர்களின் காது குளிரத் துதி பாடக் கற்றுக்கொண்டிருப் பவர்கள்.

ஆகவே, இவர்கள் இந்திரா காந்தி என்ன செய்தார், என்ன செய்து கொண்டிருக்கிறார் என்பதைப் புரிந்து கொள்ளத் தவறியதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அப்படியே நிலைமைகளைச் சரியாகப் புரிந்து கொண்ட சிலரும் தங்கள் கோழைத்தனத்தை வெளிப்படுத்திக் கொண்டார்கள். அவர் கள் வாயைத் திறக்கவே பயப்பட்டனர். சர்வாதிகாரத்தை எதிர்த்துப் போராடுவது விவேகமில்லை என்றும், தாங்கள் இதில் கலந்து கொண்டு பணியாற்ற வேண்டியது நிறைய இருக்கிறது என்று நம்புமளவிற்கு நேர்மையற்றவர்களாகி விட்டனர். தங்கள் நாட்டுக்கு தாங்கள் தேவைப்படும் காலம் வரலாம். அந்த வருங்காலத்துக்கு தங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். தங்களை நம்ப வைத்துக் கொண்டு பிறரி டமும் இதைக் கூறினார்கள். ஒளிமயமான எதிர்காலத்துக்குத் தங்களையும் தங்கள் சம்பந்தப்பட்ட ஸ்தாபனங் களையும் காப்பாற்றிக் கொள்ள விரும்பினார்கள். அடக்கு முறையையும், தீயசக்திகளையும் எதிர்த்துப் போராடுவது அவர் களுடைய கடமையில்லை என்று கருதினார்கள். அவர்கள் தங்களைப் புரட்சிக்காரர்களாகக் கருதிக் கொள்ளவில்லை. அறிஞர்களை தலைமையாகக் கொண்ட போராட்டங்களின் சரித்திரங்களிலிருந்து அவர்கள் பாடம் கற்றுக் கொண்ட தாகத் தெரியவில்லை.

அரசியல்வாதியும், அறிவாளியும் இந்த மாதிரி வெட்கங் கெட்ட முறையில் நாட்டை விட்டுவிட்ட போது, யாரிட

மிருந்து எதிர் பார்க்கவில்லையோ அவர்களிடமிருந்து ஆதரவும் ஒத்துழைப்பும் கிடைத்ததைப் பார்க்க மகிழ்ச்சியாக இருந் தது. பலர் மனப்பூர்வமாக எங்களுக்கும் எங்களைப் போன்ற எதிர்ப்புக் குழுக்களுக்கும் ஆதரவளித்தார்கள். அவர்களை அடையாளம் கண்டு பிடிப்பதும், உதவ நினைப்பவர்களிட மிருந்து உதவி பெறுவதற்காக எங்கள் தேவைகளைப் பரவலாக விளம்பரப்படுத்திக் கொள்வதும் ஆபத்தாகவும், கடினமாக வும் இருந்தது. இருந்த போதும் எங்களுக்குத் தேவைப்பட்ட ஒத்தாசையும் பண உதவியும் அரசியலில் ஈடுபடாதவர்களிட மிருந்து கிடைத்தது. இவர்கள் அறிவாளிகள் என்று தங்களைக் கூறிக் கொண்டது கிடையாது. இவர்களில் பலர் எங்கள் இயக்கத்தில் நேரடியாகவும், கலந்து கொண்டனர்.

அவர்களில் நூற்றுக் கணக்காணவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்து கொள்ள விரும்புகிறேன். இருப்பினும் அவர்கள் யார் யார் என்பது இன்னமும் கொஞ்ச நாட் களுக்குத் தெரியக் கூடாது.

# 11. காட்டிக் கொடுத்தலும் கைதுகளும்

1976 மார்ச் 9 அன்று பரோடாவில் செய்யப்பட்ட கைதுகள், பெர்னாண்டஸின் தலைமறைவு இயக்கத்தில் சம்பந்தப்பட்ட முக்கியமானவர்களின் கைதுக்கு முன்னோடியாக அமைந்தது. இவைகளுக்குக் காரணம் சி. பி. ஐ. இன்டெலிஜன்ஸ் பீரோ, R.A.W. இவர்களுடைய துப்பறியும் சாமர்த்தியத்தால் அல்ல. சில சூழ்நிலைகளும், ஷரத்பட்டேல், தான் எப்படியாவது தப்பிவிட வேண்டும் என்று எடுத்துக்கொண்ட முயற்சிகளும்தான், போலீஸுக்கு எங்களை காட்டிக் கொடுத்து விட்டன. பின்னர் வழக்கில் அப்ருவராக மாறிவிட்ட பரத் பட்டேல் பெர்னாண்டஸுக்கும், பரோடா நண்பர்களுக்கும் அறிமுகம் செய்துவிக்கப்பட்டவர் ஷரத்பட்டேல் ஒரு வியாபாரி. லைசென்சுகளை அவதூறுகப் பயன்படுத்திக் கொண்டதால் இவரை சி. பி. ஐ. கண்காணித்து வந்தது. இவர் மீது வழக்குகளும் இருந்தன. கொஞ்சம் ஜாக்கிரதையோடும் முன் யோசனையோடும் நடந்துகொண்டிருந்தால் ஷரத்பட்டேல் ஆபத்தான ஆசாமி என்பது தெரிந்து போயிருக்கும். தலைமறைவு இயக்கத்தில் சம்பந்தப்பட்டவர்கள் தைரியத்தோடும், ஈடுபாடோடும் இருந்தால் மட்டும் போதாது, அரசாங்கத்தோடு எந்த விதத்திலும் உரசல் இல்லாதவர்களாகவும் இருக்கவேண்டும் என்பது நியதி. இருந்தும், பெர்னாண்ட்ஸ் சம்பந்தப்பட்ட எல்லா விவரங்களும், 'அவர் எப்பொழுது, எங்கே இருக்கிறுர்' என்பன போன்ற விவரங்கள்கூட ஒப்படைக்கப்பட்டிருந்தன. பரத் பட்டேலிடமிருந்து வாங்கப்பட்ட டைனமைட் வெடிமருந்தின் பெரும்பகுதி சேமித்து

வைக்கப்படுவதற்காக இவரிடம் கொடுக்கப்பட்டிருந்தது. சீக்கிரம் காரியங்களை ஆரம்பிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் பரோடா குழுவினர் இம்மாதிரி செய்துவிட்டனர். ஜாக்கிரதை யாக இருக்க இருக்க காரியங்கள் தாமதப்படும். ஆகவே தாமதத்தைத் தவிர்ப்பதற்காக கவனமாக இருக்கத் தவறி விட்டார்கள்.

1976 ஜனவரியில் குஜராத் அரசு ஆட்டம் காண ஆரம் பித்துவிட்டது. எம். எல். ஏக்கள் கட்சி மாற ஆரம்பித்து விட்டார்கள். ஜனங்கள் அரசின் ஸ்திரத்தன்மை குறித்து சந்தேகப்பட ஆரம்பித்துவிட்டனர். இதனால் அரசுமீது இருந்த நம்பிக்கையும் போய்விட்டது. இந்திராகாந்தியின் கை மேலோங்கி இருந்தது. காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ள நினைத்தவர்கள், அதிகாரத்துக்குஅருகிலேயே இருக்க வேண்டும் என்று நினைத்தவர்கள், குறிப்பாக வியாபாரிகள் பாபுபாய்பட்டேலின் அமைச்சரவைக்குப் பிறகு பதவிக்கு வர விருக்கும் புதிய அமைச்சரவைக்கு தங்களுடைய நேசத்தை யும் ஆதரவையும் நல்க துடித்தார்கள். அப்படிப்பட்ட பருவ நிலையில், தலைமறைவு இயக்கத்துக்கு ஆதரவான இடமாக குஜராத் மாநிலத்தைக் கருத முடியவில்லை. ஆகவே ஜார்ஜ் பெர்னாண்டஸ் ஜனவரி மாத வாக்கில், பரோடாவில் ஸ்டாக் செய்து வைத்திருந்த வெடிமருந்து எல்லாவற்றையும் அப்புறப் படுத்திவிட வேண்டும் என்று சொல்லி அனுப்பியிருந்தார். ஒரு பகுதி பாட்னாவுக்கும், ஒரு பகுதி காசிக்கும் போவதாக இருந்தது. துரதிருஷ்டவசமாக பரோடாவில் இருந்தவர்கள் இதன்படி செய்யவில்லை. ஸ்டாக் மார்ச் மாத ஆரம்பம் வரை ஷரத் பட்டேலிடமே இருந்தது.

ஸ்டாக் தன்னிடம் இருப்பது பற்றியும் அதை அப்புறப் படுத்துத் திட்டம் பற்றியும் ஷரத்பட்டேல் தனது காங்கிரஸ் நண்பர்களிடம் சொல்லியிருப்பார் என்று இப்போது தெரிகி கிறது. அவர்கள் டெல்லிக்குத் தெரியப்படுத்தியதால் இந்த விஷயம் ரகசியப் போலீஸ் (ஐ. பி.) பிரிவுக்கும் தெரிந்துபோய விட்டது. ஸ்டாக்கை எடுத்துப் போகும்போது பிடிக்க

வேண்டும் என்று ரகசிய போலீஸார் நினைத்தனர். அதன் மூலம் அது யாரிடம் போகிறது, நாட்டில் பல பாகங்களில் சம்பந்தபட்ட மற்றவர்கள் யார் யார் என்று கண்டுபிடித்து அவர்களையும் பிடித்துவிட விரும்பினார்கள். பரோடாவில் இருந்தவர்களை கண்காணித்து வந்தால் அவர்கள் மூலம் மற்றவர்களையும் பெர்னாண்டஸையும் பிடித்துவிடலாம் என்று அவர்கள் நினைத்தார்கள்.

ஆகவே வெடிமருந்து ஸ்டாக்கை காசிக்கு அனுப்புவதற்காக, ஒரு லாரி கம்பெனியின் கிடங்குக்கு கொண்டுபோன போது ஷரத் பட்டேலையும் கீர்த்திபட், ஜஸ்வந்த் சிங் இவர்களையும், இன்னும் சிலரையும் போலீஸார் கைது செய்தனர். ஷரத்பட்டேல் கைது செய்யப்பட்டது ஒரு நாடகம் என்பது பிறகு தெரிந்தது. அப்போது பரோடாவில் இல்லாத விக்ரம் ராவ் கொஞ்ச நாட்களில் சரணடைந்துவிட்டார். கோவிந்த பாய் ஸோலங்கி. மோதிலால் கனோஜியா, பிரபுதாஸ் பட்வாரி ஆகியோர் பிறகு அகமதாபாத்தில் கைது செய்யப்பட்டனர. ஷரத்பட்டேல் இரண்டு மாதங்களில் விடுதலை செய்யப்பட்டார். மற்ற ஆறு பேர் மீது வெடிமருந்து சட்டத்தின் கீழ் சதி செய்த குற்றத்துக்காக வழக்கு தொடரப்பட்டது.

டெல்லிப் பிரிவில் இருந்தவர்களை பரோடாவில் இருந்தவர்களுக்குத் தெரியாது. ஜார்ஜைப் பார்க்க சென்னைக்கும், பங்களூருக்கும் வந்திருந்த விக்ரமராவைத் தவிர மற்றவர்களுக்கு என்னை அடையாளம் தெரியாது. போலீஸில் பிடிபட்டிருந்த பரத் படேல் போலீஸோடு ஒத்துழைப்பதாக கூறியிருந்தார். அவருக்கு என்னையும், என் விலாசம், டெல்லி டெலிபோன் நம்பர் எல்லாமே தெரியும். நான்தான் பரேத் பட்டேலை டெல்லி விமான நிலையத்தில் சந்தித்து அவரை ஜார்ஜிடம் அழைத்துப் போனேன். ஜார்ஜை தேடிவந்த ரகசியப் போலீஸ், நான்தான் அவருடைய முக்கிய தொடர்பு என்று தெரிந்துகொண்டு என் மூலமாக ஜார்ஜை கண்டு பிடித்து விடலாம் என்று நினைத்தார்கள்,

மார்ச் 10-ம் தேதிய பத்திரிகைகளில் பரோடா கைதுகள் பற்றிய செய்தி வெளியிடப்படவில்லை. ஆனால் ராஜ்யசபாவில் மனுபாஷ்யா, கைதுகள் பற்றியும் அதில் சம்பந்தப்பட்டவர் கள் பற்றியும் கேள்வி ஒன்று கேட்டார். ராஜ்யசபாவில் ஏற் பட்ட அமளிகளைப்பற்றி விரேன்ஷா எங்களிடம் கூறியபோது தான், அதாவது பத்தாம் பத்தி மாலையில்தான் எங்களுக்கு கைதுகளைப் பற்றித் தெரிய வந்தது. அப்போது பெர்னாண்ட்ஸ் டெல்லியில் இருந்தார். அவரை அங்கிருந்து வெளியே அனுப்பி விட்டு அவருக்கு பரோடாவிலும் மற்ற இடங்களிலும் இருந்த தொடர்புகளைத் துண்டித்தாக வேண்டும். எங்கே போக வேண்டும் என்பது முக்கியமல்ல. முதலில் அவர் உடனே அன்றே டெல்லியைவிட்டு வெளியேற வேண்டும். கடைசியாக எங்கே போவது என்பதை அப்புறம் யோசித்துக்கொள்ளலாம் என்று தீர்மானிக்கப்பட்டது. அப்போது சௌகரியமாக இருந்தது, கல்கத்தா போகும் விமானம். பூபேந்திராசிங் என்ற பெயரில் சீக்கியர் உடையில் பெர்னாண்டஸ் கல்கத்தா போய்விட்டார். அவருடன் யாரையும் அனுப்ப முடியவில்லை, நேரமுமில்லை. பயணத்தை ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டியிருந்ததால் உடன் யாரையும் அனுப்புவது உசித மாகவும் படவில்லை. டிக்கட் வாங்கி விமான நிலையத்தில் வழியனுப்பிவைத்த என்னைத் தவிர ஹில்கோலுக்கு மட்டுமே ஜார்ஜ் டெல்லியிலிருந்து தப்பியது தெரியும்.

அவர் புறப்படுமுன், குறைந்தபட்சம் நாலைந்து வாரங் களுக்கு அவர் மறைவாக இருக்கவேண்டும்; டெல்லியிலிருக் கும் என்னோடும் அல்லது வேறு யாரோடும் தொடர்பு கொள்ள முயற்சிக்கக்கூடாது என்று சொல்லியிருந்தேன். கல்கத்தாவில் எங்கிருக்கிறார், அங்கிருந்து போக என்னதிட்டம் போடுகிறார் என்பது எங்களுக்குத்தெரியாமலிருப்பது அவசியம் இந்த விஷயத்தில் ஜார்ஜ் முன் ஜாக்கிரதையாக இருக்க வில்லை. அவரால் ஒரு நாள்கூட ஒன்றும் செய்யாமல் இருக்க முடியவில்லை. இந்தக்கவனக் குறைவுதான் அவருக்கு இடைஞ் சலாக இருந்தது. ஜார்ஜைக் கண்டுபிடிக்க போலீஸுக்கு எப்படி மூன்று மாதம் பிடித்தது என்பது எனக்கு எப்போ

துமே புரியாத ஒரு புதிராக இருக்கும். ஜார்ஜ் மார்ச் மாதம் 10-ந் தேதி கல்கத்தா போய்விட்ட விபரம் ஏப்ரல் மாதம் மத்தியிலேயே போலீஸுக்குத் தெரிந்து விட்டது. முதல் சில நாட்களுக்கு அவர் எங்கு தங்கியிருந்தார் என்பதும் அவர்களுக்குத் தெரியும். அப்படியும் அவர்கள் ஏமாந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. கல்கத்தாவில் இரண்டு நாட்களுக்கு மேல் ஜார்ஜ் தங்க மாட்டார் என்று நான் கூறியதால் விட்டு விட்டார்களோ, அதுவும் தெரியாது. தென்னாட்டில் எங்களுக்கு இருந்த நண்பர்களிடம், மற்றும் தொடர்பானவர்களிடம் சல்லடை போட்டு சலித்துப் பார்த்தார்கள். கடைசியாக கிடைத்த ஒரு துப்பின்படி மூன்று மாதம் கழித்து அவரை கல்கத்தாவில் கண்டு பிடித்தார்கள்.

நான் என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டியிருந்தது. ஒரு தொடர்பிடிபட்டு விட்டால் சங்கிலியில் மற்ற தொடர்புகள் தலைமறைவாகி விடவேண்டும் என்பது ஒப்புக் கொள்ளப்பட்ட தலைமறைவு இயக்க நியதி. மற்றவர்களுக்குநான் முக்கியமான தொடர்பல்ல. காரணம், நான் ஜார்ஜின் நண்பர்களிடமிருந்து வேண்டுமென்றே கண்ணில் படாமலும் அடையாளம் தெரிவிக்காமலும்தான் இருந்து வந்தேன். ஜார்ஜைப் பார்க்க வந்தவர்கள் பலரை நான்தான் முதலில் சந்தித்துக் கூட்டிப் போனேன். ஆனால் நான் யார் என்பதை அவர்களிடம் கூறிக் கொள்வதில்லை. இருந்தாலும் ஜார்ஜோடு இருந்த முக்கிய தொடர்புகளில் நானும் ஒருவன் என்பது அவர்களுக்குத் தெரியும். நானும் தலைமறைவாகி விடவேண்டுமா என்ற கேள்வி மனதில் உறுத்திக் கொண்டே இருந்தது. இதைச் செய்வது எனக்குச் சுலபம். இவ்வளவு பெரிய நாட்டில் ஒருவன் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் எப்போதுமே கூட தலைமறைவாக இருக்க முடியும். அப்படி தலைமறைவான பிறகு நான் என்ன செய்ய முடியும்? இவ்வளவு நாட்களாக எனக்கு இருந்த வசதியால் யாரும் கண்டு கொள்ளாமல் மரியாதையோடும், சமூகத்தில் அந்தஸ்தோடும் நடமாட முடிந்தது. இதனால் அரசாங்க அரசியல்,

வியாபார வட்டாரங்களில் சுலபமாக கலந்து கொள்ள முடிந்தது. தவிரவும் தலைமறைவாக இருந்த ஜார்ஜுக்கும் அயல் நாட்டு நண்பர்களுக்குமிடையே நான்தான் தொடர்பாக இருந்தேன். நான் தலைமறைவாகி விட்டால் இந்த வசதிகளை நான் இழக்க வேண்டும். தவிரவும் தலைமறைவாக இருந்தவர்களோடு வேண்டுமென்றே ரொம்பவும் நெருங்கி பழகாததால் நான் தலைமறைவானதால் அவர்களுக்கு அவ்வளவாக உபயோகமில்லை. தவிரவும் நான் தலைமறைவாகிவிட்டால் சந்தேகம் கிளம்பும். என் குடும்பத்தைத் தொந்தரவு படுத்து வார்கள். அவர்களை பணயமாகப் பயன்படுத்து வார்கள். எல்லாவற்றையும் எடை போட்டுப் பார்த்தால் எப்போதும் போலவே எதுவும் நடக்காதது போல இருந்து கொண்டால், என்னை யாரும் கண்டு கொள்ள மாட்டார்கள் என்ற துரதிருஷ்டத்தின் நம்பிக்கையில் இருந்து வருவது நல்லது என்று முடிவு செய்தேன்.

எப்போதும் போல காரியங்களைக் கவனித்துக் கொண்டு என்னுடைய சாதாரணத் தன்மையின் உதவியைக் கொண்டு முடிந்தவரை ஏதாவது செய்ய நினைத்தேன். என்னுடைய முக்கிய வேலை புயல் ஓயும்வரை ஜார்ஜ் பத்திரமாக, இருந்து கொள்ள இரண்டு மூன்று பத்திரமான இடங்களைக் கண்டு பிடிப்பது, பரோடா குழுவின் மூலம் யாரையெல்லாம் கண்டு பிடித்து விடுவார்களோ அவர்களை எச்சரிப்பது, ஜார்ஜின் முக்கிய தொடர்புகளுக்கு செய்திகளை அனுப்புவது முதலியவை. 'ஹிந்து' பத்திரிகைக்காக வேலைகளைக் கவனிப்பதற்கு', என்ற பெயரில் மாதாமாதம் போவது போல் மார்ச் 16 அன்று சென்னை போனேன். அங்கிருந்து என்னை ஆலோசகராக வைத்திருந்த 'சம்யுக்த கர்னடகா' பத்திரிகை வேலை- என்ற பெயரில் பெங்களூருக்குப் போனேன். பெங்களூரிலிருந்து பம்பாய் போய், அங்கிருந்து மார்ச் 24-ந் தேதி டெல்லி திரும்பினேன். போன இடங்களில் எல்லாம் சென்னையில் அப்பாராவ், பெங்களூரில் சினேகலதா, பட்டாபிராம ரெட்டி, பம்பாய் பி.இ.எஸ்.டி. யூனியனை சேர்ந்த நாராயணி ஷெனய்

போன்ற முக்கியத் தொடர்புகளுக்குச் செய்தியைக் கூறி எச்சரித்து விட்டு வந்தேன்.

ஹைதராபாத், சென்னை, உதகமண்டலம் இங்கெல்லாம் ஜார்ஜ் தங்க வசதியான இடங்களைத் தேர்ந்தெடுத்தேன்.

எல்லா நகரங்களுக்கும் தபால் அனுப்பவும், டெலிபோனில் செய்தி அனுப்பவும், டெலிபிரிண்டரில் தொடர்பு கொள்ளவும் ஏற்பாடுகள் செய்து வைத்திருந்தோம். இதன் வழியாக நான் தேர்ந்தெடுத்திருக்கும் இடங்களை கூறி கல்கத்தாவிலிருந்து புறப்பட்டு வரும்படி ஜார்ஜுக்குத் தெரியப்படுத்தினேன். வீட்டுக்குப் போன் செய்து, 'வீட்டுக்கு வர லேட்டாகும், இரவு 9 மணியாகும்' என்று சொன்னேன். குஜராத்திலிருந்து வந்திருந்த யாரோ ஒருவர், நாள் பூராவும் டெலிபோனில் கூப்பிட்டதாகவும், என்னை அவசரமாகச் சந்திக்க விரும்பியதாகவும் என் மனைவி கூறினுள். அது பரத் பட்டேல் என்று எனக்குத் தெரியும். அசோகாவில் அவர் ஷா என்ற பெயரில் தங்கியிருந்தார். ரூம் நம்பரைக் கொடுத்திருந்தார். 'ஏதோ ஆபத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறுர், என் ஆலோசனையைக் கேட்க விரும்புகிறுர்' என்று முதலில் நினைத்தேன். மறுயோசனை செய்யாமல் ஓட்டலுக்குப் போனேன். ஷா அறையில், இல்லை. அடுத்த அறையையும் சேர்த்து எடுத்து இருக்கிறுர் என்றும், இரண்டு அறைகளுமே தேசாய் என்ற பெயரில் இருப்பதாகவும் சொன்னுர்கள். அந்த சந்தர்ப்பத்தில் பொய் பெயரில் அறை எடுத்தது புரிந்தது. ஆனுல் எதற்காக இரண்டு அறைகள் எடுத்துக் கொள்ள வேண்டும்? சந்தேகப்பட்டாலும் அவரைப் பார்ப்பதுதான் எனக்குப் பத்திரமானது என்று நினைத்தேன். ஆகவே தேசாய்க்குப் போன் செய்து அறிமுகப்படுத்திக் கொண்டு அவரைப் பார்க்கப் போனேன்.

பரத் பட்டேல் ஒரு ஈவிரக்கமில்லாத சுயகாரியவாதி. நடிப்பதில் கெட்டிக்காரர். அவரைப் பார்த்தபோது கவலைப்படுவதாகவே தெரியவில்லை. கவலைப்படுவதுபோல நடித்தார், அவ்வளவுதான். கைதுகள் செய்யப்பட்டபோது அவர்

பரோடாவில் இருந்ததாகவும், ஆனால் தன்னைச் சந்தேகிக்காத தால் தான் கைது செய்யப்படவில்லை என்றும் சொன்னார். அவருடைய மருமகன் அதுல் பட்டேலை, ஷரத் பட்டேல் மாட்ட வைத்து விட்டார். பரத் அவரை எப்படியோ துபாய்க்கு அனுப்பிவிட்டார். அப்படியும் தனக்கே அடைக் கலம்வேண்டுமென்றும், உதவி பெறுவதற்கு ஜார்ஜைப்பார்க்க வேண்டும் என்றும் பரத் பட்டேல் சொன்னார். இந்தக் கதை எனக்குப் புதிராக இருந்தது. ஷரத், அதுலை மாட்ட வைத்தி ருந்தால் ஏன் பரத் பட்டேலை மாட்டி விடவில்லை? அவரை சந்தேகிக்காத அளவுக்கு போலீஸ் முட்டாள்களில்லை. அவர் நிலையில் இருந்த யாரும், அவரைப் போலீஸ் சந்தேகிக்கா விட்டால் கூட ஜார்ஜை சந்திக்க முயற்சி செய்ய மாட்டார் கள். இதில் ஏதோ ஒரு பொறி இருக்கிறது என்று சந்தேகித் தேன். இந்த சந்தேகத்தை அவரிடம் கேட்கவில்லை. ஜார்ஜை சந்திக்க முயற்சி செய்வது முட்டாள்தனம் என்று சொன் னேன். அவருக்கு உதவி தேவையாக இருப்பதால் ஜார்ஜோடு பேசி, இங்கிலாந்தில் ஹொரால்ட் வில்சனுக்கு ஒரு கடிதம் அனுப்பி அவருக்கு இங்கிலாந்தில் அடைக்கலம் தரும்படி செய்யச் சொல்கிறேன் என்று கூறினேன். என்னால் உடனே ஜார்ஜை பிடிக்க முடியாவிட்டாலும் நானே அயல் நாட்டு அமைச்சர் கல்லகனுக்கு கடிதம் எழுதுகிறேன் என்று சொன் னேன். கல்லகனை நான் சந்தித்திருக்கிறேன். ஆனால் பரத் பட்டேல், ஜார்ஜை சந்திக்க முயற்சி செய்வது ஆபத்து என்று கூறிவிட்டேன்.

ஜார்ஜை சந்திக்க இன்னொரு காரணம் இருக்கிறது என்றார் பரத். துபாய்க்கு அருகில் உள்ள ஒரு சிறு தீவு விலைக்கு வந்திருக்கிறது என்றும், அதைத் தான் விலை பேசிக் கொண்டிருப்பதாகவும், அங்கே ரேடியோ ட்ரான்ஸ்மிட்டரை வைக்கலாம் என்றும் கூறினார். அந்தச் சூழ்நிலையில் அது அசாதாரணமான யோசனை. ஆனால் அதை அவரிடம் சொல்லக்கூடாது என்று உடனே யோசித்து விட்டேன். நானும் அவரைப் போலவே நன்றாக நடித்தேன் என்று

நினைக்கிறேன். அவருடைய அவசரத்தை நான் புரிந்து கொண்டதாக நம்பவைத்தேன். முதல்நாள் தான் தொடர்ந்து நிறைய நாட்கள் வெளியூர்களுக்குப் போய் விட்டுத் திரும்பிய தாகவும் அன்று பூராவும் ஒரு மீட்டிங்கில் இருந்ததாகவும் சொன்னேன். அவரது போலீஸ் நண்பர்களுக்கு இது உண்மை என்று தெரியும். 'ஜார்ஜ் வெகு வேகமாக ஊருக்கு ஊர் போக வேண்டும். போகும் இடம் தெரியக்கூடாது. சில நாட்களுக்கு ஒரு முறை ஒரு ஆள் மூலம் எனக்கு அவர் இருக்குமிடத்தைத்தெரியப்படுத்த வேண்டும். அந்த ஆள் டெல்லியில் இப்பொழுது இருக்க வேண்டும். ஆனால் சந்திக்க இயலவில்லை. 26-ந் தேதி நடுப்பகல் நான் அந்த ஆளை ஆசோகா ஓட்டலின் பாரில் சந்திப்பேன் என்று கூறினேன். நான் கூறிய கதையை நம்பியதாக தெரிந்தது. ரகசிய போலீஸ்கூட இதை நம்பியிருக்கவேண்டும். அதனால்தான் அன்று இரவு நான் அசோகாவிலிருந்து வீட்டுக்குத் திரும்பிய போது என்னை யாரும் தொடர்ந்து வரவில்லை.

மறுநாள் பகலில் பரத்தைச் சந்தித்து, 'யாரையும் சந்திக்க முடியவில்லை. மறுநாள் நிச்சயமாக அந்த ஆள் வருவார்' என்று மட்டும் சொன்னேன். பொறுமையோடு இருக்கச் சொன்னேன். அவரும் என்னை நம்பினர்.

அதற்கு மறுநாள் சனிக்கிழமை நான் அவரை அக்பர் ஓட்டலில் சந்திப்பதாக ஏற்பாடு. அங்கு அவர் வேறொரு பெயரில் தங்கியிருந்தார். இந்தத் தடவை அவரை நம்ப வைப்பது கடினமாக இருந்தது. ஜார்ஜுக்கு அனுப்ப வேண்டிய செய்திகள் பல தென்னிந்தியாவிலிருந்து எனக்கு வந்திருப்பதாகவும், ஒரு சமயம் ஜார்ஜே கூட என்னோடு தொடர்பு கொண்டு ஏதாவது விஷயங்கள் கூறலாம் என்றும் நான் கூறினேன். தலைமறைவு சமாசாரங்களில் சில சமயங்களில் தாமதம் ஏற்படலாம். ஆனால் என்னோடு தொடர்பு கொள்வது முக்கியமாதலால் எப்படியும் அன்று மாலைக்குள் தொடர்பு கொள்வார்கள் என்றும், சொன்னேன். மறுநாள் 28-ந்தேதி ஞாயிற்றுக்கிழமை சந்திப்பதாக கூறிவிட்டு

வந்தேன். இம்பீரியல் ஓட்டலில் சந்திப்பதாக ஏற்பாடு செய்து கொண்டோம். 'போலீஸில் அவர் பயப்படுவது போல நான் நினைக்க வேண்டும்' என்றும், அதற்காக புத்திசாலித் தனமாக பெயர்களை மாற்றிக் கொண்டிருப்பதாக நான் நினைத்து ஏமாந்து விட்டதாக பரத்பட்டேல் நினைத்தார்.

ஆனால் பாவம் அவருக்கும், அவரது யஜமானர்களான ரகசியப் போலீஸுக்கும் 'ஜார்ஜ் பெர்னண்டஸை பிடிக்கும் முயற்சி தீவிரமாக்கப்பட்டுவிட்டது' என்ற எச்சரிக்கையும், 'நானும் கைது செய்யப்படலாம்' என்பதும் அவருக்கும், நாடு பூராவும் உள்ள மற்றவர்களுக்கும் போய்விட்டது என்பதும் தெரியாது. மற்றவர்களைக் காப்பாற்ற நான் என்னை ஒரு ஏமாற்றுப் பொருளாக உபயோகித்து வந்தேன். பரவலாக சிதறிஓடிவிட அவர்களுக்கும் அவகாசம் இருந்தது. பின்னல் இது ரகசியப் போலீஸுக்கு தெரிந்துவிட்டது. ஆரம்ப விசாரணை காலத்திலும், சிறையில் இருந்த ஆரம்ப நாட்களிலும் நான் நடத்தப்பட்ட விதம், மிகவும் எங்களுக்கு உபயோகரமாக இருந்த மூன்று நாட்கள், நான் அவர்களை ஏமாற்றியதற்காக எனக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையாகத் தோன்றியது.

மார்ச் 28, ஞாயிற்றுக்கிழமை அன்று பரத்பட்டேலை அவரது அறையில் சந்தித்தேன். முதல்நாள் நான் அவரை சந்தித்தபோது என் பேச்சு பதிவு செய்யப்படலாம் என்று சந்தேகப்பட்டதால் வரவேற்பு அறையில் சந்திப்பதாக சொன்னேன். கூடியவரையில் அவர் தன்னோடு ஏதாவது ஒலிப்பதிவு கருவியை வைத்திருக்கிறரா என்று சரி பார்த்துக் கொண்டேன். ஆனல் அந்த ஞாயிற்றுக்கிழமை, நிலைமை தலைக்கு மேல் போய்விட்டது, என்று கருதியதால் அவர் அறைக்கே வர ஒப்புக் கொண்டேன்.

இன்னமும் ஜார்ஜோடு தொடர்பு கொள்ள முடியவில்லை என்று நான் கூறியபோது அவருக்குக் கோபம் வந்தது தெரிந்தது. தனக்கு வேடிக்கைக் காட்டுவதாக குற்றம் சாட்டினர். யார் வீட்டில் ஜார்ஜோடு பேசுவேனே, அந்த

வீட்டின் விலாசமும் டெலிபோன் நம்பரும் (ஹில்கோல் இல்லம்) கேட்டார். நான் உதவி செய்ய விரும்பாவிட்டால் அவர்கள் உதவுவார்கள் என்று நினைத்தார் நிரபராதி யானவர்களைக் காட்டிக் கொடுக்க முடியாது என்று நான் கூறவும், அவர் விரேன்ஷாவின் உதவியை நாடப்போவதாகச் சொன்னார். இனிமேல் வேஷம் போடுவதில் பயனில்லை. ஆகவே நான் அவரைப்பற்றி நான் நினைத்திருந்ததை, அப்படியே—ஜார்ஜை பிடிக்க போலீஸுக்கு அவர் உதவி செய்கிறார்—என்பதை சொல்லிவிட்டேன். அந்த சந்திப்பு அப்படி முடிந்தது.

ஆனால் அவர் லிப்ட் வரை வந்து, என்னை லிப்டில் போகச் சொல்லி, அவர்படி வழியே கீழே இறங்கினார். ஒரு சமயம் கீழே உள்ள போலீஸுக்குத் தகவல் கொடுக்கப் போயிருக் கலாம். அந்த சமயத்திலும் போலீஸுக்குக் கொஞ்சம் வேடிக்கை காட்ட நினைத்தேன். எனக்கு வரப்போவதை யாரிடமாவது தெரியப்படுத்தவும் நினைத்தேன். ஆகவே லிப்டில் கீழே போவதற்குப் பதிலாக மேலே போய், பெங்களூரி லிருந்து வந்து, அந்த ஓட்டலில் தங்கியிருந்த சந்தோஷ் ஹெக்டேயுடன் அரைமணி நேரம் இருந்தேன். என்ன நடந்தது என்பதை அவரிடம் கூறி வழக்கறிஞர் என்ற முறையில் என்னை கீழ்த்தரமாக நடத்தாமல் இருக்க ஏதாவது சட்டபூர்வமாக செய்ய முடியுமா என்றும் யோசனை கேட்டேன். அவர் ஒரு மணி நேரம் கழித்து என் மனைவிக்கு போன் செய்ய வேண்டும் என்றும், அதற்குள் நான் வீடு திரும்பாவிட்டால், வழியில் என்னைப் பிடித்துவிட்டார்கள், என்று புரிந்து கொள்ளலாம் என்றும் சொல்லிவிட்டு வந்தேன்.

இதற்கு சில நிமிடங்கள் கழித்து என்னைப் பிடித்து விட்டார்கள். கலகலத்துப் போயிருந்த போலீஸ் நான் வரவேற்பு ஹாலுக்குப் போனபோது ஓட்டல் முழுவதும் தேடுவதாக இருந்தார்களாம். நான் என் காரில் ஏறி ஓட்டலுக்குப் பக்கத்தில் உள்ள சந்தில் திரும்பும்வரை ஒன்றும்

நடக்கவில்லை. சந்தில் திரும்பியதும் விர்ரென்று ஒரு கார் என்னைத் தாண்டிப் போய் வழியை மறைத்து நின்றது. இன்னொரு கார், என் காருக்குப் பின்னால் நின்றது. ஆறடி உயரமுள்ள ஆறு பேர் என்னைச் சூழ்ந்து கொண்டனர், என்னை உள்ளே நகரச் சொல்லிவிட்டு அதில் ஒருவர் என் காரை ஓட்டினார். நான் கைது செய்யப்படுவேன் என்று எனக்கு முன்பே எதிர்பாராமலிருந்திருந்தால், கொள்ளைக் காரர்கள் என்னைக் கடத்திக் கொண்டு போகிறார்கள் என்று நினைத்திருப்பேன். அது கடத்தல்தான். ஏனெனில் கைது செய்யப்படும் முன் சாதரணமாகக்கூட கடைப் பிடிக்கும் வழிமுறைகள் எதையும் அவர்கள் கடைப்பிடிக்கவில்லை.

# 12. நாங்கள் சுமந்த சங்கிலிகள்

முதல் பரோடா கைதுகள் 1976 மார்ச் 9–ந் தேதி செய்யப்பட்டன. இதைத் தொடர்ந்து மார்ச் 28–ல் நானும் காப்டன் ஹில்கோலும் கைது செய்யப்பட்டோம். ஏப்ரல் 7-ல் கம்லேஷ் சுக்லா, பலிவால், இவர்கள் அனைவரும் டெல்லி யில் கைதானார்கள். சினேகலதா ரெட்டியும், எம். எஸ். அப்பாராவும் மே முதல் தேதி சென்னையில் கைது செய்யப் பட்டு, பெங்களூருக்கு கொண்டு போகப்பட்டனர். அன்றைய தினமே ஜார்ஜின் சகோதரர் லாரென்ஸும், சினேகாவின் மகன் கொனராக்கும் பெங்களூரில் கைதானர்கள். இ.பி.கோ 120 பி, இந்திய பாதுகாப்பு விதி 43 இவற்றின் கீழ் இவர்கள் மீது வழக்குகள் தனித்தனியே பரோடா, டெல்லி பெங்களூர் முதலிய ஊர்களில் பதிவு செய்யப்பட்டன. அந்த நேரத்தில் தங்கள் அணுகுமுறையை வெளிக்காட்டிக் கொள்ள பிராசிக் யூஷன் விரும்பவில்லை எங்கள் நடவடிக்கைகளின் பிரிவுகள் எவ்வளவு உள்ளன என்பதைப் பற்றியும் அவர்களுக்குத் தெரிந் திருக்கவில்லை. ஆகவே பின்னல் எங்கள் மீது கொண்டு வரப் போகும் குறிப்பான குற்றச் சாட்டுகளையும் சேர்த்துக் கொள்ளும் வகையில் சதி வேலை என்று பொதுப்படையாகச் சொல்லிவிட்டார்கள்.

டெல்லி வழக்கு—அரசாங்கம் V. S. சி. ஜி. கே. ரெட்டி என்று இருந்தது. ஆனல் இந்த பெரிய பெயர் எனக்கு வெகு நாட்கள் நிலைக்காது என்று தெரியும். ரகசிய போலீஸ் பெர்னண்டஸைப் பிடிக்க முயன்று வந்தனர். ஜூன் 10–ந் தேதி கல்கத்தாவில் அவரைக் கைது செய்த பிறகு, வழக்கின் பெயர்—அரசாங்கம் V.S. ஜார்ஜ்பெர்னண்டஸும், மற்றவர் களும்—என்று மாற்றப்பட்டு விட்டது. எங்களுக்குத் தெரிந்த

ரகசிய போலீஸ் சி. பி. ஐ. வட்டாரங்களிலிருந்து வழக்கு டெல்லியில் நடத்தப்படும் என்று தெரிந்துகொண்டோம். எப்பொழுது ஆரம்பிக்கப் போகிறார்கள் என்பதுதான் கேள்வி யாக இருந்தது. 'ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அரசை கவிழ்க்க எதிர்க்கட்சியினர் வன்முறையையும், குழப்பத்தையும் வழிகளாகக் கடைபிடிக்கிறார்கள் என்று தன் னுடைய குற்றச்சாட்டை பலப்படுத்தி இந்த வழக்கை உப யோகித்துக் கொள்ள இந்திரா காந்தி விரும்பினார். இந்த வழக்கு இந்தியாவிலும்அயல்நாடுகளிலும் உள்ளவர்களை தான் அவசர நிலையை அறிவித்ததும், ஜனநாயக உரிமைகளை பறித்ததும் நியாயம் தான் என்று நம்பவைக்க இந்த வழக்கு உதவும் என்று அவர் கருதினார். எப்போதும் இந்திரா காந்தி எதையும் சரியான நேரம் பார்த்துத்தான் செய்வார். இந்த வழக்கை பொதுவான பிரச்சார காரியங்களுக்குப் பயன் படுத்திக் கொள்ள ஆரம்பிப்பாரா, அல்லது 1977 பிப்ரவரி மாதத்தில் நடப்பதாக இருந்த தேர்தல்கள் சமயத்தில் வழக்கை நடத்தச் செய்வாரா?–இது சம்பந்தமாக பார்லி மெண்டிலும் வெளியிலும் அமைச்சர்கள் பேசியது குறிப்பிடும் படியாக இல்லை. எங்களால் இயன்ற அளவு சேகரித்த தகவல் களிலிருந்தும், இந்திராகாந்தியின் அரசியல் தேவைகளை கணக் கிட்டுப் பார்த்தும், வருட இறுதி வாக்கில் வழக்கு விசாரணை ஆரம்பிக்கப்படலாம் என்று நினைத்தோம். இதற்குள் வழக்குக்கு வேண்டிய ஆதாயங்களைத்தேட வேண்டியவர்களுக் கும், தண்டனையிலிருந்து நாங்கள் தப்ப முடியாதபடி சாட்சி களையும், ரிக்கார்டுகளையும் தயாரித்துக் கொள்ள நிறைய அவகாசம் இருக்கும்.

திடீரென்று சி பி. ஐ க்கு பெரிய எதிர்பாராத அதிர்ஷ் டம் அடித்தது. போட்ட திட்டங்கள் சீர்குலைந்து போன போதும், தொடர்புகளும் இணைப்புகளும் முடியாமல் போன போதுங்கூட எங்களில் சில பிரிவுகள் நாட்டின் பல பகுதிகளில் இன்னமும் இயங்கி வந்தனர். பீகாரில் தீவிரமான ஒரு பிரிவினர் சுறுசுறுப்பாக இயங்கி வந்தனர். அங்கு அவ்வப்போது

வெடி விபத்துக்கள் நடந்து வந்தன. பம்பாயில் ஒரு பிரிவினர் 'வாண வேடிக்கைகள்' நடத்தி அவசர கால நிலையின் ஆண்டு விழாவைக் கொண்டாடினார்கள். பம்பாய் நகரில் 1976 ஜூன் 26 அன்று ரயில் பாதைகளிலும், ரயில் பாலங்களிலும் வெடி விபத்துக்கள் நிகழ்ந்தன. பம்பாய் ரகசியப் போலீஸ் அந்த கோஷ்டி முழுவதையும் பிடித்து விட்டனர். அவர்களில் எட்டு பேரைப் பிடித்து, அவர்களோடு ஏற்கனவே மிசாவில்கைதாகி இருந்த லட்சுமன் ஜாதவையும் சேர்த்துக்கொண்டனர். இந்த ஜாதவ் முன்பாக நடந்த நிகழ்ச்சிகளை திட்டம் போட்டு, செயல் படுத்துவதில் உதவி செய்தவர். அவர்களுக்கு எதிராக பம்பாயில் குற்றப்பத்திரிகை பதிவாகியது. முன்னதாக ஜி. ஜி. பரீக்கும், விரேன் ஷாவும் ஜார்ஜோடு சம்பந்தப்பட்டவர்கள் என்று அடையாளம் கண்டு கொள்ளப்பட்டு இந்த சதி வழக்கில் குற்றம் சாட்டப்பட இருந்தவர்களோடு சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

நாங்கள் கைது செய்யப்பட்ட பல்வேறு இடங்களிலும் ஒரே மாதிரியான குற்றம் சாட்டப்பட்டோம். குற்றவாளிகளில் அப்பாராவ், சினேகிலதா ரெட்டி இவர்கள்மீது டெல்லியில் வழக்குத் தொடர வேண்டாம் என்று முடிவாகியது. இவர்கள் மீது இதே குற்றத்திற்காக பெங்களூரில் வழக்குப் பதிவாகி இருந்தது. இருந்தும் தொடர்ந்து அவர்கள் மிசாவின் கீழ் காவலில் வைக்கப்பட்டிருந்தனர். சினேகிலதாவை வேண்டு மென்றே சரியாக நடத்தாததாலும், மருத்துவ வசதி மறுக்கப் பட்டதாலும் அவருடைய சிறைவாசம்மரணத்தில் முடிந்தது.

1976 ஜூலை இறுதியில் டெல்லியில் ஜார்ஜ் உள்பட நாங்கள் 6 பேரும், பாட்னாவில் ஒருவரும், பரோடாவில் 6 பேரும், பம்பாயில் 11 பேரும் இந்த சதியில் சம்பந்த பட்டிருந்தோம். ஏற்கனவே எங்களோடு குற்றம் சாட்டப் பட்டிருந்தவர்களில் இருவர் விடுவிக்கப்பட்டனர். ஜார்ஜுக்கும் மற்றவர்களுக்கும் சந்திப்புக்களை ஏற்பாடு செய்வது போன்ற சிறு காரியங்கள் செய்துவந்த பலிவால் விடுவிக்கப்பட்டார். இம்மாதிரி காரியங்கள் கேஸ் போடுமளவிற்கு ஆபத்தான

வையோ, முக்கியமானவையோ அல்ல என்று ஒரு சமயம் கருதப்பட்டிருக்கலாம். இதே போல் காப்டன் ஹில்கோல் மீதும் குற்றச்சாட்டுக்களும் விடப்பட்டன. பிராஸிக்யூஷன் தரப்புக்கு நம்பகரமான நல்ல சாட்சியாக பயன்படலாம் என்று கருதப் பட்ட அவரை, குற்றவாளியாக்க அரசு விரும்பவில்லை. பிராஸிக்யூஷன் சாட்சி பட்டியலில் ஹில்கோல் குடும்பத்தைச் சேர்ந்த இன்னும் இரண்டு பேர் இருந்தனர். அவர் மகள் டாக்டர் கிரிஜா ஹில்கோல், மகன் சந்திரகுமார், இவர்கள் அந்த இருவர். ஹில்கோல் குடும்பத்தினருக்கு ஜார்ஜோடு நெருங்கிய சம்பந்தமிருந்ததால் அவர்கள் கெடுபிடிகளுக்கும், பயமுறுத்தல்களுக்கும் ஆளாக்கப்பட்டார்கள். அக்டோபரில் காப்டன் ஹில்கோலை பரோலில் வெளியிட்டு சலுகை காட்டினார்கள். மூன்று முக்கிய சாட்சிகளைக் கொண்டு வந்துவிடலாம் என்று பிராசிக்யூஷன் மகிழ்ச்சியோடு இருந்தார்கள். ஜார்ஜின் திட்டங்கள், நடவடிக்கைகள் இவைபற்றி இவர்களை மிரட்டி சாட்சியம் சொல்ல வைத்துவிடலாம் என்று நினைத்தார்கள். ஆனால் அவர்களுடைய ஆசைகளும் திட்டங்களும் சரிந்தன. கிரிஜா சத்தியபிரமாண வாக்குமூலம் ஒன்றை கோர்ட்டில் தாக்கல் செய்தார். அவரும் அவருடைய குடும்பத்தினரும் சாட்சியம் சொல்லும்படி மிரட்டப்பட்டார்கள் என்று கூறினர். எங்களுக்கு ஆதரவாக சாட்சியம் கூறவும் ஒப்புக் கொண்டனர்.

பல நீதி மன்றங்களில் ஒரே மாதிரியாக வழக்கு தொடரப் பட்டவர்கள் 22 பேர் இருந்தனர். இவர்கள் மீது பொதுவான சதிக்குற்றத்துக்காக டெல்லியில் வழக்கு தொடரப்படும் என்று தெரிந்தது. டெல்லியிலிருந்த நானும் கம்லேஷூம் வழக்கு அக்டோபரில் ஆரம்பிக்கும் என்று எதிர்பார்த்தோம். உண்மையில் அது சில வாரங்கள் முன்பாகவே ஆரம்பமாகியது. ஹிஸ்ஸாரில் எந்த விதத்திலும் யாரும் தொடர்பு கொள்ள முடியாதபடி ஜார்ஜ் காவலில் வைக்கப்பட்டிருந்தார். செப்டம்பர் 21-ல் டெல்லி திஹார் ஜெயிலுக்குக் கொண்டு வரப்பட்டார். முரட்டுத்தனமாக சூப்ரின்டெண்டெண்ட்

பட்ரா சொல்படி நடக்க மறுத்த என்னையும், கம்லேஷையும் டாக் ஹவுஸ் என்று அழைக்கப்படும் சிறையில் அடைத்து வைத்திருந்தனர். நாங்கள் ஜார்ஜ் இருந்த அதே பகுதிக்குக் கொண்டு போகப்பட்டோம். திஹார் ஜெயிலிலிருந்த விஜய் நாராயன் சிங்கும் எங்களோடு சேர்ந்து கொண்டார். செப்டம்பர் 23–ல் பரோடா, பம்பாய் நண்பர்களும் திஹார் சிறைக்கு மாற்றப்பட்டனர். சில நாட்களில் வழக்கு ஆரம்ப மாகிவிடும் என்று அப்போது தெரிந்துவிட்டது. இதற்காக செப்டம்பர் 24–ல் டெல்லி பிரதம மெட்ரோபாலிடன் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்ய பட்டது. பிரதான குற்றங்கள் இ.பி.கோ 121. ஏ–யின் கீழ்போடப் பட்டிருந்தன. பலாத்கார முறைகளால் சட்டப்படி நியமிக்கப் பட்ட அரசாங்கத்தைக் கவிழ்க்க முயற்சி செய்யப்பட்டது, 120– பியின் பிரிவின் கீழ் கிரிமினல் குற்றங்களை இழைக்க சதி செய்யப்பட்டது என்றும் போடப்பட்டது.

இந்திய வெடி மருந்து சட்டத்தின் (வெடி மருந்துகளை திருட்டுத்தனமாக வைத்திருத்தல், கொல்லும் நோக்கத்தோடு உபயோகித்தல்) 5, 12–வது செக்ஷன்களின்படியும், வெடி மருந்து பொருட்கள் சட்டத்தின் 4, 5, 6–வது செக்ஷன்களின் படியும் கூடுதலாக குற்றச்சாட்டுகள் கூறப்பட்டன. அவை யாவன:

பொய்யான பெயர்களிலும், வேஷங்களிலும் நடமாடியது.

அரசாங்கத்துக்கு எதிராக வன்முறையைத் தூண்டி விட்டது. ரகசியப் பத்திரிகை வெளியிட்டு வினியோகித்தது. பல பிரிவினரை புரட்சிசெய்ய தூண்டிவிட்டது.

பிரச்சார உபயோகத்துக்காக அயல்நாடுகளிலிருந்து ரேடியோ, ட்ரான்ஸ்மிட்டர்களை இறக்குமதி செய்ய முயற்சி செய்தது. (எனக்கு எதிராகப் போடப்பட்டது இது)

நாசவேலையில் ஈடுபடவும், பொதுச் சொத்துக்களை அழிக்கவும் திட்டமிட்ட கூட்டங்கள் கூட்டியது.

*பர்சிய வளைகுடா, டிகோ கார்சியா(!) இங்கெல் லாம் ரேடியோ ட்ரான்ஸ்மிட்டர் பொருத்திக் கொள்ள முயன்றது.

அயல் நாடுகளிலிருந்த தனிப்பட்டோரோடும், ஸ்தாபனங்களோடும் தொடர்புகளை ஏற்படுத்தியது, வளர்த்தது.

பிராஸிகியூஷன், 500 தஸ்தாவேஜுகளையும் 575 சாட்சி கள் பட்டியலையும் தாக்கல் செய்தது. குற்றச்சாட்டுக்களை நிருபிக்க இவர்களை நம்பியிருந்தது. இந்த வழக்கைத் தயாரித் ததில் காட்டிய தீவிரமும், ஈடுபாடும் எங்களுக்கு 20ஆண்டுகள் சிறைதண்டனை வாங்கித் தருவதில் உள்ள தீவிரத்திற்கு சமமாகக்காணப்பட்டது. நீதித்துறை முழுவதுமாக அதைரியப் பட்டு கலகலத்துப் போயிருந்த நிலையில் எங்களுக்கு தண்டனை கிடைப்பது நிச்சயமாகத் தெரிந்தது. எங்களில் 40 வயதைத் தாண்டியவர்கள் ஜெயிலிலிருந்து உயிரோடு வெளியே வருவதும் நிச்சயமில்லை.

இருந்தும் எங்கள் மனதில் சில முக்கியமான கேள்விகள் தோன்றின. வன்முறை வழிகளில் நாங்கள் நம்பியிருந்ததை வெளிக்காட்டி, எங்களுக்கு நிச்சயமாக தண்டனை வாங்கித்தர அரசு மும்முரமாக இருந்ததென்றால், அவர்களிடம் ஆதாரங் கள் இருந்தும் இன்னும் கடுமையாகக் குறிப்பிடும்படியான குற்றச்சாட்டுகளை ஏன் சேர்க்க வில்லை? சினேகலதா ரெட்டி யையும், கிரிஜா ஹில் கோலையம் ஏன் இதில் சேர்க்கவில்லை? இவர்கள் மீதுள்ள சதிக்குற்றங்களையும், குறிப்பிட்டுக் கூறக் கூடிய குற்றங்களையும் சுலபமாக நிருபிக்க முடியும். குற்றம் சாட்டப்பட்ட எங்களில் சிலரை விட இவர்கள் இன்னமும் மோசமான நிலையில் இதில் சம்பந்தப்பட்டிருந்தார்கள். பம்பாயை விட பீஹாரில் வெடி விபத்துக்கள் அதிக அளவில் நிறைய இருந்தன. அர்ராடெலிபோன் நிலையம் முழுவதுமாக நாசப்படுத்தப்பட்டு விட்டது. பீஹாரில் ரயில்வே துறை

அடிக்கடி மோசமாக பாதிக்கப்பட்டது. கர்னாடகாவிலும், இவை அதிகம். பெங்களூர் நகரில் மட்டும் இருப்புப் பாதைகளில் ஐந்துதடவை வெடி விபத்துக்கள் நிகழ்ந்திருக்கின்றன. சினேகிலதகதான் தென்னிந்தியாவில் எங்களுடைய முக்கிய தொடர்பு. இவரைச் சுற்றிலும் விரதம் பூண்டு முழுமூச்சோடு காரியங்களில் ஈடுபடும் ஒரு கூட்டம் இருந்தது. இவர்கள் வெற்றியோடு காரியங்களைச் செய்தார்கள். கிரிஜாவுக்கு ஜார்ஜோடு தொடர்பு கொண்டவர்கள் நிறையப் பேரைத் தெரியும். என்னையும் விட அதிகமான கூட்டங்களில் கலந்து கொண்டிருக்கிறார். அப்படியும் சினேகலதாவும் கிரிஜாவும் வழக்கில் சம்பந்தப் படுத்தப்படவில்லை. பீஹாரிலும். கர்னாடகவிலும் நடந்த நிகழ்ச்சிகளும், பொதுப் படையில் கொஞ்சம் குறிப்பிட்டதைத் தவிர தனியாக சொல்லப்படவில்லை.

இதற்கு ஆதாரபூர்வமான பதில்களை சி.பி.ஐ. தான் கொடுக்க முடியும். ஆனால் இவைகளை யூகித்துப் பார்க்க எங்களுக்குச் சிரமமாக இருக்கவில்லை.

குற்றவாளிகளாக சினேகலதாவையும், கிரிஜாவையும் சேர்த்திருந்தால் வழக்கிற்கே புதிய ஒரு பரிமாணம் வந்திருக்கும். பிராஸிக்யூஷன் குற்றம் சாட்டப் பட்டவர்களை வயது சமூக அந்தஸ்து, தொழில், அரசியல் ஈடுபாடு இவைகளில் ஒரு சராசரி இந்தியனின் தோற்றத்தை இணைத்துப் பார்க்க முன் யோசனை இல்லாமல் அவர்களாக முடிவு செய்தது சரியல்ல. அதோடுகூட வழக்கில் இரண்டு பெண்களைச்சம்பந்தப்படுத்தி எங்கள் முயற்சிகளுக்கு ஒரு கவர்ச்சியைச் சேர்க்க அவர்கள் விரும்பாமல் இருந்திருக்கலாம். எதிர்க்கசிட்யினரை ஜனநாயகத்துக்குப் புறம்பானவர்கள், வன்முறையாளர்கள் என்று எடுத்துக்காட்டும் வகையில் இந்த வழக்கை கொண்டு போக தீவிரமாக இருந்தனர். திறமையில்லாத ஒரு அமெச்சூர் கூட்டம் நாங்கள், எங்களால் அரசாங்கத்துக்கு அப்படி ஒன்றும் பெரிய பயமும் கவலையும் கிடையாது என்று காட்டிக் கொள்ளவும் அவர்கள் நினைத்திருக்கலாம். நாடு முழுவதும்

நாங்கள் காட்டிய எதிர்ப்புக்கு விளம்பரம் கொடுக்க அவர்கள் விரும்பவில்லை. எதிர்ப்பை காட்டியதுதான் எங்கள் இயக்கத் தின் முக்கிய நோக்கமாக இருந்தது. அதனால்தான் அரசாங்கம், மக்கள் சர்வாதிகாரத்தை ஒப்புக் கொள்ள மாட்டார்கள் என்றும், அரசாங்கத்தால் கட்டுப்பாடோடு செய்யப்படும் எதிர்ப்பை அடக்க முடியாது என்று நிரூபிக்கும் வகையில் நாங்கள் செய்திருந்த காரியங்களேயே குற்றச் சாட்டுகளாக குறிப்பிட விரும்பவில்லை.

இந்த வழக்கை அரசியல் சம்பந்தமே இல்லாத வெறும் கிரிமினல் வழக்காகவே நடத்த வேண்டும் என்று அரசு அசட்டுதனமாக நினைத்தது. எங்கள் கொள்கைகளேயும் நடவடிக்கைகளேயும் வெறும் அரசியல் காரியங்கள் என்று சொல்ல எங்களுக்கு வாய்ப்பு அளிக்காமல் பிரச்சார லாபங்கள் அனைத்தையும் தங்களுக்கே வைத்துக் கொள்ள விரும்பினார்கள். எங்கள் மீது இந்த வழக்கினல் மக்களுக்கு அனுதாபமும் ஆதரவும் ஏற்பட்டு விடக்கூடாது. எதிர்ப்பின் ஒரு பொறியைக்கூட உயிரோடு விட்டு வைக்கக்கூடாது என்று அரசு நினைத்தது.

செப்டம்பர் 24–ந் தேதி கோர்ட்டில் தாக்கல் செய்யப் பட்ட குற்றப் பத்திரிகை நாட்டின் எல்லா பத்திரிகைகளிலும் முதல் பக்கத்தில் முழு விவரங்களோடு வெளியிடப்பட்டன. ஆல் இந்தியா ரேடியோ தனது எல்லா செய்தி ஒலி பரப்பு களிலும் இதை ஒலி பரப்பியது. பி.பி.ஸி.. வாய்ஸ் ஆப் அமெரிக்கா ரேடியோக்களும் இவற்றின் சுருக்கத்தை ஒலி பரப்பின. எங்களில் பலருக்கும் எங்கள் கொள்கைகளில் பிடிப்புக் கொண்டவர்களுக்கும், சர்வாதிகார எதிர்ப்பை விட்டுக் கொடுக்காதவர்களுக்கும், இது மகிழ்ச்சியாகவே இருந்தன. எங்கள் செயல்கள் யாவுமே குற்றப்பத்திரிகையில் விவரிக்கப்படாமல் போனாலும், அதில் ஒரு கிளுகிளுப்பு இருந்தது. தலைமறைவு இயக்கத்தினர் சுறுசுறுப்பாக தைரியத்தோடும் எதிர்த்துப் போராடியிருக்கிறார்கள். மக்களை

எழுச்சி கொள்ள செய்திருக்கிறார்கள் என்று தெளிவாகப்புலப் பட்டது. இது எங்கள் மனதுக்கு ஒரு தெம்பைக் கொடுத்தது மட்டுமின்றி இன்னமும் பிடிபடாமல் வெளியே செயலாற்றிக் கொண்டிருந்தவர்களுக்கு ஒரு புதுப் பலத்தை கொடுத்தது. இளைஞர்களுக்கு நாங்கள் 'ஹீரோ'க்கள் ஆகி விட்டோம் என்பது எங்களுக்குப் பிறகு தெரிந்தது. பல இளைஞர்கள் நாங்கள் அவர்களோடு தொடர்பு கொள்ளவில்லையே, தங்களையும் சேர்த்துக் கொள்ளவில்லையே என்று வருத்தப் பட்டார்கள். இந்த விசாரணை ஒரு புகழ் பெற்ற விசாரணை யாக ஆகிவிட்டது. பலத்த பாதுகாப்புக்கும் ஆபத்துக்கு மிடையே திரளான மக்கள் எங்களைக் காண, வழக்கு நடந்த ஆறு மாதங்களிலும் கோர்ட்டுக்கு வந்தனர்.

எங்களைப் போலவே நடக்கமுயற்சி செய்தவர்களுக்கு இந்த வழக்கு ஒரு பாடமாக அமைய வேண்டும் என்று அரசாங்கம் நினைத்தது. கடுமையாக நடவடிக்கை எடுத்து ஆயிரக்கணக்கானவர்களை சிறைக்கு அனுப்பி, அடிப்படை உரிமைகளைப் பறித்து, நடவடிக்கைகள் எடுக்காமல் இருந் திருந்தால் எங்களைப் போன்ற பொறுப்பற்ற, ஜனநாயகத்தில் நம்பிக்கையில்லாத, வன்முறையை கடைப்பிடிக்கும் மக்கள் குழப்பம் விளைவித்து சதி செய்ய முடியாத அளவுக்கு நாட்டுக்கு தீங்கு விளைவிப்பார்கள் என்று தங்கள் பிரச்சாரத் துக்கு இந்த வழக்கை உபயோகித்துக் கொள்ள விரும்பி னார்கள். ஆனால் அவர்கள் நினைத்தது தவறு என்று நிகழ்ச்சி கள் நிரூபித்தன. பார்க்கப்போனால் அரசாங்கத்துக்கு எதிராக தொடர்ந்து பிரச்சாரம் செய்யவும், இந்திரா காந்தியின் நோக்கங்களையும் அவரைச் சுற்றி இருந்தவர்களின் நோக்கங்களையும் வெளிப்படுத்த இந்த வழக்கு எங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்தது. இந்த சந்தர்ப்பங்களை எப்படி நாங்கள் எங்கள் எதிர்ப்புக் கொள்கைகளை விளக்கவும், கொடுமையை எதிர்த்துப் போராட எங்களுக்கு இருந்த உரிமையை நியாயப்படுத்திக் காட்டவும் பயன்படுத்திக் கொண்டோம் என்பதைப் பின்னால் விவரிக்கிறேன்.

குற்றப்பத்திரிகையைத் தாக்கல் செய்து அவை களில் வெளியிட்டதோடு அரசு இந்த விசாரணையை மற்ற கிரிமினல் வழக்குகளைப் போல் இதுவும் நீதிமன்றத்தில் தொடரப் படும் என்று ஒரு அறிவிப்பையும் வெளியிட்டது. பத்திரிகை யாளர்களும் பொதுமக்களும் அனுமதிக்கப்படுவார்கள் என்றும் அறிவித்தனர். குறிப்பாக அயல்நாட்டு பத்திரிகை யாளர்கள் நீதிமன்றத்துக்கு வந்து விசாரணை பற்றி எழுத லாம் என்று சொல்லப்பட்டனர், 'இந்த அறிவிப்புகளுக்குக் காரணம் அரசு தங்கள் பக்கத்தை நன்கு தெரியப்படுத்தி எங்களை பயங்கர குற்றவாளிகளாக வெளிக்காட்ட வேண்டும் என்பதே. இந்திய பத்திரிகைகளைப் பொறுத்தமட்டில் அவர் கள் தரப்பை மட்டும் வெளிவரும்படி பார்த்துக் கொண்டார் கள். நாங்கள் நீதிமன்றத்தில் சொல்லிய பலவற்றைப் பத்திரி கைகளில் நாங்கள் போடச் செய்ய முடியவில்லை. அயல்நாட்டுப் பத்திரிகைகளைப் பொறுத்தமட்டில் இவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. வழக்கின் ஆரம்பத்தில் நீதிமன்றத்துக்கு வரும் அயல்நாட்டு பத்திரிகையாளர்களிடம் நாங்கள் எப்போது முக்கியமான செய்திகளைக் கூறுவோம், எப்போது நீதிமன்றத்தில் பரபரப்பை ஏற்படுத்துவோம் என்பதை முன் கூட்டியே சொல்லி வைத்து விடுவோம். தணிக்கை அதிகாரி கள் திறமையில்லாதவர்களாகவும், புரியாதவர்களாகவும் இருந்ததால் நிவாரணம் கோருவதற்கு இல்லாமல் வெறும் பிரச்சாரத்துக்கு மட்டுமே நாங்கள் டெல்லி உயர்நீதிமன்றத் தில் தாக்கல் செய்த ரிட் மனுக்களும் அப்பீல்களைப் பற்றிய செய்திகளையும் அவர்கள் நிறுத்தவில்லை. அவை பத்திரிகை களில் அப்படியே வெளியானதால் நாங்கள் எந்த மாதிரி செயல்களில் ஈடுபட்டிருக்கிறோம்; என்ன நடந்து கொண்டிருக் கிறது என்பதைப்பற்றி இந்திய வாசகர்கள் கொஞ்சமாவது தெரிந்து கொண்டனர்.

மற்ற எல்லா கிரிமினல் வழக்குகளைப் போலவே எங்கள் வழக்கும் நடக்கும் என்று கூறப்பட்ட அந்த அறிவிப்புக்குப் பின்னால் இருந்த அரசாங்கத்தின் எண்ணம் புரிந்து விட்டது.

இதற்குப் பொருள் இந்த வழக்கிற்கு அரசியல் பூச்சு எல்லாமே நீக்கப்படும். நாங்கள் சாதாரண கிரிமினல் குற்ற வாளிகளைப் போல நடத்தப்படுவோம் என்று பொருள். பிராஸிகியூஷன் எங்கள் குற்றங்களை வர்ணிக்கும் போது ஒவ் வொரு தடவையும் கீழ்த்தரமான குற்றம் என்று குறிப்பிட்டுச் சொன்னார்கள். எங்களை மிகவும் சாதாரணமான குற்றவாளி களாக, கொலை, கொள்ளை செய்த குற்றவாளிகளைப் போல தோன்றச் செய்ய வேண்டும் என்று நினைத்தார்கள். பிராஸிக் யூஷன் கூற்றுப்படி நாங்கள் கொலை, கற்பழிப்பு குற்றங்களை செய்தவர்களைவிட எந்த விதத்திலும் உயர்ந்தவர்களல்ல, அதேமாதிரிதான் நடத்தப்பட வேண்டும். மாஜிஸ்ட்ரேட்டுக்கு முன்னால் கொண்டு வரப்படுவதற்கு நாங்கள் முன்பாகவே நாங்கள் எப்படி நடத்தப்படுவோம் என்பது தெரிந்து விட்டது. செப்டம்பர் 26 அன்று பரோடாவிலிருந்து வந்தவர் களை அவர்களுடைய காவல் காலத்தை நீடிக்கச் செய்ய மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் கொண்டு வரப்பட்டனர். அவர் களது இரு கைகளுக்கும் விலங்கு போட்டு ஒரு போலீஸ்கார ரோடு சங்கிலியால் இணைத்துக் கொண்டு போகப்பட்டனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும் இரண்டு போலீஸாரும் ஒரு ஹெட்கான்ஸ்டபிளும் வந்தனர். இதைத் தவிர துப்பாக்கி யோடு ஒரு போலீஸ்காரர் உடன் வந்தார். இம்மாதிரி கோர்ட்டுக்குக் கொண்டு போகப்பட்டது மட்டுமின்றி, மாஜிஸ்ட்ரேட்டுக்கு முன்னாலும் கைவிலங்குகளுடனே ஆஜர் படுத்தப்பட்டனர். கொலைக்குற்றம் புரிந்தவர்களுக்குக்கூட இந்த மரியாதை தரப்படுவதில்லை. மாஜிஸ்ட்ரேட்டிடம் இது பற்றி சொன்னபோதும், அவர் ஒன்றும் சொல்லவில்லை.

இதிலிருந்து பிரதான மெட்ரோபாலிடன் மாஜிஸ்ட் ரேட் முன்னால் எங்களை ஆஜர்படுத்தும் போது எப்படி நடத் தப்படுவோம் என்பது புரிந்து விட்டது. சாதாரண குற்றவாளியைப் போல் நடத்தக்கூடாது என்று முரண்டு பிடிக்கலாமா? அப்படியானால் கட்டித் தூக்கிக் கொண்டு போவார்களா? இல்லை அடிப்பார்களா?

சட்டமும் முன்னோடிகளும் எங்கள் பக்கமே இருந்தன. குற்றவாளி வன்முறைச் செயல்களில் இறங்குவோர் என்று கருதப்பட்டாலோ அல்லது தப்பிஓடிவிடுவார் என்று சந்தேகிக் கப்பட்டலோ தவிர, அவரை விலங்கு பூட்டிக் கொண்டு போகக் கூடாது என்று நாடு முழுவதும் போலீஸுக்கு உள்துறை அமைச்சரகம் திரும்ப திரும்ப உத்தரவுகள் போட்டிருக்கிறது. ஜார்ஜையும் பல தடவை பல இடங்களுக்கும் கோர்ட்டுக்கும் அழைத்துப்போயிருக்கிறார்கள். ஒரு தடைவயாவது கையில் விலங்குபோட்டு அழைத்துப்போனது கிடையாது. நாங்கள் தப்பித்துக் கொண்டு போகவோ வன்முறைகளில் ஈடுபடவோ முயற்சித்தது கிடையாது. தவிரவும் அரசியல் கைதிகளுக்கு விலங்கிடக்கூடாது என்பதுமரபு. நாங்கள் எல்லோருமே மிசா கைதிகள். எங்களில் 10 பேருக்கு ஜாமீன் கொடுத்திருக்கிறார்கள். மிசா கைதிகளுக்கு ஜாமீன் பிரயோசனமில்லை. இதனால் எங்களுக்கு கை விலங்கு போடுவது, அதுவும் கோர்ட் அறையில். போடுவதுநியாயமாகாது. நாங்கள் ஓட திட்டம் போட்டிருக்கிறோம் என்று சந்தேகப்பட்டால் ஒரே ஒரு வாசல்படி மட்டும் இருந்த அந்த அறைக்கு சரியான காவல் சுலபமாய் போட்டிருக்கலாம். ஆனால் இம் மாதிரியான சட்டபூர்வமான நியாயபூர்வமான எங்களுடைய வாதங்களைக் கேட்டு நிவாரணம் வழங்க அங்கு யார் இருந்தார்கள்? நாங்கள் மறுப்போ எதிர்ப்போ காட்டியிருந்தால் எங்களை அடித்து நொறுக்கியிருப்பார்கள், இதற்கு நாங்கள் தயார் தான். ஆனால் முடிவில் என்ன ஆகப் போகிறது? நீதிமன்றமும் இதை கவனிக்கப் போவதில்லை. தணிக்கை விதிகள் கடுமையாக இருந்ததால் விளம்பரமும் கிடைக்கப் போவது கிடையாது.

ஆகவே இதை எங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு எங்களை அரசு கேவலப்படுத்த உத்தேசித்திருப்பதை பரபரப்பாக்கிவிட விரும்பினோம். எங்களை கோர்ட்டுக்கு கொண்டு வருவதற்கும் முன் தினம், என்ன செய்யலாம் என்று நானும் பெர்னாண்டஸும் ஆலோசித்தோம். கைவிலங்கு, சங்கிலி

போடப்படுவதை எதிர்க்க வேண்டாம் என்று முடிவு செய்தோம். மாஜிஸ்ட்ரேட் முன்னுல் ஒரு அறிக்கை கொடுப்பதன் மூலம் இதற்கு ஒரு விளம்பரம் தேடிக் கொள்ளலாம் என்று நினைத்தோம். விலங்கு போடுவதற்கு எதிர்ப்பு தெரிவிப்பது மட்டுமின்றி, எங்களுக்குச் சட்ட உதவி அளிக்க மறுத்த கோர்ட்டில், இருந்தபோது ஒரு கப்காபி கூட குடிக்கக்கூடாது என்று தடுத்து விட்டது, இவைபற்றியெல்லாம் கூட சொல்லி விட நினைத்தோம்.

குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டு விட்டதாக செப்டம்பர் 25-ந் தேதி பத்திரிகைகளில் படித்ததும் நாங்கள் எங்கள் வக்கீல்களோடு கடிதம் மூலமாகவோ தந்தி மூலமாகவோ தொடர்பு கொள்ள வசதி செய்து கொடுக்கும்படி எங்கள் சிறைச்சாலை சூப்ரின்டெண்டை அனுமதி கேட்டோம். ஜுன் 11 அன்று டெல்லி கோர்ட்டுக்கு கொண்டுவரப்பட்ட பிறகு ஹிஸ்ஸாருக்கு மாற்றப்பட்ட போது அவர் தன் வக்கீல்களை சந்திக்க அனுமதி மறுக்கப்பட்டது. அவரைச் சந்திக்க வேண்டுமென்று எழுப்பப்பட்டகோரிக்கைகள் ஒன்றுநிராகரிக்கப்பட்டன அல்லது அவைகளுக்கு பதில் எதுவும் வராது. இதே போல் வக்கீல்களைச் சந்திக்க நாங்கள் கேட்டபோது எங்களுக்கும் இதே கதி தான்.

எங்கள் பரோடா நண்பர்கள் நீதிமன்றத்துக்கு கொண்டு வரப்பட்ட போது, அவர்களும் காபி, டீ, டிபன் சாப்பிட அனுமதிக்கப் படவில்லை. எங்களுக்கும் ஆரம்ப காலத்தில் இந்த மாதிரிதான் நடந்தது. காலையில் ஜெயிலை விட்டு அழைத்துப் போனுல், மாலையில் திரும்ப அழைத்து வருவார்கள். பகல் முழுவதும் காபி, டீ, பிஸ்கட் எதுவுமே சாப்பிட அனுமதிக்கமாட்டார்கள். கோர்ட்டுக்கு வெளியே இருந்த ஒரு குழாயிலிருந்து தண்ணீர் குடிக்க வேண்டா வெறுப்பாக அனுமதியளிப்பார்கள். தேவையற்ற ஆனுல் வண்டுமென்றே சட்ட வசதிகள் மறுக்கப்பட்டதையும், கோர்ட்டுக்கு கொண்டு வரப்பட்ட நாட்களில் எங்களை சாப்பிட அனுமதிக்க வேண்டும் என்ற சாதாரண விஷயங்

களுக்காகவும் எதிர்ப்பு தெரிவிப்பது கோர்ட்டில் நாங்கள் கூறிய ஸ்டேட்மெண்டின் நோக்கம் எங்களுக்குத் தர வேண்டிய அடிப்படை உரிமைகளை மறுத்ததற்காக அரசாங்கத்தை தாக்கியது மட்டுமின்றி, இந்தியாவில் சுதந்திரம் பறிக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகளாக எங்களைக் காட்டிக் கொண்டோம். இந்த அறிக்கையை நானே எழுதினேன். அது நன்றாகவே வந்திருந்தது. நான் முன்பு எழுதிய பல அறிக்கைகளைப் போலவே இந்த சூழ்நிலையில் எழுதப்பட்டவைகளில் மிகவும் சிறந்ததாக இது இருந்தது. முதலில் எழுதியதில் திருத்தம் எதுவும் நானோ, ஜி.ஜி. பரீக்கோ, ஜார்ஜோ செய்யவில்லை. அந்த அறிக்கையை ஜார்ஜ் படிப்பதாக இருந்தது. பிராஸிகியூட்டர், மாஜிஸ்ட்ரேட் இவர்கள் தடுத்தாலும் கூட அதை படிப்பதாக இருந்தார். அதற்கு பல பிரதிகளை நான் கையால் எழுதி கோர்ட்டுக்கு, நிச்சயமாக நிறைய வந்திருக்கும் அயல் நாட்டு பத்திரிகை நிருபர்களுக்குக் கொடுக்கத் தயாராக வைத்திருந்தேன்.

எதிர் பார்த்தது போலவே எங்களுக்கு விலங்கிட்டு, சங்கிலி மாட்டி ஜெயிலை விட்டு வெளியே கொண்டு போனார்கள். எங்களை அழைத்துப் போக வந்திருந்த போலீஸ் சூப்பரிண்டென்டிடம் பெயரளவில் எதிர்ப்புத் தெரிவித்தேன். ரொம்பவும் எதிர்த்தால் ஒரு வேளை விலங்கு மாட்டாம லிருந்து விடுவார்களோ என்ற பயமும் எனக்கு உண்டு. ஏகப் பட்ட ஆர்ப்பாட்டங்களோடு, பலத்த பாதுகாப்போடு எங்களை அழைத்துப் போனார்கள். இருப்பதிலேயே மிகவும் ஆபத்தான ஜார்ஜை தனி வண்டியில் ஏற்றியிருந்தார்கள். அவருக்கு விலங்கு போட்டு, சங்கிலி மாட்டி, துப்பாக்கிகள் ஏந்திய ஒரு டஜன் போலீஸ்காரர்கள் சுற்றி நிற்க, ஒரு இன்ஸ்பெக்டர் இவர்களை தலைமை தாங்கி நடத்தி வந்தார். உடல் நலமில்லாத பரீக்கும், விரேன் ஷாவும், ஜார்ஜோடு இருந்தனர். மற்றவர்கள் இரண்டு கருப்பு கார்களில் ஒவ்வொருவருக்கும் மூன்று காவலாளிகளோடு இருந்தோம். ஒவ்வொரு காருக்கும் பலத்த பாதுகாப்பு இருந்தது. இந்த

ஊர்வலத்திற்கு முன்னால் ஒரு ஜீப்பில் தலைமை தாங்கி வந்த டி. எஸ். பி. இருந்தார். அவரோடு அதில் இரண்டு இன்ஸ்பெக்டர்களும் இருந்தனர். அடுத்து ஒரு ட்ரக் நிறைய ஆயுதம் தாங்கிய போலீஸ்படை. அதை அடுத்து ஜார்ஜ் இருந்த வேன், தொடர்ந்து எங்களுடைய இரண்டு கார்கள், கடைசியாக ஒரு ட்ரக் நிறைய ஆயுதம் தாங்கிய போலீஸ் படை. ஒரு ஆர்ப்பாட்டமான ஊர்வலம். எனக்கும் எங்களில் பலருக்கும் இது பெருமிதமாக இருந்தது.

1975 ஜூன் 26—அந்த துக்கநாளில் இந்திரா காந்தியை பயமுறுத்தவும்,கவிழ்க்கவும் நாங்கள் புறப்பட்டோம். எங்கள் திட்டங்களை முழுவதுமாக செயலாற்றுவதற்கு முன்பாகவே எங்கள் அமைப்பின் பெரும்பகுதிதான் துளாக்கிப்பட்டு விட்டது.

இந்திரா காந்தியையும் அவரது சர்வாதிகார ஆட்சியை யும் நாங்கள் கவலைப்பட செய்தோமே தவிர, பயமுறுத்த வில்லை. இருந்தபோதும்கூட எங்களுக்கு ஆயுதப்படையினால் பாதுகாப்பு போட்டு அழைத்துப்போகச் செய்யுமளவிற்கு நாங்கள் பயங்கர பழிகாரரர்களாகக் கருதப்பட்டோம். சுதந்திரத்திற்குப் பிறகு இந்தியாவில் வேறு எந்த அரசியல் பிரிவும் இம்மாதிரி நடத்தப்படவில்லை. சிறையிலிருந்து மாஜிஸ்ட்ரேட் கோர்ட் வரை இருந்த 10 மைல் தூரமும் விடாமல் கோஷம் போட்டபடியே போனோம். அதே போல கோர்ட் லாக் அப் அறையிலிருந்து கோர்ட் வரையில் உள்ள சிறிய தூரத்தைக் கடக்கும்போதும் தொடர்ந்து சப்தம் போட்டபடியே வந்தோம். அவர்களால் நாங்கள் கோஷம் போடுவதைத் தடுக்க முடியவில்லை. ஆனால் சில நாட்கள் கழித்து லாக்—அப்பிலிருந்து கோர்ட் வரை உள்ள தூரத்தை நடந்து கடக்காமல் தடுத்துவிட்டனர். இரு பக்கத்திலும் பொதுமக்கள் கூட ஆரம்பித்து விட்டார்கள். புகழ்பெற்ற பரோடா வெடி வழக்கு குற்றவாளிகள் இவ்வளவு பாது காப்போடு அழைத்துச் செல்வதைப் பார்த்து அவர்கள் பிரமித்துப்போய் விட்டார்கள்.

முதல் நாளில் லாக்—அப்பில் கையில் விலங்கு போடாமல் சில மணி நேரம் அடைக்கப்பட்டிருந்தோம். ஒவ்வொருவராக வெளியே அழைத்து செல்லப் படும்போது பார்த்தேன். முதலில் சென்றவர்கள் கையில் விலங்கு போடப்பட வில்லை. என்ன பயங்கரம்! நாங்கள் எழுதி வைத்திருக்கும் அறிக்கையை எங்களை படிக்க விடாமல் மறுத்துவிடப் போகிறார்களா? ஆனால் நடந்தது என்னவென்றால் லாக்—அப்புக்கு வெளியே உள்ள திடலில் நிறுத்தி வைக்கப்பட்டு விலங்கு பூட்டப் பட்டோம். அப்பாடா! எங்களை எப்படி விலங்கு பூட்டி அழைத்துப் போனார்கள், எப்படி நாங்கள் அதைத் தாங்கிக் கொண்டோம் எனறெல்லாம் உலகுக்குத் தெரியப்படுத்தும் முயற்சியில் நாங்கள் வெற்றி பெறத்தான் போகிறோம்!

கோர்ட்டில் எள் போட்டால் எள் விழாத கூட்டம். அயல் நாட்டு நிருபர்கள் பலரும் வந்திருந்தனர். பி. பி. ஸி. ரேடியோ நிருபர், லண்டன் 'டைம்ஸ்', பிராங்க்பர்ட்டர், அலெஜிமீன், லெ மாண்டே, நியூயார்க் டைம்ஸ், வாய்ஸ் ஆப் அமெரிக்கா— இன்னும் பலர். எங்களிடம் அறிக்கையின் பிரதிகள் கொஞ்சம் தான் இருந்தன. கொடுக்கப்பட வேண்டியவர்கள் நிறைய பேர் இருந்தனர். நான் உள்ளே நுழையும்போதே கையில் இருந்த பிரதிகளை 'பிராங்பர்ட்டர், அலெஜிமீன் 'நிருபரான வெர்னர் ஆடம்ஸிடம் கொடுத்து எல்லோருக்கும் வினியோகிக்கச் சொன்னேன். ஒரு பிரதியை சமாச்சார் நிருபரிடம் கொடுத்து வீணடித்தேன். இருந்தாலும் ஒரு சபலம்—அவர்கள் அதை உபயோகித்தால் இந்தியப் பத்திரிகைகள் எல்லாவற்றிலும் வரலாம் இல்லையா!

விசாரணை ஆரம்பமாகியதும் ஜார்ஜ், மாஜிஸ்ட்ரேட்டிடம் ஒரு அறிக்கையைப் படிக்கப் போவதாகக் கூறினார். உடனே மாஜிஸ்ட்ரேட்டோ அல்லது பப்ளிக் பிராசிக்யூட்டரோ ஏதாவது சொல்ல ஆரம்பிக்கும் முன்பாகவே, எழுதி வைத்திருந்ததைப் படிக்க ஆரம்பித்தார். இடையிடையே இதற்கும் வழக்குக்கும் என்ன சம்பந்தம் என்று மாஜிஸ்ட்ரேட் சொல்லிக்கொண்டே இருக்க, அவர் படித்துக்கொண்டே

போனார். உறுதியான குரலில் அவர் கணீரென்று படிப்பதை கேட்க ரொம்பவும் கம்பீரமாக இருந்தது. 'எங்களுக்குப்பூட்ட பட்டிருந்த சங்கிலிகள் நாட்டையே அடிமைப்படுத்த போடப் பட்ட விலங்குகள்' என்று அவர் படிக்கும்போது நாங்கள் எல்லோரும் எங்கள் கைகளை உயர்த்தி கைகளில் பூட்டப் பட்டிருந்த சங்கிலிகளை ஆட்டி ஓசைப்படுத்தினோம். கூடியிருந் தவர்கள் வெகுவாக நெகிழ்ந்துபோய் விட்டார்கள். பி. பி. ஸி. தன்னுடைய ஹிந்தி ஒலிபரப்பில் இதை நன்ருக வர்ணித்துக் கூறியது.

## ஜார்ஜ் பெர்னண்டஸ் படித்த அறிக்கை

மேன்மை தங்கிய கனம் நீதிபதி, வழக்கை மேலே தொடருவதற்கு முன்பாக எனக்காகவும் என் சக குற்றவாளி கள் சார்பாகவும் ஒரு அறிக்கையைச் சமர்ப்பிக்க விரும்பு கிறேன். எங்களில் இரண்டு பிரிவினர் உங்கள் சக மாஜிஸ்ட் ரேட் ஒருவர் முன்பாக சென்ற வாரம் ஆஜர்படுத்தப்பட்ட போதும், இப்போதும் நாங்கள் கோர்ட் காம்பவுண்ட்க் குள்ளும் தங்கள் முன்பாக சேம்பரிலும் விலங்கு போடப்பட்டு நிறுத்தப்பட்டிருக்கிறோம். இதற்கு முன்னோடிகள் எதுவும் கிடையாது. நடைமுறைக்கும் ஒவ்வாத ஒன்று இது. எந்த அரசியல் கைதிகளும்—தற்போதைய சர்வாதிகார ஆட்சியி லும்கூட டெல்லி நீதிமன்றங்களில் கைவிலங்குகளோடு நிறுத்தப்பட்டதில்லை. இதே வழக்கில் நாங்கள் ஆறு மாதம் முன்பு நீதிமன்றத்துக்கு கொண்டு வரப்பட்டபோதும் விலங்கு பூட்டப்படவில்லை. இப்போதைய இந்த மாறுபட்ட நடவடிக் கைக்கு திடீரென்று பாதுகாப்பு காரணங்கள் எதுவும் தோன்றி விடமுடியாது.

அரசியல் கைதிகளுக்கு கை விலங்கு மாட்டக்கூடாது என்று சமீபத்தில் பார்லிமெண்ட் உறுப்பினர்களுக்கு உள் துறை அமைச்சர் கொடுத்திருந்த வாக்குறுதியை இப்போது உங்களுக்கு நான் நினைவு கூற விரும்பவில்லை. காரணம் இந்த

அரசின் வார்த்தைகள் மீது நாங்கள் நம்பிக்கை இழந்து விட்டோம். இருந்தாலும் நான் பதிவு செய்து கொள்ளும் நோக்கத்தில் மட்டுமே இதை நான் சொல்கிறேன்.

இந்தக் காரியம் ஒரு சாதாரண போலீஸ் அதிகாரியின் இஷ்டத்தில் நடப்பதல்ல. பெரிய இடத்தில் எடுக்கப்பட்ட முடிவு இது. பாதுகாப்புக்கான காரணங்கள் இல்லை, எங்களை இழிவுபடுத்தும் நோக்கத்தில்தான் இப்படி செய்யப்படுகிறது.

இந்த ஏதேச்சாதிகார நடவடிக்கையை எதிர்க்கும் ஆசை எங்களுக்கு ஏற்பட்டது. அதை எங்கள் கடமையாகவும் கருதினோம். ஆனால் நாங்கள் எதிர்ப்பு மட்டுமே தெரிவிப்பது என்று முடிவெடுத்தோம். நாங்களும், நாங்கள் இன்று சுமக்கும் இந்த சங்கிலிகளும் தானாக ஏற்படுத்திக் கொண்ட ஒரு சர்வாதிகாரத்தின் சங்கிலியால் பிணைக்கப்பட்டு அடிமைப் படுத்தப்பட்ட ஒரு நாட்டின் சின்னங்கள் என்று நினைத்து மகிழ்கிறோம். பெருமைப்படுகிறோம்.

இந்த அவமானம் இன்னும் எத்தனை காலத்துக்கு எங் களுக்கு தொடர்ந்து இழைக்கப்பட வேண்டும் என்று முடிவு செய்வது உங்கள் பொறுப்பு.

பயமுறுத்தப்பட்ட, பலமில்லாத, அல்லது இஷ்ட மில்லாத நீதித்துறையின் துணைகொண்டு அதை மௌன சாட்சியாகக் கொண்டு ஆட்சி நடத்துபவர்களுடைய நோக்கம் எங்களை அவமானப்படுத்துவது மட்டுமே அல்ல.

எங்களுக்கு உடலுக்கு வேண்டிய சௌகரியங்களையும், எங்களை பாதுகாத்துக் கொள்ள சட்ட உதவிகளையும் கொடுப் பதற்கு அரசாங்கம் மறுக்கிறது. எங்களுக்கு தரப்பட்ட , இப் போது சிறையில் தரப்படும் வசதிகள், எங்களை நடத்தப்படும் முறை திருப்திகரமாகவே இல்லை. இப்போது கொஞ்சம், நாங் கள் நடத்தப்படும் விதத்தில் முன்னேற்றம் காணப்பட்டாலும் சாதாரணமாக அரசியல் கைதிகளுக்கு நடத்தப்பட வேண்டிய முறையில் நாங்கள் நடத்தப்படவில்லை. வைத்திய வசதிகள், கவனிப்பு போதவே போதாது. இவ்வளவு வசதி குறைவாக இருந்தும், சரியான கவனிப்பு இல்லாதபோதும் எங்களில்

யாரும் படுக்கையில் விழவில்லை. காரணம் நல்ல ஆரோக்கியத்தோடு இருக்கவேண்டும் என்ற எங்களுடைய திடமான சிந்தனை. (அப்படியும் ஆஸ்பத்திரியில் சேர்க்கும்படியாக இரண்டு பேருக்கு ஹார்ட் அட்டாக் வந்து விட்டது.)

இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட பலருக்கு ஜாமீன் கொடுக்கப்பட்டது என்பது உங்களுக்குத் தெரியும். ஆனால் விதிகளைச் சுற்றி வளைத்துக் கொண்டு போய் சட்டத்தை ஏமாற்றுவதற்காக அவர்களை மிஸா சட்டத்தின் கீழ் .சிறையிலடைத்து விட்டார்கள். நாட்டின் எந்த சிறைச்சாலையிலும், எந்த மிஸா கைதியையும் சிறையில் போட்டு அடைப்பதில்லை. நாங்கள் இருந்த திஹார் சிறைக்கூடத்தில் கூட அப்படித்தான் எங்களையும் சிறையில் போட்டு பூட்டாமல்தான் வைத்திருந்தார்கள். ஆனால் 1976 செப்டம்பர் 23–ந் தேதி இரவிலிருந்து அரசாங்கத்தின் உத்தரவின் பேரில் சிறை அதிகாரிகள் எங்களை சிறையில் போட்டு பூட்ட ஆரம்பித்து விட்டார்கள்.

நாங்கள் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டு நாளுக்கு நாள் அதிக தீவிரமான குற்றச்சாட்டுகள் சாட்டப்பட்டு நீதிமன்றத்தில் ஆஜர்படுத்தப்பட்டு வருகிறோம். இத்தனை நாட்களாக நாங்கள் கேட்கும் சட்ட ஆலோசனைகளும் உதவிகளும் எங்களுக்கு மறுக்கப்பட்டு வருகிறது. என்னைப் பொறுத்த மட்டில் நான் கைதான நாளிலிருந்து (10-6-76) என்னை அனேகமாக யாருமே பார்க்க அனுமதிக்கப் படவில்லை. 1976 செப்டம்பர் 24–ந் தேதி அன்று எங்கள்மீது குற்றப் பத்திரிகை தாக்கல்செய்யப்பட்டு விட்டதாக படித்து பிறகு அதற்கு மறுநாள் எங்கள்மீது சாட்டப்பட்டுள்ள குற்றங்களையும் இன்று எங்களை உங்கள் முன்னால் ஆஜர் படுத்தப் போவதாகவும் மறுநாள் செய்தித்தாள்களில் படித்த போது, உடனே எங்களில் சிலர் ஜெயில் சூப்பரிண்டெண்டை அணுகி எங்கள் செலவில் எங்கள் வக்கீலோடு டெலிபோன் மூலமாகவோ அல்லது தந்தி மூலமாகவோ தொடர்பு கொண்டு ஆலோசனை செய்ய வேண்டும் என்று அனுமதி

கேட்டோம். நாங்கள் கொடுத்த தந்திகளோ, செய்திகளோ எங்கள் வக்கீல்களுக்குப் போய்ச் சேரவில்லை.

இதிலும் பிராஸிக்யூஷன் மௌன சாட்சியாக, உங்கள் உதவியோடு, எங்களுக்கு எந்தவித சட்ட உதவியும் அளிக்காமல் தண்டனை கொடுக்க விரும்புகிறது என்பது நன்றாகப் புரிகிறது.

இந்த தொந்தரவுகள் போதாது என்று இங்கே நீதிமன்றத்தில் நாங்கள் ரொம்பவும் அநாகரிகமான முறையில் நடத்தப்படுகிறோம். காலை எட்டு மணிக்கு காலை உணவு கொடுத்து 9 மணிக்கு எங்களை இங்கே கொண்டு வருகிறார்கள். மாலை 6 மணிக்கு திரும்பச் சிறைச்சாலைக்கு அழைத்துப் போகிறார்கள். பகலில் இந்த 10 மணி நேர இடைவேளையில் டீ, பிஸ்கட் எதுவும் சாப்பிட எங்களுக்கு அனுமதி கொடுப்பதில்லை. எங்களுக்கு காலாகாலத்தில் சரியாக உணவு கிடைக்கச் செய்வது எங்களை சிறையில் அடைத்தவர்களுடைய பொறுப்பு. சிறைச்சாலை விதிகளின்படியும், மிஸா கைதிகள் நடத்தப்பட வேண்டிய விதிகளின்படியும், எங்களுக்கு கொடுக்கப்படும் உணவு போதாது என்றால், எங்கள் உறவினர்களிடமிருந்தோ, நண்பர்களிடமிருந்தோ அல்லது சொந்த செலவில் அதிக்கப்படியாக உணவு வரவழைத்துக் கொள்ள எங்களுக்கு உரிமை இருக்கிறது. இதுவும் மறுக்கப்படுகிறது. சென்ற தடவை எங்களை, உங்களது சகோதர மாஜிஸ்ட்ரேட் முன்பு ஆஜர்படுத்தியபோது எங்கள் கோரிக்கையும் ஒப்புக் கொள்ளப்படவில்லை.

போலீஸ் அதிகாரிகளும் விசாரணை செய்ய வரும் மற்ற அதிகாரிகளும் எங்களை மனிதாபிமானமில்லாமல் கேவலமாக மூர்க்கத்தனமாக நடத்தும் முறைகளையும் எங்கள் உடலுக்கும், உள்ளத்துக்கும் இழைக்கும் சித்ரவதைகளையும் பட்டியல் போட்டு காட்டமுடியும். ஆனால் நாங்கள் அப்படிச் செய்யப் போவதில்லை. காரணம் அதனால் பலன் ஏதும் ஏற்படப் போவதில்லை என்பது எங்களுக்குத் தெரியும். தவிரவும், ஒரு

போலீஸ் அரசாங்கத்திடமிருந்து நாங்கள் வேறு என்ன எதிர் பார்க்க முடியும்?

பொதுவாக நாட்டில் குடிமக்களின் உயிரும், சுதந்திரமும், ஜீவாதார உரிமைகளும் மிகவும் கேவலமான முறையில் பறிக் கப்படுவதைக் கூறும்போதும், நாட்டில் நிலவும் நிலைமைகளைச் கூறும்போதும்—இவைகளை வைத்துப் பார்த்தால் இந்த நீதி மன்றத்தில் நியாயமோ நீதியோ கிடைக்கும் என்ற நம்பிக் கையே போய்விட்டது. இருந்தாலும் எங்களுக்கு வேண்டு மென்றே இழைக்கப்படும் இடைஞ்சல்களை உங்களிடம் குறிப் பிட்டுக்காட்டுகிறோம். நாட்டில் தலைநகரின் பிரதான மெட்ரோ பாலிட்டன் மாஜிஸ்ட்ரேட் என்ற முறையில் நாங்கள் எங்களு டைய, எங்கள் ஜீவாதார உரிமைகள் பறிக்கப்படுவதை அனுமதிக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறோம். தவறுகளை திருத்தி உரிமைகளை திரும்ப வழங்கும் அதிகாரம் சட்டப்படி இன்னமும்கூட உங்களுக்கு இருக்கிறது. பார்க்கப் போனால் அப்படி செய்வது அரசியல் நிர்ணய சட்டப்படி உங்களுடைய கடமையாகும். எங்கள் குறைகளை நீக்கி எங்களுக்குக் கீழ்க் கண்ட உரிமைகளை திரும்பித் தரும்படி கோருவது எங்கள் கடமையும் ஆகும்.

1. கையில் விலங்கு மாட்டப்படாமலிருக்கும் எங்கள் உரிமை.

2 ஜெயிலில் இருக்கும்போது சரியான முறையில் நாகரிகமாக நடத்தப்பட எங்களுக்கு இருக்கும் உரிமை.

3. வக்கீல்களோடு தடங்கலின்றி தொடர்பு கொள்ள, சிறையில் இருக்கும் போதும் கோர்ட்டுக்கு கொண்டு வரும்போதும் உறவினர்களோடும், நண்பர் களோடும் பேசிப்பழக எங்களுக்கு இருக்கும் உரிமை.

4. காலாகாலத்திலும், நல்ல முறையில் சரியாக உணவு அளிக்கப்பட, உறவினர்களிடமிருந்தும், நண்பர் களிடமிருந்தும் உணவு தருவித்துக் கொள்ள எங்களுக்கு இருக்கும் உரிமை.

இந்தியாவிலும் அயல்நாடுகளிலும் உள்ள எல்லோருடைய பார்வையும் கவனமும் உங்களை நோக்கியே உள்ளன. இன்று நாங்கள் கோரும் எங்களுடைய நியாயமான கோரிக்கைகள் மீது நீங்கள் எடுக்கும் நடவடிக்கைகளைப் பொறுத்து உங்களை சரித்திரம் எடைபோடும். எங்களை அவமானப்படுத்தும் முயற்சிகளில் நீங்களும் ஒரு 'ஆமாம்'போடும் ஆயுதமாகி, அதன்மூலம் எங்களது சாதாரணமான, சட்ட பூர்வமான உரிமைகள் மறுக்கப்பட்டு விட்டால், 'விசாரணை' என்று பெயரளவுக்கு மட்டுமேநடத்தப்படும் இந்த தமாஷாவில் கலந்துகொள்ள வேண்டுமா என்பதைப்பற்றி நாங்கள் சிந்திக்க வேண்டிவரும்.''

'The Chains that we bear are symbols of the entire nation which has been chained and fettered' இந்த வர்ணனையை அயல்நாட்டு பத்திரிகைகளில் அப்படியே நன்முக வெளியிட்டிருந்தார்கள். கோர்ட்டில் முதல் நாள் நடந்தவைகளைப்பற்றி எழுதப்பட்ட எல்லா செய்திகளிலும் இந்த வாசகத்துக்கு நல்ல முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருந்தது. இந்தியாவில் இந்த அறிக்கை இருட்டடிப்பு செய்யப்பட்டுவிட்டது. இது எதிர்பார்த்ததுதான். இருந்தாலும் தணிக்கை முறைகளை தீவிரமாக எதிர்த்துப் போராடிய 'ஸ்டேட்ஸ்மன்' 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகைகள் 'சொல்கிறுர்கள்' என்ற பகுதியில் 'நியூஸ்வீக்' பத்திரிகையிலிருந்து எடுத்துப் போட்டதாகச் சொல்லி இதை எடுத்துப் போட்டுவிட்டார்கள். டிசம்பர் இறுதியிலும், இதை ஆண்டின் 'மிகச் சிறந்த வாசகங்கள்' என்ற தலைப்பில் வெளியிட்டிருந்தார்கள்.

# 13. சட்டப் போர்

அக்டோபர், 4–ந் தேதி எங்களை முதன் முதலாக டெல்லி பிரதம மெட்ரோபாலிடன் மாஜிட்ரேட் முன்பாக ஆஜர் படுத்தியபோது எங்களிடம் ஒரு கட்டு காகிதம் கொடுக்கப் பட்டது. இதில் குற்றப் பத்திரிகை, சாட்சியங்கள், வழக்க மான இதர தஸ்தாவேஜுகள் எல்லாமே இருந்தன எல்லாம் சேர்ந்து சுமார் மூவாயிரம் பக்கங்கள். இது எங்களை மூழ்க டித்துவிட்டது. அசந்துபோய் விட்டோம் என்றுகூடச் சொல்ல லாம். நம்பிக்கை தளர்ந்து போயிருந்த எங்களில் சிலருக்கு இப்போது அரசாங்கத்தின் காரணம் புரிந்துவிட்டது. இன்னும் பல ஆண்டுகளுக்கு தப்பிக்கப் போவதில்லை என்பதும் புரிந்து விட்டது.

1942–ல் அதாவது சுமார் 35 ஆண்டுகளுக்கு முன்பாக இதைவிட தீவிரமான சதி வழக்கில் நான் குற்றவாளியாக்கப் பட்டிருந்தேன். அப்பொழுது சொல்லப்பட்ட குற்றச்சாட்டு 'மன்னனை எதிர்த்துப் போராடியது' என்பதே. மரண தண்டனை கிடைக்கக்கூடிய ஒரு குற்றம் அது. அதில் இருபது இளைஞர்கள் சம்பந்தப்பட்டிருந்தார்கள். உயர்ந்த லட்சியங் களோடு இதில் கலந்துகொண்ட நாங்கள் எப்படியும் பிரிட்டி ஷாரை நாட்டைவிட்டு விரட்டிவிட துடியாக இருந்தோம். நாங்கள் தென்கிழக்கு ஆசியப்பகுதியிலிருந்து நீர்மூழ்கிக் கப்பல் மூலமாகவும், பர்மா வழியாக கால்நடையாகவும் இந்தியா வந்து சேர்ந்தோம். நாங்கள் செய்த பயணமே ஆபத்தானது. இருந்தும் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தபோது எங்களுடைய உற்சாகம் பிரமாதமாக இருந்தது. நாங்கள் வந்ததின் நோக்கம் அயல்நாடுகளில் இருந்த சுபாஷ்சந்திர

போஸின் இந்திய தேசிய ராணுவத்தினருக்கும் இந்தியாவில் இருந்த தலை மறைவு இயக்கப் போராட்ட வீரர்களுக்கும் இடையே ஒரு தொடர்பை ஏற்படுத்துவது. ஆனால் எங்களைக் கைது செய்து ஒரு ஸ்பெஷல் நீதிமன்றம் ஏற்படுத்தி, சட்டப் புத்தகத்திலேயே உள்ள மோசமான குற்றங்களுக்கான ஒரு பிரிவின் கீழும், நாங்கள் செய்த குற்றங்களைப் போன்றவை களுக்காகவே போடப்பட்ட சில தனி சட்டங்களுக்குக் கீழும், 'எங்களை கைது செய்து குற்றப்பத்திரிகை தாக்கல் செய்த போது எங்களில் மிகவும் தைரியமானவர்கள்' என்று கருதப் பட்ட சிலர் நிலைகுலைந்து போய்விட்டனர்.

தொலைவிலிருந்து பார்க்கும்போது சிறைச்சாலை அப்படி ஒன்றும் மோசமாகத் தோன்றுவதில்லை. பல நாட்கள் கழித்து நடக்கவிருக்கும் ஒன்றைப்பற்றி யோசித்துப் பார்ப்பதற்கும், அனுபவித்திராத ஒன்றைப்பற்றி நினைத்துப் பார்ப்பதற்கும், அப்படி ஒன்றும் பிரமாதமான தைரியம் வேண்டியதில்லை. ஆனால் சிறைச்சாலைக்குள் சென்ற சில மணி நேரங்களுக் குள்ளாகவே எல்லா தைரியமும் மறைந்துபோய் விடுகிறது. சிறைச்சாலை அனுபவத்தை படித்தோ, கேட்டோ தெரிந்து கொண்டுவிட முடியாது. உடல்படும் அவஸ்தை மட்டுமல்ல அது. மனதையும் உள்ளத்தையும் பாதிக்கும் ஒரு அனுபவம். உடலும், மனதும், உணர்வும் படும் அவஸ்தைகளோடு சில ஆண்டுகள் சிறைச்சாலைக்குள்ளே கழிக்கப் போகிறோம் என்ற நிச்சயமில்லாத அல்லது பாதி நிச்சயமாக உள்ள ஒரு எண்ண மும் சேர்ந்து வரும்போது அதை தெரிந்து, சமாளிக்க, அசாதா ரணமான ஒரு தைரியமும், சொல்லொண்ணாத மன உறுதியும் தேவைப்படுகிறது. இது உங்களை பாதிப்பதோடு மட்டுமல்லா மல் நீங்கள் நேசிப்பவர்களுடைய உடலுக்கு இடைஞ்சலையும் மனதுக்கு வலியையும் தந்துவிடுகிறது.

எங்களில் சிலருக்குச் சிறைச்சாலை புதியதில்லை. ஜார்ஜ் பலதடவை சிறைச்சாலைக்குப் போனவர். பிரபுதாஸ் பட்வாரியும் போயிருக்கிறார். நான் 1942–லிருந்து மூன்று ஆண்டுகளும், பிறகு மறுபடியும் ஒருதடவை மைசூரில்

கொஞ்ச நாளும் சிறையில் கழித்தேன். பாஜ்பாய், கம்லேஷ் ஜஸ்வந்த் இவர்களுக்கும் சிறை அனுபவம் புதியதல்ல. ஆனால் எங்களில் சிலர் சிறைச்சாலையே பார்த்திராதவர்கள். ஆகவே, அவர்கள் பயப்பட்டதில் நியாயமிருந்தது. முடிவே இல்லாத ஒரு சிறை தண்டனை என்பதை நினைத்துப் பார்க்கவே அவர் களுக்கு நடுக்கமாக இருந்திருக்கும். ஆனால் மன உறுதியை இழந்து, எப்போதும் எப்படியாவது தப்பிவிட வேண்டும் என்று நினைத்தவர்கள் இரண்டு பேர் இருக்கலாம்—அதற்கு மேல் இல்லை.

ஒப்பிட்டுப் பார்ப்பதே எரிச்சலூட்டக்கூடியது. இருந்தும் எங்களில் சிலர் மன உறுதியிலும் தைரியத்திலும் தனித்து நின்றனர். திஹார் சிறைச்சாலையில் விரேன்ஷா என்னோடு சேர்ந்து கொள்ளும் வரையில், கஷ்டங்களையும் சாதாரண வசதிகள்கூட இல்லாமையையும் அவரால் எப்படி தாங்கிக் கொள்ள முடியும் என்று நான் நினைப்பதுண்டு. ஒரு பெரிய கம்பெனியின் சேர்மனாக இருந்த அவருக்கு கூப்பிட்ட குரலுக்குப் பல ஆட்கள் இருந்தனர். எல்லா வசதிகளையும் அனுபவித்தவர். சிறைச்சாலையின் வசதியின்மைகளையும், சிறைச்சாலையின் கட்டுப்பாடுகளையும், மிகவும் மோசமான இதய நோயோடு இருந்த அவர் பொறுமையோடு சகித்து கொள்ளும்படி ஆகிவிட்டது. ஜி. ஜி. பரீக் பல ஆண்டு களாகவே ஒரு தீவிர சோஷலிஸ்ட். ஆகவே அவரால் நிலைமை களைச்சகித்துக்கொள்ள முடிந்தது. ஆனால் சிறையில் அவரைப் பிடித்த இதய வியாதி அவருக்கு மிகுந்த வலியையும் தொந் தரவையும் கொடுத்து வந்தது. இந்த வலியோடுகூட, அவருடைய மனைவி மங்களா சிறையில் வாடிய கொடுமையை யும் சேர்த்துப் பொறுத்துக் கொண்டார்—திட மனதோடு.

பரோடாவிலிருந்த இந்தியன் எக்ஸ்பிரஸ் நிருபர் கீர்த்தி பட்டிற்கு அரசியல் ஈடுபாடுகள் கிடையாது. இருந்தும் எதிர்ப்பாளர்கள் பக்கம் தைரியமாகவும் தடையில்லாமலும் சேர்ந்து கொண்டார். அவருக்கு வேலை போய்விட்டது. அவருடைய இளம் மனைவியும், இரு சின்னஞ்சிறு குழந்தை

களும் சொல்லொணுத துயரங்களுக்கு ஆளானுர்கள். இந்த இன்னல்களையும், குடும்பப் துயரையும், மோசமான எதிர் காலத்தையும் திடச்சித்தத்தோடு தாங்கிக் கொண்டார். அவர் ஒரு எளிமையான சிறந்த மனிதர். பரோடாவைச் சேர்ந்த யஷ்வந்த் சவான், பாட்னுவைச் சேர்ந்த மகேந்திர பாஜ்பாய், எஸ். ஆர். ராவ், பம்பாய் தொழிற்சங்கத்தின் அவர்களுடைய சகாக்களான காசியைச் சேர்ந்த விஜய் நாராயண்சிங், கமலேஷ் இவர்களைப்பற்றி நான் இங்கு குறிப்பிடவில்லை. அவர்கள் பழுத்த அனுபவம் பெற்றவர்கள். சிறைச்சாலைக்கு அவர்கள் புதியவர்களல்ல.

ஜார்ஜோடு சம்பந்தப்பட நினைத்த சிலருக்கு அப்போது வாழ்நாள் பூராவும் சிறையில் கழிக்க வேண்டிவரும் என்பதோ, கைதாக வேண்டி வரும் என்பதோ, நடக்க இயலாத, வெகு தொலைவில் இருக்கும் ஒன்ருகத் தோன்றி யிருக்கக்கூடும். இது குழந்தைத்தனமாக, முட்டாள்தனமாக, அனுபவமில்லாமையாகக்கூட இருக்கலாம். ஆனுல் ரொம்ப அனுபவசாலிகள்கூட, தங்கள் செயல்களுக்குக் கிடைக்கப் போகும் பலன்பற்றி எப்போதும் நினைத்துப் பார்ப்பது கிடையாது. இம்மாதிரி ஒரு சதி வழக்கில் இப்படிப்பட்ட ஓரிருவர்கூட திட்டமிடும் போதும் எல்லோருக்குமே இடைஞ் சல்களை விளைவிக்கலாம். அரசாங்கம் அதை ஒரு கிரிமினல் வழக்காக ஆக்கிவிட நினைத்தது. அதேபோலவே எங்களில் மிகவும் மனம் தளர்ந்து போனவர்களும், ஆசைப்பட்டார்கள். எங்கள் தரப்பு டிஃபன்ஸ் வாதத்தைச் சட்ட ரீதியாக மட்டுமே ஆக்கிக் கொள்ள அவர்கள் விரும்பினுர்கள்.

ஆனுல் ஜார்ஜும் மற்றவர்களும் இதை ஒரு அரசியல் வழக்காக மட்டுமே பார்த்தார்கள். அதுதான் உண்மையும் கூட. பீனல்கோர்ட் சட்டத்தின் கீழ் எங்கள் மீது வழக்கு தொடரப்பட்டிருக்கலாம். ஆனுல் எண்ணங்கள், குறிக்கோள் கள், செயல்கள் எல்லாமே அரசியல்தனமானவை என்று கூறினுல் அது மிகை அல்ல. ஆகவே அதோடு அரசியல் ரீதியாகவே போராட வேண்டும். சட்ட நடவடிக்கைகள்

எல்லாம் வெறும் விளம்பரத்துக்காக மட்டுமே. கொடுக்கப் படும் அறிக்கைகளாக இருந்தாலும், சொல்லப்படும் வாதங் களாக இருந்தாலும் எல்லாமே அரசியல் அடிப்படையில் இருக்க வேண்டும். அவற்றை மனித சுதந்திரம், அடிப்படை உரிமைகள் என்ற மட்டத்துக்கு உயர்த்திக் காட்ட வேண்டும். ஆனல் அம்மாதிரி அறிக்கைகளும், வாதங்களும் 'முதலில் இந்திரா காந்தியையும், அவரது ஆட்சியையும், தீமை, கொடுமை விளைவிப்பவை என்று கருதியதால் கவிழ்க்க நினைத் தோம் என்று ஒப்புக் கொள்ளப்பட்டபின் கூறப்பட வேண்டும். அநியாயத்தையும், சர்வாதிகாரபோக்கையும் எதிர்த்துப் போராடுவது ஒரு குடிமகனின் கடமை, என்பதை எடுத்துக்கூறி வாதாட வேண்டும். அரசியல் நிர்ணய சட்டத்தை ஏமாற்றி, மக்களின் அடிப்படை உரிமைகளை பறிக்க முற்பட்டு, அதிகார பலத்தை கைப்பற்றிய ஒரு அரசை கவிழ்ப்பது குடிமகனின் கடமை. அரசியலோடு தங்களை இணைத்துப் பார்ப்பவர்கள் வேறு எந்த நிலைக்கும் சாத்திய மில்லை. விஷமம் செய்து மாட்டிக் கொண்ட சிறுவர்களைப் போல நாம் நடந்து கொள்ளக்கூடாது. மன்னிப்புக் கேட்பதோ, சட்ட நுணுக்கத்தின் அடிப்படையில் தப்பித்துக் கொள்ள வழக்கறிஞர்களின் உதவியை நாடுவதோ நமக்கு கூடாதவை. இருந்தாலும் வெறும் சட்ட நுணுக்கங்களின் அடிப்படையிலேயே போராட நினைத்தவர்களுடைய நலனை யும்நாம் கவனித்தாக வேண்டும். நமது தரப்பு வாதத்தில் பிளவு எதுவும் இருக்கக்கூடாது. அது இடைஞ்சலானது மட்டுமல்ல, ஆபத்தானதும்கூட.

'இந்திரா காந்தியைக் கவிழ்க்க நாங்கள் முயற்சித்தோம்' என்ற குற்றச்சாட்டை ஒப்புக் கொண்டு விடுவது என்று நானும் ஜார்ஜும் தீர்மானித்தோம். ஆனல் மற்ற பல குறிப் பிட்ட குற்றச்சாட்டுக்களை ஒப்புக் கொள்ளக்கூடாது என்பதில் ஜாக்கிரதையாக இருந்தோம். உண்மையில் நாங்கள் செய்யாத பல குற்றங்களைச் செய்ததாக கூறப்பட் டிருந்தன. உண்மையோடு கொஞ்சம் போராடத்தான்

வேண்டியிருந்தது. ஆனால் அந்தச் சூழ்நிலையில் அது நியாய மாகவும், செய்யக்கூடியதாகவும் தோன்றியது.

எங்களுடைய வேண்டுகோள் எதுவாக இருந்தாலும் சட்ட வேலைகள் நிறைபச் செய்ய வேண்டியிருந்தது. ஒவ்வொரு கட்டத்திலும் விளம்பரத்துக்காகப் போராட வேண்டியிருந்தாலும், பழக்கப்பட்ட அனுபவமுள்ள வழக்கறி ஞர்கள் தேவைப்பட்டனர். போலீஸின் செயல்முறைகளை யும்,பொய்சாட்சிகளைத்தயாரி செய்ததையும், வெளிப்படுத்திக் காட்டவேண்டும். கண்ணும் கருத்துமாக இருந்து, சட்ட ரீதியாக, முடிந்த போதெல்லாம் பிராஸிக்யூஷன் தடுக்கி விழச்செய்ய வேண்டும். சட்ட அடிப்படையிலும், அரசியல் ரீதியாகவும் இந்தக் வழக்கை கொண்டு செல்லவேண்டும். அதே சமயத்தில், சமயம் வரும்போதெல்லாம் விளம்பரம் தேடிக் கொள்ளவேண்டும் கயிற்றில் நடக்கும் வித்தையைச் செய்து காட்ட வேண்டு ். எங்களுக்குக் கூடுமானவரை இதில் வெற்றி கிடைத்தது.

சோஷலிஸ்டான கே. கே லுத்ராவும், ஓ. பி. மாளவியா வும், ஜார்ஜுக்குத் தனிப்பட்ட முறையில் உண்மையானவர் கள். ஜார்ஜை கோர்ட்டுக்குக் கொண்டு வந்த உடனேயே அவர்கள் செயல்பட தொடங்கிவிட்டனர். இவர்கள் ஜார்ஜின் வழக்கறிஞர்களாக நியமிக்கப்பட்டனர். கே. எல். சர்மா என்ற பழுத்த அனுபமுள்ளவரும், டெல்லி வழக்கறிஞர் சங்கத்தின் தலைவருமான அவரும்,எங்கள் வக்கீல் குழுவில் சேர்ந்து உதவ முன் வந்தது பெரிய தியாகமாகும். அவரது திறமை, அவர் வழக்கில் தலையிட்ட முதல் சில தினங் களில் பளிச்சிட்டது. காசியைச் சேர்ந்த சாகர் சிங்கும் இந்தக் குழுவில் சேர்ந்து கொண்டார். இந்தக் குழுவுக்கு தலைமை ஏற்று எதிர்தரப்பை நடத்திச் சென்றவர் பம்பாய் உயர்நீதி மன்றத்தின் ஓய்வு பெற்ற பிரதம நீதிபதி தார்குண்டே ஆவார். இந்தியாவின் தலைசிறந்த வழக்கறிஞர் களில் ஒருவரான இவர், பெரிய ஆபத்துக்கும் தியாகத்துக்கு

மிடையே அரசியல் கைதிகளின் தரப்பில் ஆஜராக என்றும் தயாராக இருந்தார். மத்திய பிரதேஷின் முன்னாள் அட்வகேட் ஜெனரல் தர்மாதிகாரி செஷன்ஸ் கோர்ட்டில் முக்கியவக்கீலாக இருந்து, வழக்கு நடக்கும் சமயத்தில் ஆலோசனைக்கு உதவியாக இருந்தார். இவர்களுக்கு உதவியாக இருக்க ஆர்வம்மிக்க ஒரு இளம் வக்கீல்கள் கூட்டமே முன் வந்தது. இவர்கள் பணம் எதுவும் இல்லாமல் ஆசையோடு உதவி செய்ய முன் வந்தனர். இம்மாதிரிப் பணமில்லாமல் உதவி செய்வதற்கான வக்கீல் குழுவில் சேர முன்வந்த வக்கீல்களுக்குப்பஞ்சமே இல்லை. 1942-ல் மன்னரைஎதிர்த்துப் போராடிய வழக்கில், எங்களுக்கு எதிராக, பிராஸிகியூட்டராக, பணிபுரிந்த சென்னை முன்னாள் அட்வகேட் ஜெனரல் கோவிந்த சுவாமிநாதன், இப்போது இந்த வழக்கில் எங்களுக்கு உதவ முன் வந்ததை நான் மறக்கவே முடியாது. முதலிலேயே என்னை கோர்ட்டில் சந்தித்த அவர் எனக்காக ஆஜராக முன் வந்தார். அதற்கு அவர் எனக்குப் போட்ட ஒரே நிபந்தனை, பீஸ் என்ற வார்த்தையை நான் ஒரு தடவை கூட சொல்லவே கூடாது.

ஒரு டிபென்ஸ் கமிட்டி, ஆச்சாரிய கிருபளானி தலைமையில் தார்குண்டே பொறுப்பில் அமைக்கப்பட்டது. பணத்திற்காக ஜெயப்பிரகாஷ் நாராயண் ஒரு கோரிக்கை விடுத்தார், இந்த கமிட்டி எங்களுக்குக் கோர்ட்டில் உதவுவதையோ, பணம்திரட்டுவதையோ விடவிளம்பரக் காரியங்களுக்காககவே ஏற்படுத்தப்பட்டது. போதுமான அளவுக்கு எங்களுக்கு சட்ட உதவி கிடைத்தது. இதற்கான செலவுகளை ஏற்க நண்பர்களும், ஸ்தாபனங்களும் தயாராக இருந்தார்கள். பணம் திரட்ட கோரிக்கைகள் விடுப்பதன் மூலமும், செய்திக் கடிதங்களை பிரசுரிப்பதன் மூலமும், எங்கள் நோக்கங்களுக்கு விளம்பரம் தேட இந்தக் கமிட்டி முனைந்தது. இதே போல லண்டனிலும் ஒரு கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. நமது மனம் தளராத நண்பர்கள் எம். எஸ். ஹோடாவும், சுரேந்திர சாக்ஸோனாவும் இதற்கு முதுகெலும்புகள். அயல்நாடுகளில்

எங்கள் வழக்குக்கு விளம்பரம் கிடைப்பதையும், ஐரோப் பாவில் அரசாங்கங்கள், தொழிலாளர் யூனியன்கள் இவர் களின் உதவியோடு வழக்கு நியாயமாகவும், பொதுமக்கள் பார்வையிலும் நடக்கும்படியாகவும் பார்த்துக் கொண்டார் கள். இந்த வழக்கை எங்களுடைய பிரச்சார நோக்கங்களுக் காக எங்கள் இஷ்டம் போல திருப்பப்படுவதைக் கண்ட பிராஸிக்யூஷன், வழக்கை பிறர் கண்களில் படாமல் ரகசிய மாக நடத்தும் நோக்கத்துடன் சிறைச்சாலேக்கே மாற்றி விடலாமா என்று யோசிக்க ஆரம்பித்தார்கள். ஆனுல் இப்படி செய்தால் அரசாங்கத்துக்கு எதிராக விளம்பரம் அயல் நாட்டுப் பத்திரிக்கைகளில் கொடுக்கப்பட்டு விடும் என்ற பயத்தில் இந்த யோசனையைக் கைவிட்டு விட்டார்கள்.

ஆச்சரிய கிருபளானி தலேவராக இருந்தது இந்தக் கமிட் டிக்கு ஒரு மதிப்பைத் தந்தது. தனது கடல் போன்ற சட்ட அறிவை தார்குண்டே இந்த கமிட்டிக்கு வழங்கினுர். சுதந்திரத்தோடு கொண்டிருந்த ஈடுபாடு, இந்திராகாந்தியை எதிர்த்ததால் சிறையில் தள்ளப்பட்டவர்கள் மீதும், காவலில் வைக்கப்பட்டிருந்தவர்கள் மீதும் இருந்த கவலே—இவை களால் ஜெயப்பிரகாஷ்நாராயண் தன்னுடைய கோரிக்கை மூலமாக மக்களிடமிருந்து பெருவாரியான ஆதரவை திரட்டி இருந்தார். கமிட்டியின் வேலேகளே சுரேந்திர மோகன், விஞேத் பிரசாத் சிங், ரவி நாயர் இவர்கள் ஏற்று நடத்தித் தந்தனர். சோஷலிஸ்ட் கட்சியின் காரியதரிசிகளாக இருந்த சுரேந்திர மோகன், விஞேத் பிரசாத் சிங் இவர்களால் தங்க ளுடைய முழு நேரத்தையும் சக்தியையும் கமிட்டிவேலே களுக்குத் தர முடியவில்லே. ஆகவே முழுப்பளுவையும் ரவியே ஏற்றுக் கொள்ளும்படி ஆகிவிட்டது.

ரவி எடுத்துக்கொண்ட காரியத்தில் ஈடுபாடு கொண் டவர். கொள்கைகள் விட்டுக் கொடுக்காதவர். தைரியத் தோடு செயல்படும் இளேஞர். நவம்பர் 75 முதல் திஹார் சிறையில் வைக்கப்பட்டு 76—ஆம் ஆண்டு மத்தியில் விடுதலே

யானவர். அதிலிருந்து இவர் எங்களுக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்ய ஆரம்பித்தார். பைல் வேலைகளையும் கடிதப் போக்குவரத்தையும் பார்த்துக் கொண்டார். வக்கீல் வேலைகளை ஒருங்கிணைத்துத் தந்தார். எங்கள் 22 பேருக்குத் தேவையானவற்றை தினமும் கோர்ட்டுக்கு கொண்டு வந்து தருவார். எங்களுக்கு வரும் கடிதங்கள் மற்ற சில்லரை சாமான்கள் இவற்றை வாங்கி வருவார். கோர்ட்டு நடக்கும் போது எங்களுக்கு ஏற்படும் தேவைகளையும் பூர்த்தி செய்து தருவார். அயல்நாட்டு பத்திரிகையாளரோடு இவர் வைத்திருந்த நல்ல தொடர்பு எங்களுக்கு நல்ல பலன்களை பெற்றுத் தந்தது. ஜார்ஜ் கோர்ட் பேச்சுக்களையும் இன்னும் ருசிகரமான தகவல்களையும் அச்சிடுவது அல்லது சைக்ளோஸ்டைல் செய்து தருவது போன்ற வேலைகளை மிகவும் பயன்தரும் வகையில் செய்து வந்தார்.

இதே போல் கடினமாக உழைத்து எங்களுக்கு மிகவும் உதவியாக இருந்தவர் சோமுடட்—சோஷலிஸ்ட் கட்சியினர். இவரை 'சோம்' என்று அன்போடு அழைப்பார்கள். பல மாநாடுகளில், கூட்டங்களில் கலந்து கொண்டு அங்கு வரும் பிரதிநிதிகளின் சௌகரியத்தைக் கவனித்துக் கொள்வது அவரது முக்கியமான பணி. பத்தாண்டுகளுக்கு முன்பு வெல்லிங்டன் ஆஸ்பத்திரியில் டாக்டர் லோகியா மரணப் படுக்கையில் கிடந்தபோது அவர் உடல்நிலை பற்றி வந்த பல்லாயிரக்கணக்கான டெலிபோன் கால்களுக்கு இரவு பகலாக பொறுமையாக பதில் கூறி வந்தவர். தளருத ஊக்கமும், மனம் நோகாமல் பிறருக்கு உதவும் குணமும் கொண்ட சோம் எங்களுடைய பல தேவைகளை நன்கு கவனித்துக் கொண்டார். அதேபோல் வக்கீல்களுடைய தேவைகளையும் பூர்த்தி செய்தார். கற்பனை வளம் மிக்க இவர் போலீஸோடு நல்ல தொடர்பு வைத்திருந்தார். முடியாதவற்றையும் தடை செய்யப்பட்டிருந்ததையும் கூட செய்து முடித்து விடுவார். இந்தப் புத்தகத்தில் கையில் விலங்கோடு காணப்படும் எங்கள போட்டோவை அக்டோபர் 12 அன்று,

பலத்த பாதுகாப்பு இருந்தபோதும்கூட, எப்படியோ எடுத்து விட்டார்.

எங்களுக்குக் கிடைத்திருந்த வக்கீல்கள் சிறந்தவர்கள். வழக்கை பிரமாதமாக நடத்தினார்கள். இருந்தாலும் அரசியல் அடிப்படையில் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் பயன் படுத்தி அதற்கு ஒரு அரசியல் கோணம் கொடுக்கும்படி அவர்களை எதிர் பார்க்க முடியாது. தவிரவும், சட்ட திட்டங் களைத்தாண்டி போவார்கள் என்றும் அவர்களை எதிர்பார்க்கக் கூடாது. தவிரவும் எல்லா வழக்கறிஞர்களைப் போலவே அவர்களும் கொஞ்சம் பொதுவாகவே காரியங்களைச் செய் தார்கள். பல தடவை நாங்கள் ஹைகோர்டில் மனுப்போடச் சொல்லி கோரியிருந்தபோது, அவர்கள் அதற்குப் பல வாரங் கள் எடுத்துக் கொண்டனர். அப்ளிகேஷன் எழுத வேண்டு மானால் சட்டத்தை விட்டு கொஞ்சமும் பிறழாமல் கேஸ்களை படித்து முன்னோடிகளை கவனித்த பிறகுதான் எழுதுவார்கள். இந்த சமாசாரங்களில் அவர்களை அவசரப்படுத்த முடியாது. இந்தக் காரணங்களுக்காக என்னை பொறுத்தமட்டில் எனக்கு வக்கீல் தேவையில்லை, என் கட்சியை நானே வாதாடிக் கொள்வது என்றும் முடிவு செய்தேன்.

இந்த முடிவு எங்களுக்கு ரொம்பவும் சாதகமாக இருந் தது. பல ஆண்டுகளுக்கு முன்பு 1944-ல் சென்னையில் சிறையி லிருந்தபோது சென்னை ஹைகோர்ட் பிரதம நீதிபதிக்கு ஒரு கடிதம் எழுதினேன். அது உடனே கவனிக்கப்பட்டு எனக்கு ஒரு சிறு விஷயத்தில் பரிகாரம் கிடைத்தது. அதிலிருந்து நான் என்னை ஒரு அமெச்சூர் வக்கீலாக நினைத்து பெருமைப் பட்டிருக்கிறேன். எல்லா நீதிபதிகளும் என்னை மதிக்க வேண்டும் என்று நினைத்திருக்கிறேன். ஆனால் என்னுடைய திறமைகளை உண்மையாக சோதித்துப் பார்க்கவில்லை. வக்கீல் பாத்திரத்தைக் கொஞ்சம் பயத்தோடுதான் ஏற்றுக் கொண் டேன். போகப் போக என்னை மீறிய திறமை எனக்கு இருப் பதை உணர்ந்தேன், நான் எதிர் பார்ப்பதற்கு மேலாகவே பலன் கிடைத்தது. பிரதம மெட்ரோபாலிட்டன்

மாஜிஸ்ட்ரேட் திரு முகமது ஷமீம் பண்பும் அன்பும் கொண்ட ஒரு நல்ல மனிதர். என்னுடைய திறமைகளைப் பற்றிஅளவுக்கு அதிகமாகப்புகழுரைகள் வழங்கியிருக்கிறார். உயர்நீதிமன்றத் திலும் நானே ஆச்சரியப்படும் வகையில் பல ரிட்டுக்களை வாதாடி வென்றிருக்கிறேன். எங்களுக்காக வழக்காடிய பல சீனியர் வக்கீல்கள் தாராளமாக புகழ்ந்திருக்கிறார்கள். ஆனால் சிலர் நான் வாதாடும்போது நான் ஒரு பாயிண்டை எடுத்துக்கூறி விளக்கிக் கொண்டிருக்கும்போது சில சமயங் களில் இடை மறித்துப் பேசுவார்கள்.

நான் இடைமறித்துப் பேசுவதும், வாதாடுவதும் எல்லாம் வழக்கிற்கு விளம்பரத்தைத் தேடுவதற்கும் அரசாங்கத்தின் செயல்களையும், பிராஸிக்யூஷன் வாதங்களை களையும் உடைத்துக் காட்டுவதற்கும்தான். என்னுடைய சட்ட ஜாலங்களால் நான் சம்பாதித்த பெருமைகள் எல்லாமே நியாயமாகச், சொல்லப் போனால் யதேச்சையாக வந்தவைதான்.

'எங்களுக்கு கை விலங்கு பூட்டக்கூடாது; விசாரிக்கப் படும் எல்லா கைதிகளைப் போலவே சட்ட உதவி பெறவும், வழக்கறிஞர்களை தனியாக சலந்தாலோசிக்கவும் எங்களுக்கு சந்தர்ப்பம் கொடுக்கப்பட வேண்டும். கோர்ட்டில் நாங்கள் காபி, டீ, டிபன், போன்றவை சாப்பிடுவதற்கு அனுமதிக்கப் படவேண்டும்' என்ற இந்த மூன்று கோரிக்கைகளையும் மாஜிஸ்ட்ரேட் நிராகரித்து விடவும் நான் டெல்லி உயர்நீதி மன்றத்துக்கு அப்பீல் செய்தேன். என்னதான் உயர்நீதி மன்றங்கள் சக்தி இழந்துபோய் விட்டாலும், கைதிகளிட மிருந்து கோரிக்கைகளைப் பெற்றுக் கொள்ளவும், அவைகள் சட்ட நுணுக்கங்களுக்கும், நியதிகளுக்கும் உட்பட்டுதான் இருக்க வேண்டும் என்று வற்புறுத்தாமலிருக்கவும் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள் என்பதை அறிய ரொம்பவும் மகிழ்ச்சி யாக இருந்தது. என்னுடைய கோரிக்கை ஜஸ்டிஸ் வி. டி. மிஸ்ரா முன்னிலையில் விசாரணைக்கு சீக்கிரமாகவே எடுத்துக் கொள்ளப்பட்டது. என்னை விசாரித்து, நான் கேட்ட எல்லா

வற்றிற்கும் நிவாரணம் கொடுத்தார். இருந்தும் கை விலங்கு போடும் விஷயத்தில் நான் ஜாமீனில் இருக்கிறேன் என்ற காரணத்துக்காக எனக்குத் தரப்பட்ட சலுகையை ஏற்றுக் கொள்ள எனக்கு விருப்பமில்லை. ஆனால் அங்கிருந்த வழக்கறிஞர்கள் என்னை அதற்கு ஒப்புக்கொள்ள வற்புறுத்தினார்கள். காரணம் என் வழக்கில் கோர்ட் கொடுத்திருக்கும் உத்தரவு, பெயிலில் இல்லாத ஜார்ஜ், மற்றும் மற்றவர்கள் வழக்கை வலுப்படுத்த உதவும் என்று கருதினார்கள். இருந்தும் அவர்கள் கோரிக்கையை கவனிக்க ரொம்பவும் காலதாமதமாகியது. சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு எல்லாவற்றையும் செய்ய அவகாசம் பிடித்தது. ஆகவே 1977 மார்ச் 22-ல் நாங்கள் விடுதலை ஆகும்வரை ஜார்ஜூம் மற்றவர்களும் தொடர்ந்து விலங்கு, சங்கிலி மாட்டப்பட்டே நீதிமன்றத்துக்குக் கொண்டு வரப்பட்டோம். நான் எந்தவித தடங்கலுமின்றி ரகசிய முறையில் எங்கள் வக்கீல்களை கலந்தாலோசிக்க அனுமதிக்கப் பட வேண்டும் என்றும் ஜஸ்டிஸ் மிஸ்ரா உத்தரவிட்டார். கோர்ட்டில் இருக்கும்போது நான் காபி, டீ போன்றவை சாப்பிட அனுமதி அளித்த அவர், பொதுவாக கைதிகள் நலனிலும், அவர்கள் உடல் நலத்திலும், பட்டினி போடப்படு படுவதிலும் நீதிமன்றத்துக்கு உள்ள கவலையை தெரியப்படுத்தியிருந்தார். காலையிலிருந்து இரவு வரை நாங்கள் கோர்ட்டில் இருக்கும் நேரம் முழுவதும் ஒருகப் காபி கூட கொடுக்கக் கூடாது என்ற தடையை கேட்டு அவர் ஆத்திரமடைந்திருந்தார். இந்த உத்தரவால் இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட என்னுடைய சக குற்றவாளிகளும் பலன் அடைந்தனர்.

எங்களைப்பற்றி அவதூறாகக் குறிப்பிட்டு, நடந்து வரும் வழக்கில் காட்டப்பட்டுள்ள குற்றங்களைச் செய்தோம் என்று கூறியதற்காக உள்துறை அமைச்சர் ஓம் மேத்தா, சி.பி.ஐ டைரக்டர், 'பிளிட்ஸ்'பத்திரிகை இவர்கள் மீது நான் போட்ட கோர்ட் அவமதிப்பு மனுவில், நானே வாதாடும்படி ஆகி விட்டது. இரண்டு மணி நேரம் வாதாட கருணை கூர்ந்து அனுமதி அளித்த அவர் முதலில் என்னை பாராட்டிக் குறிப் பிட்டார்,

இன்ஞெரு மகிழ்ச்சிகரமான அனுபவம். ஜஸ்டிஸ் எப்.எஸ். கில் முன்பாக ஆஜரான போது எனக்கு ஏற்பட்டது. சில முறைக்கேடுகளுக்காக மாஜிஸ்ட்ரேட் முன்பு நடை பெற்றுக் கொண்டிருந்த முழு விசாரணையையும் செல்லாது என்று உத்தரவிட வேண்டும் என்று நான் செய்திருந்த அப்பீல் விசாரணைக்கு எடுத்துக் கொண்ட போது நான் வாதாடினேன். என்னுடைய வாதங்களில் அழுத்தமும், தெளிவும் காணப்பட்டதாக அவர் பெருந்தன்மையோடும், அன்போடும் என்னிடம் கூறினர். நான் கேட்ட நிவாரணத்தை அவர் தரவில்லை. ஆனல் அப்ருவர் பரத் பட்டேலை மறு விசாரணை செய்யக் கூப்பிடுவதை அனுமதித் தார். ஆனல் நாட்டில் உள்ள எல்லா நீதிமன்றங்களும், நீதிபதிகளும் பயமின்றி, அச்சுறுத்தலின்றி சுதந்திரமாகச் செயல்பட்டார்கள் என்று கூறிவிட முடியாது. நீதிபதிகளும், மனிதர்கள்தான். நாட்டில் நிலவும் சூழ்நிலையால் அவர்களும் பாதிக்கப்படுகிருர்கள். அவசரநிலை காலத்தில் சட்டம் எப்படிப் போனலும், அவர் கூறியதுதான் நடக்கும் என்பதை திட்டவட்டமாகக் காட்டிவிட்டனர். நீதிபதிகளில் சுதந்திர மின்மை காட்டியவர்களையும், நீதிக்குக் கட்டுப்படாத தன்னுடைய செயல்களை அங்கீகரிக்காத நீதிபதிகளில் சிலருடைய பதவிகளை நிரந்தரமாக்காமல் நிறுத்தி வைத்தார். இன்னும் சிலரை வேறு ஊர்களுக்கும் மாற்றினர். பொது வாகவே குற்றவாளிகளும், குறிப்பாக சதி வழக்கில் சம்பந்தப் பட்ட நாங்களும் நீதி மன்றங்களில் நிவாரணம் பெறுவது இயலாத காரியம். நிலைமையைப் புரிந்து கொண்ட நாங்கள் அதற்கேற்ப வாழவும் கற்றுக் கொண்டோம். இருந்தும் டெல்லி உயர்நீதி மன்ற நீதிபதிகளில் ஒருவரான பிரகாஷ் நாராயணேடு ஏற்பட்ட அனுபவம் அசாதாரணமானது. அவர் மனதுக்கு பட்டபடி அவர் தீர்ப்பு வழங்கினர் என்பதில் சந்தேகமில்லை. எந்த அரசியல் கைதியும் அவரிடமிருந்து எந்தவிதமான சலுகையோ, நிவாரணமோ பெற்றுவிட முடியாது என்பது உண்மை. அதற்காக அவர் அரசாங்கத்தை திருப்திப்படுத்தும் நோக்கத்தில் வரம்புமீறி நடந்து

கொண்டார் என்று அர்த்தமில்லை—அர்த்தமாகாது. ஆனல் பார்வைக்கு முரட்டுத்தனமாகவும், மற்றவர்கள் சௌகர்யங்களைக் கவனிக்காதவர் போலவும் தென்பட்டார்.

மற்ற வழக்குகளை அவர் கேட்டுக் கொண்டிருக்கும்போது, நீதிமன்றத்துக்கு என்னைக் கொண்டு வரும் போது காபி, டிபன் சாப்பிக்கூட அனுமதிக்கப்படவில்லை என்று நான், புகாரி செய்தேன். கோர்ட் ஓட்டல் நடத்தவில்லை என்றும், இதைப் பற்றி நான் அரசாங்க தரப்பு வக்கீலிடம் புகார் செய்ய வேண்டும் என்று அவர் கூறியது எனக்கு ஏமாற்றத்தைத் தந்தது மட்டுமல்ல—அந்த மாதிரி பதிலையும் நான் எதிர்பார்க்கவில்லை. இது அரசாங்க வக்கீலுக்குச் சம்பந்தமில்லை, கோர்ட்டுக்குத்தான் சம்பந்தப்பட்டது என்று நான் வற்புறுத்திக் கேட்டேன். வாயால் கேட்கும் கோரிக்கைகளை ஏற்றுக் கொள்வது கோர்ட்டின் மரபுகளில் ஒன்ருக இருந்தும் என்னை ஒரு அப்ளிகேஷன் எழுதித் தரும்படி கேட்டார்.

நான் எழுதிக் கொடுத்தேன். குறிப்பிட்ட நேரத்தில் சாப்பிட்டுக் கொள்ள அனுமதி கேட்ட இந்த சாதாரண கோரிக்கையை பல தரப்பட்ட சட்ட நுணுக்கங்களுக்கு உட்படுத்தி ஆராய்ந்து அனுப்பும்படி கூறினர். இந்த சிறு விஷயத்துக்காக, வழக்கு பல தடவை தள்ளிப் போடப்பட்டது. இந்த சிறு விஷயத்தில் முடிவு எடுக்கும் பொறுப்பு உதவி சொலிஸிட்டர் ஜெனரலுக்கு விடப்பட்டது. அவர் தன் சௌகர்யத்துக்கு ஏற்ப நேரம் எடுத்துக் கொண்டார். ஒரு மாதம் ஆன பிறகு ரொம்பவும் ஏமாற்றமடைந்த நான் அப்ளிகேஷனை திரும்பப் பெற்றுக் கொள்ள ஒரு மனுப்போட்டேன். இந்த மனுவில், ஒரு சிறு விஷயத்தை, அது என்னவோ ஒரு அடிப்படையான சிக்கலான சட்ட நுணுக்கம் போலக் கருதி, அதை எதிர்க்க அரசாங்கத்தை நீதிமன்றம் அனுமதித்தது குறித்து எனது ஏமாற்றத்தை தெரிவித்துக் கொண்டிருந்தேன். கோபம் கொண்ட அவர் நீதிமன்றத்தை அவமதித்த குற்றத்துக்காக என்னை பிராசிக்யூட் செய்ய நோட்டீஸ் அனுப்பும்படி ஒரேயடியாக உத்தரவிட்டு விட்டார்.

நண்பர்கள் பலரும், பல வக்கீல்களும் நீதிமன்றம் என் விஷயத்தில் மிதமிஞ்சி விதிவிலக்கு செய்திருக்கிறது என்று நினைத்தார்கள். இருந்தாலும் மன்னிப்பு கேட்டுக் கொண்டு விஷயத்தை அதோடு விட்டுவிடும்படி எனக்கு ஆலோசனை கொடுத்தார்கள். எனக்கு அதில் இஷ்டமில்லை. என்னை நீதிபதி முன்பு ஆஜர்படுத்தியபோது நான் நீதிபதியிடமிருந்து எதிர் பார்த்ததற்கு எனக்கு உரிமை உண்டு. இப்படி நான் எதிர் பார்த்தது நீதிபதியிடம் எனக்கு இருந்த மதிப்பினால்தான்' எதிர்ப்பார்ப்பது அதிகமாக ஆக ஏமாற்றமும் அதிகமாகிறது என்று வாதாடினேன். இதே போல ஏமாற்றத்துக்கும் எனக்கு உரிமை உண்டு. என்னுடைய ஏமாற்றத்தை எடுத்துக் கூறவும் எனக்கு உரிமை உண்டு. என்று பேசினேன். இதற்காக நான் இதை பேசிய விதம் மரியாதைக் குறை வாகவோ தவறு கண்டுபிடிக்கும் படியாகவோ இருந்ததில்லை. நிறைய கூட்டமிருந்த அந்த நீதிமன்றத்தில் நான் பேச ஆரம் பித்ததுமே, எனக்கு பிராஸிக்யூஷன் நோட்டிஸை தான் அனுப்பும்படி அவசரப்பட்டு உத்தரவு போட்டு விட்டதை நீதிபதி உணர ஆரம்பித்து விட்டார் என்பது எனக்குத் தெரிந்தது. டிபன், காபி சாப்பிட அனுமதி கோரிய இந்த சிறு உரிமைக்கான எனது அப்ளிகேஷனில் எப்படி நீதிபதி நியாயத் துக்கும், தர்மத்துக்கும் விரோதமாக நடந்து கொண்டார் என்பதை வெளிக்காட்ட நான் விவரமாகப் பேசினேன். கடைசியில் அவர் அந்த நோட்டீஸை ரத்து செய்துவிட்டார். நீதிபதி என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்று நான் கேட்கக் கூடாது என்று என் நண்பர்கள் என்னை சம்மதிக்க வைத்து விட்டார்கள். அப்படி ஒப்புக் கொண்டதற்கு இப் போது நான் வருத்தப்பட்டேன். எந்த ஒரு ஸ்தாபனமும், அது உயர்நீதி மன்றமாக இருந்தாலும் சரி, தான் ஒரு தவறு இழைத்து விட்டோம் என்று உணரும் போது மன்னிப்பு கேட்க வெட்கப் படக்கூடாது.

டெல்லி உயர்நீதிமன்றத்தின் இந்த உத்தரவுகள்—எனக்கு அனுப்புவதாக இருந்த நோட்டீஸை ரத்து செய்து விடும்படி

போடப்பட்ட உத்தரவு உட்பட—எல்லா உத்தரவுகளும் பத்திரிகைகளில் வெளியாயின. முதலில் எங்கள் குறைபாடு கள் பற்றிய செய்திகளை வெளியிட தடைபோட்ட பத்திரிகை தணிக்கையாளர்கள் இந்த நீதிமன்ற உத்தரவின் மூலம் நாங்கள் விளம்பரம் பெறுவதை தடை செய்யவில்லை. சர்வாதி காரி நம்பியிருந்த ஸ்தாபனங்களின் திறமையின்மை அந்த நிலையில் இருந்தது. அவர்களுக்கு மூர்க்கத்தனமாகத்தான் சக்தியை உபயோகிக்கத் தெரியுமே தவிர, கொள்கைகளை திறமையாக நடத்திக் காட்டத் தெரியாது. திறமையான நிர்வாகத்துக்கு திறமை மட்டும் போதாது. தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் ஈடுபாடும் வேண்டும். இந்திரா காந்தியின் ஆட்சியில் இல்லாத விஷயங்களில் இந்த முழுமை யான ஈடுபாடும், தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் தன்மை யும்தான்.

# 14. மனசாட்சி சம்பந்தப்பட்ட ஒரு விஷயம்

கிரிமினல் வழக்குச் சட்டங்களுக்குக் கொண்டு வரப்பட்ட திருத்தங்களால் கிரிமினல் வழக்குகளில் மாஜிட்ஸ்ரேட்டு களுக்கு, தனது மனப்போக்குப்படி நடக்க கொடுக்கப் பட்டிருந்த அதிகாரங்கள் எடுக்கப்பட்டுவிட்டன. குற்றப் பத்திரிகையோடு சமர்ப்பிக்கப்படும் தஸ்தாவேஜுகளைச் சரி பார்ப்பதும், அப்ருவர்களை ஆரம்ப விசாரணை செய்வதும் மட்டுமேதான் இப்பொழுது அவர்களுக்கு இருந்த வேலை. எங்களுடைய கிரிமினல் வழக்கு பிரதம மெட்ரோபாலிட்டன் மாஜிஸ்ரேட் கோர்ட்டில் மூன்று மாதம் நடக்கலாம் என்றும்' வழக்குக்கு சுமார் இரண்டு ஆண்டு பிடிக்கலாம் என்றும் எதிர் பார்க்கப்பட்டது. ஆகவே எல்லாம் சேர்ந்து வழக்கு முடிய 1979-ம் ஆண்டு வரைகூட ஆகிவிடலாம்,

விசாரணை ஆரம்பமானதும் அரசாங்கம் அவசரப்பட்டது தெரிந்துவிட்டது. இதற்குப் பதிலாக நாங்கள் வழக்கை எவ்வளவு தாமதப்படுத்த முடியுமோ அவ்வளவு தாமதப் படுத்த நினைத்தோம். அவற்றைத் தாமதப்படுத்த வேண்டிய அளவு ஆதாரம் இருந்தது. நாங்கள் நாட்டின் பல பாகங் களிலிருந்தும் வந்தவர்கள். எங்களுக்குப் பல மொழிகளும் தெரியும். வழக்கில் சம்பந்தப்பட்ட சில தஸ்தாவேஜுகள் எந்தெந்த இடங்களில் தயாரிக்கப்பட்டனவோ, அந்தந்த மொழிகளில் இருந்தன. கர்னடகாவிலிருந்து வந்த ரிப்போர்ட் டுகள் கன்னட மொழியில் இருந்தன. மகராஷ்ட்ராவிலிருந்து

வந்தவை மராத்தியிலும், குஜராத்திலிருந்து வந்தவை குஜராத்தி மொழியிலும், பீஹாரிலிருந்து வந்தவை இந்தியிலும், டெல்லியிலிருந்து வந்தவை உருது மொழியிலுமாக இருந்தன. எங்களுக்குப் புரியும் மொழிகளில் அவற்றை மொழி பெயர்த்துத் தரும்படிக் கேட்டோம். இப்படிச் செய்தால் ஒவ்வொரு தஸ்தாவேஜையும் குறைந்த பட்சம் ஐந்து மொழிகளிலாவது மொழி பெயர்க்க வேண்டும். இந்த வேலைக்கு பல வாரங்கள் பிடிக்கும். இந்தப் பத்திரங்களை நீதி மன்றம் இருக்கும் இடத்தில் உள்ள அங்கீகரிக்கப்பட்ட மொழியில் மட்டும் மொழி பெயர்த்தால் போதுமானது என்று பிராசிக்யூஷன் தரப்பில் வாதாடப்பட்டது—அதாவது உருது மொழியில். அது ஒரு பைத்தியக்கார யோசனையாகப்பட்டது. நாட்டில் எந்த இடத்திலும் நடமாட முடியும் என்ற மக்களின் அடிப்படை உரிமையையும், ஆகவே அந்தந்த இடங்களில் ஒருவர் மீது நீதிமன்றத்தில் வழக்குத் தொடர வாய்ப்பு இருக்கும் என்ற ஒருவாதத்தையும் கேலிக்கூத்தாக்கும் ஒரு நடவடிக்கையாக அது பட்டது. பிராஸிக்யூஷன் கூற்று சரி என்றால், தமிழ் மட்டுமே பேச, புரிந்து கொண்டிருந்த ஒருவனுக்கு அவன் மீது மேற்கு வங்காளத்தில் வழக்குத் தொடரப்பட்டால் தஸ்தாவேஜுகள் அவனுக்கு வங்காளத்தில் மட்டும்தானா கொடுக்கப்படும்? அவனுடைய உரிமைகள், 'வெற்றுக் காகிதங்களை மட்டுமே பெற்றுக்கொள்ள உரிமை' என்ற அளவுக்கு சுருக்கப்பட வேண்டும்? மாஜிஸ்ட்ரேட்டுக்கு தர்ம சங்கடமாகிவிட்டது. எங்கள் மனுக்களில் ஒரு பகுதியைத்தான் அனுமதித்தார். ஆங்கிலத்திலோ, உருது மொழியிலோ இல்லாத தஸ்தாவேஜுகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்படும் என்று உத்தரவிட்டார். என் சொந்த வழக்கில் அப்ரூவர் ரேவதி காந்த் சின்ஹாவின் இந்தியில் இருந்த ஒப்புதல் வாக்குமூலத்தின் ஆங்கிலமொழி பெயர்ப்புத் தரவேண்டும் என்று சொல்லப்பட்டது. மேல் கோர்ட்டுகள் எங்களுக்கு நிச்சயமாக இன்னும் அதிகமான நிவாரணம் தந்திருப்பார்கள். ஆனால் மேல் கோர்ட்டுகளுக்கு

போகுமுன் நடந்த நிகழ்ச்சிகளும் வேறு விஷயங்களும் இதை அனுவசியமாக்கிவிட்டன.

குஜராத் உயர்நீதி மன்றத்தில் இந்த வழக்கை வெளியூர் களில் விசாரிப்பது எப்படி நியாயமாகும் என்று ஒரு எதிர் வழக்கு போடப்பட்டது: குஜராத்திலிருந்து வந்த குற்றவாளி தங்கள் மீது போடப்பட்ட முதல் வழக்கு பரோடாவில் ஆரம்பித்ததால், வழக்கை பரோடாவில் தவிர வேறு எங்கும் விசாரிக்கக்கூடாது என்பது அவர்கள் வாதம். இதில் போது மான அளவு விஷயம் இல்லை என்று சொல்லி இது நிராகரிக் கப்பட்டது. ஆனுல், இதனுல் வழக்கு இரண்டு வாரம் தாமதப்படுத்தப்பட்டது. வழக்கை குஜராத்தில் நடத்தினுல் எங்களுக்கு அனுகூலமாக இருக்கும் என்று எங்களில் சிலர் அபிப்பிராயப்பட்டோம். காரணம்—அங்கு நீதிபதிகள் சுதந்திரமாகவும் தைரியத்தோடும் செயல்பட்டனர். ஆகவே, அரசு தரப்பில் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீலுக்குப் போகலாம். இதனுல் நாங்கள் அவர்களை இம்மாதிரி செய்ய வேண்டாம் என்று ஒப்புக் கொள்ளச் செய்தோம்.

இந்த வழக்குக்கு ஒரு அரசியல் சாயம் கொடுத்தால்தான் நிறையப் பலன் கிடைக்கும் என்று எங்களில் பெரும்பான்மை யோர் நினைத்தோம். கிரிமினல் வழக்காக மட்டுமே நடத்தப் பட்டால்—ஒருக்கால் அது குஜராத்தில் நடத்தப் பட்டால் —நல்லதாக இருக்கலாம்: ஆனுல் இதிலிருந்து அரசியல் லாபமும் விளம்பரமும் தேடிக் கொள்வதானுல் டெல்லியில்தான் நடை பெற வேண்டும். நவம்பர் வாக்கில் பல அரசியல் தலைவர்கள் விடுதலையாகி விட்டார்கள். இவர்களோடு பரோடாவிலிருந்து தொடர்பு கொள்வது கடினமானது. தவிரவும் அயல்நாட்டு பத்திரிகையாளர்கள் எல்லோருமே டெல்லியில் இருந்தனர். எங்களுக்கு அயல்நாடுகளில் கிடைத்த விளம்பரமும் அதன் மூலம் அயல் நாட்டவர்களின் அபிப்பிராயத்தை உருவாக்க முடிந்த அளவுக்கு, வழக்கு டெல்லிக்கு வெளியே வேறு எங்கு நடந்திருந்தாலும் முடியாமல் போயிருக்கும்.

விசாரணை நடைபெறுவதோ, நிறுத்தி வைக்கப்படுவதோ எங்களுக்கு இருந்த அரசியல் தொடர்புகளைத் துண்டித்து விடும் என்று முடிவு செய்தோம். பலத்த பாதுகாப்பு இருந்தும், எங்களுக்கு உணவு போன்றவை கொண்டு வரும் நண்பர்கள், உறவினர்கள் முலமாக அவர்களோடு தொந்தரவில்லாமல் பேச முடிந்ததன் காரணமாக எங்கள் தொடர்புகளை விடாமல் வைத்துக் கொண்டிருந்தோம். எங்களுக்கு உதவிசெய்யும் நோக்கத்தில் அதற்காக ஏற்படுத்த 'டிஃபென்ஸ் கமிட்டி' யினர் எங்களை அடிக்கடி சந்தித்துப் பேச முடிந்தது. அவர்கள் மூலமாக எங்கள் வழக்குக்கு வெளிநாடுகளில் விளம்பரம் கிடைக்க ஏற்பாடு செய்தோம். இந்த வசதியின் மூலமாக, 1976 நவம்பர் கடைசியிருந்து, நடந்து வந்த அரசியல் காரியங்களிலும் கலந்து கொள்ள முடிந்தது. உதாரணமாக டிசம்பர் மாத மத்தியில் நாங்கள் சரணுகதி ஆவதற்காக ஏற்பாடு செய்யப்பட்ட கூட்டங்களை ஜார்ஜ் வன்மையாகத் தலையிட்டு, அது நடைபெருமல் செய்து விட்டார்.

இந்தக் காரணங்களுக்காக வழக்கு டெல்லியில்தான் நடத்தப்பட வேண்டும். அது மட்டுமின்றி வழக்கும் தடையின்றி நடைபெற்ருக' வேண்டும். இது இரண்டும் இல்லாமல் இருந்திருந்தால் ஜார்ஜைப் பார்லிமெண்ட் தேர்தலில் வேட்பாளர் மனு தாக்கல் செய்ய முடியாமல் போயிருந்திருக்கும். தேர்தல் பிரச்சாரத்திலும் அவரால் நல்ல முறையில் ஈடுபட முடியாமல் போயிருந்திருக்கலாம்.

டிசம்பர் 22 அன்று டாக்டர் கிரிஜா ஹில்கோல் அவர்களைக் கோர்ட்டில் ஒரு வாக்கு மூலம் தாக்கல் செய்ய ஏற்பாடு செய்தோம். அதில் எங்களுக்கு எதிராக சாட்சியம் கூறும்படியாக சி. பி. ஐ. அதிகாரிகள் அச்சுறுத்தினுர்கள் என்று கூறப்பட்டிருந்தது. இதைப்பற்றி டெல்லி கோர்ட்டுக்கு வந்திருந்த இந்திய, அயல் நாட்டு பத்திரிகையாளர்களிடம் ஏற்கனவே சொல்லி வைத்திருந்தோம். சி. பி. ஐ—க்கும் பிராசிக்யூஷன் தரப்புக்கும் ஆச்சரியமாக இருந்திருக்கும்.

அயல் நாட்டு பத்திரிகைகள் டாக்டர் கிரிஜா கூறியவற்றை வெளியிட்டிருந்தது. இந்திரா காந்திக்கு இது மிகுந்த சங்கடத்தைக் கொடுத்திருக்கும். இந்தியாவின் ஆட்சியை எதேச்சாதிகார ஆட்சி என்றும், அவருடைய அரசியல் எதிரிகளை ஒழிக்க சட்டத்துக்கு முரணான நடவடிக்கைகளை உபயோகித்திருக்கிறார் என்றும் அயல் நாடுகளுக்கு எடுத்துக் காட்டும் முயற்சியில் அது எங்களுக்கு ஒரு வெற்றி.

எப்படிச் செய்தாலும் சரி பார்த்துகொடுக்கப்பட்ட தஸ்தாவேஜுகள் எங்கள் திருப்திகேற்ப இருக்கின்றன என்று நாங்கள் கூறுவதற்கு 1977 ஜனவரி முதல் வாரத்துக்கு மேல் தள்ளிப் போட இயலவில்லை. அப்ரூவர் பரத் பட்டேலின் சாட்சியம் ஜனவரி 77–ல் ஆரம்பமாகிறது.

அப்ரூவர்களுடைய குறிக்கோள்களைப் புரிந்து கொள்வது கடினமல்ல. ஒரு சதிச்செயலில் ஈடுபட்டுருப்பவர்களில் மிகவும் தைரியசாலிகள்கூட தண்டனை கிடைக்கும் என்ற பயத்தில் நிலைகுலைந்து போய்விடுவார்கள். எந்த அளவுக்கு வசதி அதிகம் உள்ளவர்களாக இருக்கிறார்களோ, அந்த அளவுக்கு அவர்களுக்கு ஆபத்தும் அதிகம். ஒருவருக்கு ஆழமான நம்பிக்கைகளும், எடுத்துக் கொண்ட காரியத்தில் அசைக்க முடியாத ஈடுபாடும், என்ன வந்தாலும் அதை தாங்கிக் கொள்ளும் தைரியமும் இல்லாவிட்டால், கட்சி மாறி தன் நண்பர்களுக்கு எதிராகவே சாட்சியம் சொல்லிவிடலாம் என்ற ஆசையை எதிர்த்துப் போராடுவது கஷ்டம். இதனால் தான் பிராஸிக்யூஷன் தரப்பு எப்படியாவது அப்ரூவர்களை பெற்று விடுகிறார்கள்.

எங்கள் வழக்கில் இரண்டு அப்ரூவர்கள் இருந்தனர். ஒருவர் பரத் பட்டேல். மற்றவர் ரேவதி காந்த் சின்ஹா. பரத் பட்டேலுக்கு அரசியல் ஈடுபாடு அதிகம் கிடையாது. விட்டகுறை, தொட்ட குறைதான். 'நவநிர்மாண்' போராட்டத்தை இவர் ஆதரித்தார். தேர்தலில் ஜனதா அணிக்கு உதவி செய்தார். இம்மாதிரி அவர் உதவி செய்ததற்குக் காரணம் இருந்தது என்பது இப்போது புரிகிறது. காற்று

எந்தப் பக்கம் அடிக்கறது என்பதை அனேகமாக எல்லா வியாபாரிகளும் தெரிந்து வைத்துக் கொண்டு விடுகிறுர்கள். காற்று பலமாக அடிக்க ஆரம்பிக்கும் முன்பாகவே அவர்கள் திசைமாறிக் கொள்கிறுர்கள். தங்களுக்கு வேண்டிய ஆதாயங் களைக் கேட்டு, பெற்று விடுகிறுர்கள் பட்டேல் ஒரு வியாபாரி. ஆனதால், குஜராத்தில் அரசியலின் போக்கை அவர் ஏற்கனவே கணித்து வைத்திருந்திருக்க வேண்டும். ஆகவே அவர் வெளிப்படையாகவே எதிர்க் கட்சியின் பக்கம் நகர்ந்து விட்டார். இதே காரணத்தால்தான் அவர் ஜார்ஜுடன் தன்னைச்சம்பந்தப்படுத்திக் கொண்டிருக்கிறுர். ஆனுல் இந்தத் தடவை அவரது கணக்கு தப்பாகிவிட்டது.

பாபுபாய் பட்டேல் மந்திரி சபை கவிழ்ந்து, பரோடா சதி வழக்கு வெடித்துச் சிதற ஆரம்பமாகியதும், இந்திரா காந்தியே எப்போதும் தொடர்ந்து இருந்து கொண் டிருக்கப் போகிறுர் என்று பரத் பட்டேலுக்குத் தோன்றியிருக்க வேண்டும். எங்களுக்கு எதிராக அவர் சாட்சியம் சொல்ல சம்மதித்தது, தனக்கு பாதுகாப்பைத் தேடிக் கொண்டது மட்டுமல்ல; ஒரு நல்ல எதிர் காலத்தையும் தேடிக் கொண் டார்.

ரேவதி காந்த் சின்ஹாவைப் பொறுத்த மட்டில் அவர் செய்கை எங்களுக்கு மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்தது. எங்களால் புரிந்து கொள்ளவே இயலவில்லை. அவர் பீஹார் சோஷலிஸ்ட் கட்சியின் முக்கியமான உறுப்பினர். பீஹார் மேல் சபையிலும் ராஜ்ய சபாவிலும் உறுப்பினராக இருந் தவர். எவ்வளவுதான் நாணயமில்லாதவராகவும், நயவஞ்சக ராகவும் ஒரு அரசியல்வாதி இருந்தாலும்—அவரிடம் எப்போதும் ஒரு விசுவாசம் இருக்கும். கொள்கை அடிப்படை யிலும், விளைவுகளால் ஏற்படும் பயத்தின் அடிப்படையிலும்—இந்த விசுவாசம் அந்த அரசியல்வாதியை வெளிப்படையாக விசுவாசமில்லாமல் நடப்பதைத் தடுக்கும். தன் நண்பர் களுக்கு எதிராக அரசாங்கத் தரப்பில் சாட்சி சொல்ல சம்ம திப்பது—அதுவும் இந்த வழக்கு சம்பந்தப்பட்டவரை, தனது

கட்சியின் தலைவருக்கு எதிராகவே சாட்சி சொல்ல சம்ம திப்பது—கேவலமான விசுவாசமின்மையைக் காட்டியது மட்டு மின்றி, நாணயமில்லாத்தனத்தையும் முழுவதுமாகக் காட்டிக் கொடுத்துவிட்டது. ரேவதி காந்த் சின்ஹா போன்ற மனிதர்களுக்குக் கொள்கை பிடிப்போ, பல நாட்களாகக் கூடவே இருந்தவர்களை—எந்த கட்சி தனக்கு பதவியை யும், புகழையும் வாழ்க்கையையும் தந்ததோ, அந்தக் கட்சி யையும் காட்டிக் கொடுக்கிறோமே என்ற மன உறுத்தலோ இருக்காது. அரசியலில் ஈடுபட்டிருந்த மற்றும் பலரைப் போலவே, இந்திரா காந்தி நெடுநாட்களுக்குத் தொடர்ந்து இருக்கப் போகிறார். தன்னுடைய நம்பிக்கைத் துரோகத் திற்கு பதில் சொல்ல வேண்டாத அளவிற்கு இந்திரா ஆட்சி நீடிக்கப் போகிறது என்று சின்ஹா நினைத்திருக்க வேண்டும்.

1977 ஜனவரி மத்தியிலிருந்து பிப்ரவரி 10-ந் தேதி வரை பட்டேலின் சாட்சியம் தொடர்ந்தது. அனுபவமிக்க வியாபாரி என்ற முறையில் அவர் மற்றவர் வளர்ச்சிக்கோ, அவமான உணர்ச்சிக்கோ மதிப்புத் தரவில்லை. அப்படியும் சாட்சி சொல்லும்போது தயங்குவார்; தர்ம சங்கடப்படுவார் என்றெல்லாம் நாங்கள் எதிர்பார்த்தோம். முதல் நாள் வேண்டுமானால் அவருக்கு அப்படியெல்லாம் தோன்றியிருக்க லாம். அதற்குப் பிறகு, அவர் செய்தது ஏதோ ஒரு வியாபா ரத்துக்கு பேச்சு வார்த்தை நடத்துவது போல தோன்றியதே தவிர, நம்பிக்கைப் பாத்திரமாக இருந்தவர்களை காட்டிக் கொடுப்பதாகவோ, இவருடைய சாட்சியத்தில் பலர் சிறைக்கு அனுப்பப்படுவார்கள் என்று யோசிப்பதாகவோ தோன்ற வில்லை எங்களை முகத்தோடு முகம் எதிர் நோக்க கஷ்டப் பட்டார் என்பதுதான் அவருக்கு இருந்த சங்கடமாக எங்க ளுக்குத் தோன்றியது. இரக்கமற்றவர்களுக்குக்கூட தன்னால் வஞ்சிக்கப்பட்டவர்களை எதிர்நோக்க கஷ்டமாகத் தோன்றும். ஆடு வெட்டுபவனுக்குக்கூட தான் வெட்டப்போகும் ஆட்டை அதை வெட்டும் முன் நேருக்கு நேர் நோக்க கஷ்டப்படுவான்.

இந்த சமயத்தில் அப்ரூவரை குறுக்கு விசாரணை செய்வது கிடையாது. காரணம் எதிர்தரப்பு விசாரணையை நடத்திச்

செல்லப் போகிறது என்பதை அப்போதே பிராசிக்யூஷனுக்குத் தெரியப்படுத்தி விடக்கூடாது. எங்கள் கையில் இருப்பதை காட்டி விட்டால், இப்போது கட்டியிருக்கும் பலவீனத்தை செஷன்ஸ் விசாரணையில் மறைத்துவிடச் சந்தர்ப்பம் கிடைத்துவிடும். ஆனல், பரத் பட்டேல் சாட்சியம் கொடுத்துக் கொண்டிருக்கும்போதே, நாங்கள் அவரைக் குறுக்கு விசாரணை செய்யப் போகிறோம் என்றே அவருக்குத் தோன்றும்படி செய்துவந்தோம். தன்னை போட்டு துளைத்தெடுக்கப் போகிறார்கள் என்ற பயத்திலேயே அவர் நிலைகுலைந்துபோய் விடச்செய்வதற்கே இப்படி செய்தோம். பட்டேல் ஒரு அழுத்தக்காரர். நெஞ்சுரம் கொண்டவர். நன்ருகத் தயார் செய்யப்பட்டிருந்தார். கொஞ்சம் கூட கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. சாட்சியம் முடிந்ததும், நாங்கள் ஏன் குறுச்கு விசாரணை செய்யவில்லை என்பதற்கு கோர்ட்டில் காரணத்தைக் கூறிவிட விரும்பினேம். அப்படி காரணம் காட்டும்போதும் அதைப் பிரச்சாரத்திற்கும் பயன் படுத்திக் கொள்ள விரும்பினேம்.

பிப்ரவரி 10-ந் தேதியன்று குறுக்கு விசாரணை செய்யப் பட பட்டேலைக் கொண்டு வந்தபோது, தான் ஏன் குறுக்கு விசாரணை செய்ய விருப்பவில்லை என்பதற்கு ஜார்ஜ் ஒரு அறிக்கையைக் கொடுத்தார்.

பயங்கரமான ஒரு அரசாங்கத்தை எதிர்த்துப் போராட தன்னிடமிருக்கும் எல்லா வழி வகைகளையும் உபயோகித்துக் கொள்ள ஒரு குடிமகனுக்கு இருக்கும் உரிமைகளை நியாயப் படுத்திக் கூற, அவர் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டார். மாஜிஸ்ட்ரேட்டும், பிராசிக்யூஷனும், எதிர்ப்புக் கூறியும் தனது நீண்ட அறிக்கையைப் படித்து, எங்களை விசாரணைக்கு உட்படுத்தி எங்களை எப்படியாவது தண்டித்து விடவேண்டும் என்று தன்னல் இயன்ற அளவுக்கு முயன்று வரும் அரசாங்கத்தின் சட்டபூர்வமான, நியாயபூர்வமான தன்மைகளை விரிவுபடுத்திக் கூறினர். தனது விசாரணை அறிக்கையில் அப்ருவர் பரத் பட்டேலை மன்னித்து விடும்படி

கூறியிருந்த விசாரணை அதிகாரி, பரத் பட்டேல் பிராசிக்யூஷன் தரப்பில் சாட்சியமளிக்கத் தகுந்த பாதுகாப்பு அளிக்கப்படா விட்டால், நாங்கள் இந்தச் சதியில் குற்றவாளிகள் என்று நிரூபிக்கப்பட நேர்முக சாட்சியம் எதுவும் இல்லாமல் போய்விடும் என்று ஒப்புக் கொண்டிருக்கிறார் என்று ஜார்ஜ் குறிப்பிட்டுக் கூறினார்.

எந்த மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் தன் ஒப்புதல் வாக்கு மூலத்தைக் கொடுத்து, அதன் அடிப்படையில் அவருக்கு மன்னிப்பு வழங்கப்பட்டதோ, அதே மாஜிஸ்ட்ரேட் முகம்மது ஷமீம்தான் இப்பொழுது பிரதம மெட்ரோபாலிட்டன் மாஜிஸ்ட்ரேட்டாக எங்கள் விசாரணையை நடத்திக் கொண்டிருந்தார். மாஜிஸ்ட்ரேட்டின் உத்தரவிலிருந்து நிறைய மேற்கோள்கள் காட்டி. 'எங்களுக்கு எதிராக சாட்சியம் கூற இருக்கும் அப்ரூவரும், வழக்கில் சம்பந்தப்பட்டிருந்ததாகவும், குற்றவாளிகள் செய்ததாக குற்றம் சாட்டப்பட்டிருக்கும் குற்றங்களைப்பற்றி சாட்சியம் கூறும் நிலையில் இருக்கிறார்' என்று மாஜிஸ்ட்ரேட் தெளிவாக சொல்லியிருப்பதை ஜார்ஜ் குறிப்பிட்டார். எந்த மாஜிஸ்ட்ரேட் முன்பு இந்த வாக்குமூலம் தரப்பட்டதோ, எந்த மாஜிஸ்ட்ரேட் மேலே குறிப்பிட்டபடி முடிவு செய்தாரோ, அதே மாஜிஸ்ட்ரேட் இப்போது இந்த வழக்கை விசாரிக்கிறார். ஆகவே இந்த மாஜிஸ்ட்ரேட் இந்த விசாரணையில் எந்த அப்ரூவரின் உண்மையைக் கூறும் திறமையில் நம்பிக்கை வைத்திருக்கிறாரோ, அந்த அப்ரூவரின் இப்போதைய சாட்சியத்தை எடைபோடுவதில் சுதந்திரமாக செயல்படுவார் என்று எதிர்பார்க்க முடியாது என்று ஜார்ஜ் குறிப்பிட்டார், கிரிஜா ஹில்கோல் கொடுத்த வாக்குமூலத்தை மாஜிஸ்ட்ரேட்டுக்கு குறிப்பிட்டு காட்டிய ஜார்ஜ், கிரிஜாவும் அவரது குடும்பத்தினரும் எங்களுக்கு எதிராக சாட்சியம் கூற எப்படியெல்லாம் பயமுறுத்தப்பட்டனர், வற்புறுத்தப்பட்டனர் என்பதை எடுத்துக் கூறினார். போலீஸ் எப்படி தன் சகோதரர் லாரன்ஸ் பெர்ணண்டஸை சித்திரவதை

செய்தார்கள் என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் சுட்டிக் காட்டினார், சிநேகலதா ரெட்டி சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியை குறிப்பிட்டு. எப்படி சிறை அதிகாரிகள் கொடுமைகளாலும், மருத்துவ வசதி தராமலும் சிநேகலதாவை கிட்டத்தட்ட கொன்று விட்டார்கள் என்பதைக்கூறி எதற்காக எங்களுக்கு எதிராக இம்மாதிரி முறைகளில் எல்லாம் அரசு செய்ய வேண்டும், நாங்கள் தண்டிக்கப்பட வேண்டும் என்பதில் அரசு எதற்கு தன் பலத்தால், முடிந்தவரையில் எல்லாம் முயற்சி செய்ய வேண்டும் என்று மாஜிஸ்ட்ரேட் யோசித்துப் பார்க்க வேண்டும் என்று ஜார்ஜ் கூறினார். இந்திரா காந்தி யின் சர்வாதிகார ஆட்சிக்கு எதிராக நாங்கள் முழு மூச்சாக எதிர்ப்புக் காட்டியதற்காக எங்களை தண்டிக்க நடத்தப்படும் செயல்களே இவை எல்லாம் என்பது நன்றாகப் புரிகிறது என்றார் ஜார்ஜ்.

அரசுக்குச் சொந்தமான ரேடியோ, தணிக்கைக்கு உட்பட்ட பத்திரிகைகள், இவைகள் மூலமாகச் செய்யப்படும் பிரச்சாரங்களை உதாரணங்களாகக்கூறி, இந்திய மக்கள் தன்னுடைய சர்வாதிகார ஆட்சியை எப்படி மகிழ்வோடு ஒப்பு கொண்டு விட்டார்கள் என்பதை உலகுக்கும், நம் நாட்டு மக்க ளுக்கும் எடுத்துச் சொல்ல இவைகளை எப்படிப் பயன்படுத்திக் கொண்டார் என்று சுட்டிக் காட்டினார்.

"இந்தக் கோர்ட் நடவடிக்கைகளை அரசு தனது இஷ்டப் படி திரித்து வெளியிட்டு வருகிறது. இதைப்பற்றியும் நாங்கள் எதிர்ப்பு தெரிவித்திருக்கிறோம். நாங்கள் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் எங்கள் தரப்பில் எவ்வளவு தஸ்தாவேஜுகளை சமர்ப்பித்திருந்த போதும், எந்த மாதிரி கோரிக்கைகளை கூறியிருந்தபோதும், இறுதி தீர்ப்பு எப்படி இருக்கப்போகிறது என்பது ஏற்கனவே முடிவாகிவிட்ட விஷயம். ஆகவே நாங்கள் முதல் அப்ரூவர் பரத் பட்டேலை குறுக்கு விசாரணை செய்யப் போவதில்லை. இந்த உரிமையை வேண்டுமென்றே விட்டுக் கொடுப்பதன்மூலம் கிடைப்பதை எதிர் நோக்க நாங்கள்

தயாராக இருக்கிறோம்'' என்று கூறி, தனது வாக்குமூலத்தை முடித்தார் ஜார்ஜ்.

ஜார்ஜ் தனது வாக்கு மூலத்தைப் படித்து, முடித்தவுடனேயே நான் என் வாக்குமூலத்தைப் படிக்க ஆரம்பித்தேன். அதன் சுருக்கம்—''இன்று உங்கள் முன் படித்த தன் வாக்கு மூலத்தில் ஜார்ஜ் பெர்னாண்டஸ் கூறி இருக்கும் ஒவ்வொரு எண்ணத்தையும், செயலையும் நான் அப்படியே ஏற்றுக் கொள்கிறேன். அரசியலிலிருந்து 25 ஆண்டுகளுக்கு முன்பாகவே விடுபட்ட நான் என்னுடைய வாழ்நாளில் கிட்டத்தட்ட இறுதி காலத்தில் சர்வாதிகாரியை எதிர்த்துப் போராட ஏன் முன் வந்தேன் என்று என்னைக் கேட்கிறார்கள். சொல்லப் போனால் நண்பர்களும், விசாரணை செய்ய வந்த போலீஸ் அதிகாரிகளும் எதற்காக நான் மகிழ்ச்சியும், அமைதியும், வசதியுமுள்ள வாழ்க்கையை உதறிவிட்டு ஆபத்து நிறைந்த ஒரு போராட்டத்தில் ஈடுபட வேண்டும் என்று கேட்டார்கள். காந்திஜி நம்மைவிட்டுப் போனதிலிருந்தே அநியாயமும், தீமைகளும் நமது மக்களின் தலைவிதிகளாக இருந்து வருகிறது. 1975 ஜூன் 25-ந் தேதி நடைபெற்ற நிகழ்ச்சி, நாட்டுக்கு இப்படி ஒரு நிலை வருமா என்று யோசிக்க முடியாத அளவுக்கு ஏற்பட்ட ஒரு பேராபத்து. கெடுதியும், அநியாயமும் அதிகமாக்கப்பட்டது மட்டுமின்றி, நமது மக்கள் எல்லா உரிமைகளும்—சுதந்திரமாக, மகிழ்வாக, உயிரோடு இருக்க—ஒரு தனிப்பட்ட மனிதரால், அவரது குடும்பத்தினரால், அவரது அரண்மனையில் அவரைச் சுற்றி வட்டமிட்டு கொண்டிருந்த ஒரு சிறு கூட்டத்தினரால் பறிக்கப்பட்டு விட்டன. நடந்து விட்டவைகளை எதிர்க்க அரசியல்வாதி மட்டும் போதாது என்பதைப்புரிந்து கொண்டேன். பதவி, புகழ், அதிகாரம் இவற்றின்மீது தனக்கிருந்த ஆசையால் நாட்டு மக்களுக்கு சாப்பாடு கிடைத்தால், சாப்பிட மட்டுமே உரிமை உண்டு என்று மிருகங்களைப்போல் ஆக்கிவிட்ட, ஒரு பெண்ணைப் பதவியிலிருந்து இறக்க தன்னால் இயன்றஅளவுக்கு முயற்சி செய்ய வேண்டியது, ஒவ்வொருவரின்—குறிப்பாக விஷயம் புரிந்த அறிவாளிகளின்—கடமையாகும்.

எனது மனசாட்சியாலும், உணர்ச்சியாலும் நமது நாடு—நமது மக்கள் சிதைக்கப்படுவதுகண்டு பொறுத்துக் கொள்ள இயலவில்லை. நமது நாட்டு மக்களுக்கும், நமது நாட்டுக்கும் இழைக்கப்பட்ட அநீதிகள் சரி செய்யப்படா விட்டால், உலகில் எந்த சர்வாதிகாரிக்கும் இல்லாத அளவுக்கு எதேச்சதிகாரங்களை வைத்துக்கொண்டு தன்னை ஒரு ராணி போல எண்ணி வந்த ஒரு பெண்ணை பதவியிலிருந்து நீக்கா விட்டால், என்னுடைய எதிர்காலம், என்னுடைய வசதிகள், என்னுடைய உடல் நலம், இன்னும் சொல்லப் போனல் நான் உயிர் வாழ்வது எல்லாவற்றுக்குமே எந்த மதிப்பும் இல்லாமல் போய்விடும் என்று நம்பினேன்; இப்போதும் நம்புகிறேன். அதனல் இந்த முயற்சியில் என்னை ஈடுபடுத்திக் கொண்டேன். இப்படிச் செய்யும்போது, அந்த சர்வாதிகாரியும், அவருடைய ஆட்களும் என்னைத் தண்டித்தால், என்னைக் கொன்றுவிட்டா லும்கூட, நான் தயாராக இருக்கிறேன். நமது மக்களின் சுதந்திரத்திற்காகப் போராட்டத்தில் ஈடுபட்டதை ஒருபெரும் பாக்கியமாக நான் கருதுகிறேன். 35 ஆண்டுகளுக்கு முன்பு நான் இளைஞனக இருந்தபோது இம்மாதிரி செய்திருக்கிறேன். அப்போது மன்னருக்கு எதிராகப் போராடுகிறேன் என்று குற்றம் சாட்டினர்கள். விளைவுகளை ஏற்கத் தயாராக இருந்தேன். இப்போது ஒரு மகாராணியை எதிர்த்துப்போராட முனைந்துவிட்டேன். உயிர் உள்பட என்னிடம் உள்ள எல்லா வற்றையும் மகிழ்ச்சியோடு நாட்டுக்காக பணயம் வைக்கத் தயாராக இருக்கிறேன்.

"இந்த முயற்சியில் ஈடுபட்டிருக்கும் எனக்கு என் மனைவியும், என் குடும்பத்தினரும், நண்பர்களும் அவர்கள் என்னேடு நேரடியாக ஈடுபடாவிட்டாலும், எனக்கு ஆதரவளிக்கிருர்கள் என்பதில் எனக்கு மகிழ்ச்சியாகவும், ஆறுதலாகவும் இருந்தது. நமது பொன்னுட்டை 1975 ஜூன் 25 முதல் ஆண்டு வரும் ஒரு தீய சர்வாதிகார சக்தியை முறியடிக்க தைரியத்தோடும், உறுதியோடும் போராட்டத்தை நடத்தி செல்லும் ஜார்ஜ் பெர்னுண்டஸோடு என்னையும் மன

உறுதியோடு இணைத்துக் கொண்டதில் எனக்கு ஏற்பட்ட மன எழுச்சியை அவர்கள் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.''

பரத் பட்டேல் தனது வாக்குமூலத்தை முடித்த ஒரு வாரம் கழித்து ரேவதி காந்த் சின்ஹா தனது வாக்குமூலத்தை கொடுக்க ஆரம்பித்தார். ரேவதி காந்த் முற்றிலும் மாறுபட்ட ஒரு மனிதர். குற்றவாளியாகி, அதனால் ஏற்படும் விளைவுகளை எதிர்நோக்க தைரியமில்லாத காரணத்தால் அவர் அப்ரூவர் ஆக சம்மதித்தார் என்பது புரிந்துவிட்டது. அவருக்கு ஏற்கனவே 25 ஆயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டது என்றும், இன்னொரு 25 ஆயிரம் ரூபாய் வாக்குமூலம் கொடுத்த பிறகும், இன்னொரு 50 ஆயிரம் ரூபாய் செஷன்ஸ் கோர்ட்டில் வழக்கு முடிந்தபிறகும் அவருக்கு தரப்படும் என்ற உண்மை போல காணப்பட்ட ஒரு வதந்தி பரவலாயிற்று. தனக்கு சொற்ப மான வருமானம்தான் என்றும் தன் குடும்பம் பெரியது என்றும் அவரே ஒப்புக் கொண்டதை வைத்துப் பார்த்தால், ஒரு லட்சம் ரூபாய் அவரது மனசாட்சியை தளர்த்தி இருக்க லாம். ஒரு லட்சம் ரூபாய் பலருடைய மனசாட்சியை தளர்த்தி விடக்கூடியதே. இருந்தும் நீதிமன்றத்தில் அவரைப் பார்க்கும் போது பரிதாபமாக இருந்தது. சொல்லிக் கொடுத்ததை அப்படியே திருப்பிச் சொல்ல அவர் சிரமப்படவில்லை. இருந் தாலும் அவரது மனது அவரை கஷ்டப்படுத்தி இருக்க வேண்டும். கேவலமானவர்கள்கூட மனசாட்சி உறுத்தும்போது கஷ்டப்படுவார்கள். அதேபோல சின்ஹாவும் தன்னை நம்பி யிருந்த, தனது சாட்சியத்தால் குற்றவாளியாக்கப்போகிற தனது கட்சித்தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸை நேருக்கு நேர் பார்க்கவே அவர் சங்கடப்பட்டிருக்க வேண்டும்,

ஐந்தே தடவைகளில் அவர் தனது சாட்சியத்தை முடித்து விட்டார். அப்போது பார்லிமெண்ட் தேர்தல் சமயம், ஆகவே நாங்கள் பரபரப்போடு இருந்தோம். வெளி உலகோடு தொடர்ந்து தொடர்பு கொள்ள விரும்பினோம். ஜார்ஜ் மக்களைச் சந்திப்பது அவசியமாயிற்று. உருவாகும் சூழ்நிலை குறித்து விவாதிப்பது, அந்த சூழ்நிலையில் முடிந்த வரையில்

முடிவு எடுப்பது, தேர்தல் பிரச்சாரத்தை நடத்துவது— இவைகளில் ஜார்ஜ் கலந்து கொள்வது ரொம்பவும் அவசிய மாகிவிட்டது. வேட்பாளர்கள் தேர்வு அறிக்கைகள் வெளியிடுவது, பேச்சுக்களை ஒலிப்பதிவு செய்து அனுப்புவது, அயல்நாட்டு பத்திரிகைகளுக்கு பேட்டியளிப்பது, ஜனதா தலைவர்களைச் சந்தித்து தேர்தல் பற்றி பேசுவது—இவைகளை யெல்லாம் ஜார்ஜால் செய்ய முடிந்ததற்குக் காரணம், நாங்கள் எப்படியெல்லாம் சமாளித்து வழக்கு நடவடிக்கை களில் இடைவெளி இல்லாமல் கோர்ட்டில் தினமும் நடை பெறும் படியாகப் பார்த்துக் கொண்டதால்தான்.

கோர்ட் நடவடிக்கை தாமதப்படுத்துவதற்கும், கிடைக் கும் சந்தர்ப்பங்களை எங்களுக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளவும் வேண்டிய அனேகமான எல்லா தந்திரங்களும் இப்போது எனக்கு நன்ருகத் தெரியும். எளிதான, ஆனல் நல்ல பயன்தரக்கூடிய தந்திரம் 'உடல்நிலை சரியில்லை' என்று கூறுவது. நாங்கள் மொத்தம் 22 பேர் இருந்தோம். எங்களில் யாராவது ஒருவர் சாதாரணமாகவே மாதம் ஒரு தடவை உடல் நலக்குறைவால் பாதிக்கப்படலாம். இதனல் ஒரு மாதத்துக்கு வழக்கை தாமதிக்க வைக்க முடியும். ஆனல் இது தெரிந்து விடும். நாங்கள் ஏமாற்ற நினைக்கிருேம் என்று மாஜிஸ்ட்ரேட் கருதினல் அந்தக் குற்றவாளி இல்லாமலேயே கூட வழக்கை நடத்தச் செய்யலாம். எங்கள் செய்கைகளால் வழக்கின் ஓட்டத்தை தடை செய்ய முயற்சிக்கிருேம் என்று மாஜிஸ்ட்ரேட்நினைக்கும்படியான எந்த காரியத்தையும் செய்ய நாங்கள் விரும்பவில்லை. சின்ஹாவிற்கே உடல் நலம் சரியில்லை அல்லது அது மாதிரி பாசாங்கு செய்தார். இதுவும் எங்களுக்கு உரியது. இரு தடவை எனக்கும் உடல்நலம் சரியில்லை. எனக்கு வக்கீல் இல்லாததால் என்னல் போகாமல் இருக்க முடியவில்லை. வேறு மூன்று தடவைகள் நானும் ஜார்ஜும் ஹைகோர்ட்டில் ஆஜராக வேண்டியிருந்தது. வழக்கை ஒத்திப்போட மாஜிஸ்ட் ரேட் மறுக்கும்படியாக ஒரே மாதிரியான உபாயங்களை நாங்கள் கையாளவுமில்லை.

பிராஸிக்யூஷனும், இதை பிரமாதமாக எதிர்க்கவில்லை, கொஞ்சம் இரக்கமில்லாததாக தோன்றினாலும் நம்பக்கூடிய காரணம்—அரசு தரப்பில் ஆஜராகும் வக்கீலுக்கு ஒவ்வொரு நாளைக்கும் பணம் தரப்பட்டது. ஆகவே அவர் சொந்த நலனில் இதை பலமாக எதிர்த்திருக்கப் போவதில்லை. இதை நான் கேள்விப்பட்டபோது உயர்நீதிமன்றத்தில் நான் தாக்கல் செய்திருந்த பல ரிட் மனுக்களுக்காக அவர் ஆஜரா கும் நாட்களில் அவருக்கும் கிடைக்கும் பணத்தில் பாதியை நான் கேட்கலாமா என்று யோசித்தேன். மற்ற வக்கீல்களை ஒப்பிட்டுப்பார்க்கும் போது நான், என் மனுக்களை அனுமதிக்க அவர்களில் பலரை விட கடுமையாக உழைத்தேன். நெடு நேரம் விவாதித்திருக்கிறேன். சில சமயம் நாள் முழுவதும் பேசியிருக்கிறேன். இதையெல்லாம் பார்க்கும் போது பணத்தில் பாதியைப் பெற்றுக் கொள்ளும் ஏற்பாடு நியாய மாகவே பட்டது.

எங்கள் அனுபவத்திலிருந்து தீர்ப்பு கிடைக்கச் செய்வதை தள்ளிப்போடுவது எவ்வளவு சுலபமானது என்று புரிந்து கொண்டோம். நீதி தாமதப்பட்டால் அது கிடைப்ப தும் கிடைக்காமல் போவதும் ஒன்றுதான். சாமார்த்தியமான ஒரு வக்கீல் கடைசி நாள் வரை வாய்தா வாங்கலாம். இதனால் சாட்சிகளுக்கு கஷ்டம் அதிகம். பெரிய பெயர் வாங்கிய வக்கீல்கள் உயர்நீதிமன்றங்களில் எப்படி சிரமமில் லாமல் தங்கள் கட்சிக்காரர்களுக்கு வாய்தா வாங்கிக் கொடுத்து விடுகிறார்கள் என்பதைப் பார்த்திருக்கிறேன். இந்த வழக்கத்தை நிறுத்த ஏதாவது செய்ய வேண்டாமா? எங்கள் தந்திரங்களையும் மீறிக் கொண்டு சின்ஹா தனது சாட்சியத்தை மார்ச் முதல் வாரத்தில் முடித்துக் கொண்டு விட்டார். இவரை குறுக்கு விசாரணை செய்யும் உரிமையை விட்டுக் கொடுத்திருந்தால் இந்த முதல் ரவுண்டு விசாரணை எப்போதோ முடிந்திருக்கும்.செஷன்ஸ் கோர்ட்டில் விசாரணை ஆரம்பிக்கவே பல வருடங்கள் பிறக்கும். இதற்குள் வழக்கைப் பற்றி பொதுமக்கள் மறந்தே போய் விடுவார்கள். வழக்கு

நடந்து கொண்டேயிருந்தால்தான் பொது மக்களோடு தொடர்பும் இருந்து கொண்டேயிருக்கும். தேர்தல் பிரச்சார சமயத்தில், ஒரு சர்வாதிகார ஆட்சி இருந்து வருகிறது, அதை எதிர்க்கும் ஒரு சிலர் எல்லாவற்றையும் துறந்து போராடு கிறார்கள் என்று மக்களுக்கு நினைவுறுத்த இந்த பரோடா வெடி குண்டு சதி வழக்கு நடந்து கொண்டிருப்பது அவசியம். ஓட்டுப் பெட்டியின் மூலம் மக்கள் சர்வாதிகாரத்தை ஒழிக்க இந்த வழக்கைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தோம்.

ஆகவே சின்ஹாவை குறுக்கு விசாரணை செய்வது என்று தீர்மானமாயிற்று. ஆனால் விசாரணை சாதாரண முறையில் இருக்க முடியாது. காரணம்—அப்ரூவரிடம் சாட்சியத்தில் காணப்பட்ட, நாங்கள் பயன்படுத்திக் கொள்ள விரும்பிய குறைபாடுகளை எங்கள் குறுக்கு விசாரணையின் மூலம் பிராசிக்யூஷன் தெரிந்து கொண்டு விடாமல், அப்ரூவருக்கு சொல்லிக் கொடுக்கவோ, தஸ்தாவேஜுகளை தயார் செய்யவோ நேரம் கொடுக்காதபடி அவற்றை செஷன்ஸில் செய்ய வேண்டும். பிரதம விசாரணையில் உள்ள சாட்சியத்தை சுற்றி வளைத்து குறுக்கு விசாரணை செய்ய வேண்டும். அதை அரசியல் அடிப்படையில் நடத்த வேண்டும். முடிந்தால் சின்ஹாவின் நேர்மையை உடைத்து விட வேண்டும். எங்கள் அரசியல் கொள்கைகளை எடுத்துக்கூறவும், சர்வாதிகாரத்தின் பயங்கரத்தையும் கொடுமைகளையும் சட்டத்துக்கு அப்பாற் பட்ட வழிகளில் எதிர்த்துப் போராட எங்களுக்கிருந்த உரிமைகளைச் சுட்டிக் காட்டவும், இதை பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இம்மாதிரி ஒரு குறுக்கு விசாரணையை நன்றாக. நான்தான் செய்ய வேண்டும் என்றும் முடிவாகியது.

சின்ஹாவை நான் சாட்சிக் கூண்டிலேயே ஐந்து நாட் களுக்கு வைத்திருந்தேன். மார்ச் 22–ந் தேதி தேர்தல் முடிவு கள் வெளியாகி நாங்கள் ஜாமீனில் விடுதலையாக உத்தரவாகி யும் குறுக்கு விசாரணை முடியவில்லை. வெற்றிக் களிப்பில் நீதி மன்றத்துக்கு முன் நுழைந்து விட்ட கூட்டம், சின்ஹாவை ஒன்றும் செய்திருக்காது என்றாலும், குறுக்கு விசாரணையை

நடத்த விடாமல் செய்திருக்கும். இல்லாவிட்டால் சின்ஹா என் கேள்விகளுக்கு பதில் கூற படாதபாடுபட்டிருப்பார்.

சின்ஹாவின் குணத்தையும், நேர்மையையும் நான் உடைத்து விட்டேன். அவருடைய சாட்சியம் நம்ப முடியாத சாட்சியம் என்றும், ஓரளவிற்கு வெற்றிகரமாகச் செய்து விட்டேன். தான் கோழை என்றும், தான் செய்தவைகளுக் காக வெட்கப்படுவதாகவும், தன் மீது நம்பிக்கை வைத் திருந்த கட்சித் தலைவர் பெர்னாண்டஸுக்கு நம்பிக்கை துரோகம் இழைத்து விட்டதாகவும் அவரையே ஒப்புக் கொள்ளும்படி செய்தேன். எதிர்பார்த்தது போலவே, அவர் 'தான் லஞ்சம் வாங்கவில்லை. தனக்கு ஒரு பெரிய பரிசு வாக்களிக்கப்பட்டிருக்கிறது' என்பதையெல்லாம் மறுத்தா லும் தன் செலவுக்காக தன்னோடு டெல்லிக்கு 1500 ரூபாய் கொண்டு வந்ததாக பிரமாணம் செய்து கூறினர். இவருடைய மொத்த ஆண்டு வருமானமே 2000 ரூபாய் தான். இவர் குடும்பத்தில் இவரைச் சார்ந்தவர்கள் ஒரு டஜன் பேர் இருந் தார்கள். வெளிப்படையாகத் தெரிந்த இந்த மாறுபாட்டுக்கு அவர் கூறிய சமாதானம்—'எனக்கு பணக்கஷ்டம் வரும் போதெல்லாம் கடவுள் வந்து காப்பாற்றுவார். காந்தி மீதும் ஜெ.பி. மீதும் தனக்கு நம்பிக்கை உண்டு என்பதாகும். இவரால் சொல்ல முடியாவிட்டாலும் அவர்களுடை நாட்டுப்பற்று மீது தனக்கு இருந்த சந்தேகத்தை வெளிப்படுத்தினர். அடிக்கடி, 'மறந்து போய் விட்டகோழைத்தனமா அல்லது வன்முறை யாக என்று கேட்டால் இந்த நாட்டு மக்களுக்கு வன்முறை யையே சிபாரிசு செய்வேன்' என்ற காந்தியின் வார்த்தைகள் இவரால் மீண்டும் எனக்கு நினைவுக்கு வந்தன. சின்ஹா ஒரு புத்திசாலியான, விழிப்பான சாட்சி. ஆனல் ஒரு அராஜகத்தை எதிர்த்துப் போராட தன்னிடமிருக்கும் எதை யும் உபயோகிக்க மக்களுக்கு உள்ள உரிமையை வெளிக் கொண்டுவர, நான் மறைமுகாக கேட்ட கேள்விகளை அவரால் சமாளிக்க முடியவில்லை.

இந்த குறுக்குவிசாரணை, எங்களுக்கும் எங்கள் நோக்கத்துக்கும் விளம்பரம் தேடும் நோக்கத்துடன் செய்யப்பட்டது. ஆனால் அரசாங்கத்தின் இரும்புப் பிடியில் சிக்கியிருந்த 'சமாச்சார்' நீதிமன்றத்துக்கே வரவில்லை. மார்ச் 18–ந் தேதி அன்று நடந்த கடைசி நாள் பற்றிய செய்திகள் மட்டும் வெளிவந்தன. ஆனால் இதை ஈடுகட்ட நாங்கள் குறுக்கு விசாரணையை சைக்ளோஸ்டைல் செய்து வினியோகித்தோம். கோர்ட்டில் நடந்தவைகளை திரித்துக்கூறுவது கோர்ட்டை அவமதிப்பதாகும். ஆனால் பிரதான விசாரணைக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்து பிரசுரித்து விட்டு, குறுக்கு விசாரணையை இருட்டடிப்பு செய்து விட்ட 'சமாச்சார்'மீது வழக்குப்போட அந்தச் சூழ்நிலையில் இயலாது என்பது எங்களுக்குத் தெரியும். பின்னால் அதைப்பற்றி ஏதாவது செய்திருப்போம். அந்த சந்தர்ப்பத்தில் எங்களுக்கு அவகாசம் தேடிக் கொள்வதிலும், வழக்கை மக்கள் பார்வையிலேயே வைத்திருப்பதிலும் குறியாக இருந்தோம்.

மார்ச் 22–ந் தேதி நாங்கள் ஜாமீனில் விடுதலையாகி, மார்ச் 26 அன்று வழக்கு வாபஸ் வாங்கிக் கொள்ளப்பட்டதும், சின்ஹாவுக்கு தற்காலிக விடுதலை கிடைத்தது. ஆனால் ஆயுள் பூராவும் தனக்கு ஏற்பட்ட அவமானத்திலிருந்தும், பொது அவமதிப்பிலிருந்தும் விடுதலை பெற அவரால் முடியாது. நான் சிறு பங்கேற்ற ஒரு நாடகம் இதோடு முடிந்தது. ஜார்ஜோடு தலை மறைவு இயக்கத்தில், சம்பந்தப்பட்டிருந்த ஆயிரக்கணக்கானவர்களுக்கு இது விடுதலையையும், லட்சக்கணக்கான இந்தியர்களோடு பங்கு கொள்ளும் ஒரு கண்ணியத்தையும் இது கொடுத்தது.

# 15. எதிர்த்துப் போராட உரிமை

1977 மார்ச் 25–தேதி நள்ளிரவு. சி. பி. ஐ. சூப்ரின்டெண் டெண்ட் ரமீந்திரசிங், போன் செய்து என்னை மறுநாள் காலை 9.30 மணிக்கு பிரதம மெட்ரோபாலிடன் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு வரும்படிக் கூறினர். எங்களுக்கு எதிராக இருந்த வழக்கை வாபஸ் பெற்றுக் கொள்ள, நானும் அங்கே இருக்கவேண்டும் என்பதில் அவர் ரொம்பவும் ஆர்வமாக இருந்தார். 22–ந் தேதி நாங்கள் ஜாமீனில் வெளியானதி லிருந்து அப்படி ஒரு டெலிபோன் செய்தியை நான் எதிர் பார்த்திருந்தேன். செய்தே தீரவேண்டும் என்று ஆகிவிட்ட ஒரு காரியத்தை, செய்துவிட அரசாங்கம் அவசரம் காட்டியது எனக்குப் புரிந்தது. காரணம், மார்ச் 26–ந் தேதி காலை ஜார்ஜ் மத்திய அமைச்சராகப் பதவியேற்க வேண்டும்.

இதற்கு முன்பாக, மாஜிஸ்ட்ரேட் முன்பு நடந்தவிசாரணை யின்போது வழக்கைத் திரும்பப் பெற பிராசிக்யூஷன் மனுப் போட்டால், அதை நான் எதிர்க்கப் போவதாக ஒரு தடவை சொல்லியிருந்தேன். நான் ஜோக் அடிப்பதாக நினைத்திருந் தார்கள். நான் உண்மையாகவே அப்படி நினைத்துத்தான் சொன்னேன். இந்த வழக்கு சம்பந்தப்பட்ட அடிப்படை விஷயங்கள் நன்கு விவாதிக்கப்பட்டு அவைமீது ஒரு முடிவு எடுக்கப்பட வேண்டும் என்று நான் கருதினேன்.

இருந்தும் மார்ச் 26ந்-தேதி அரசாங்கம் வழக்கை வாபஸ் பெற மனுச் செய்தபோது நான் அதை எதிர்க்கவில்லை. நான் அப்படி செய்திருந்தால் என் செய்கை ஜனதா அரசை மிகவும் தர்ம சங்கடத்தில் ஆழ்த்தியிருக்கும். இப்பொழுது நினைத்துப் பார்க்கும்போது வழக்கை நடத்தும்படி வற்புறுத்தி இருக்கலாமே என்று தோன்றுகிறது. அப்படி இருந்தால்

பிறகு ஏற்பட்ட வழக்கு சம்பந்தப்பட்ட சர்ச்சைகளுக்கு இடம் இல்லாமல் போயிருந்திருக்கும்.

வழக்கு வாபஸ் பெற்றுக் கொள்ளப்பட்ட சில நாட்களுக்குப் பிறகு, நாடு பூராவும் பத்திரிகைகளில் அறிக்கைகளும், கடிதங்களும் வர ஆரம்பித்தன. சென்னை 'ஹிந்து' பத்திரிகையில் நிறைய கடிதங்கள் வெளியாயின. அவற்றில் தென்னிந்திய மக்களின் அபிப்பிராயங்கள் பிரதிபலிக்கப் பட்டாலும், 'ஹிந்து'வில் உள்ளவர்களின் அபிப்பிராயங்களும் பிரதிபலித்தன.

அந்தக் கடிதங்களுக்கு நான் இரண்டு தடவை பதில் சொல்லும்படியாக ஆகிவிட்டது. முதல் கடிதத்தில் 'இந்திரா காந்தியைக் கவிழ்க்க முயற்சி' என்ற எங்கள் குற்றத்தை ஒப்புக் கொண்டு, அக்கிரமங்கள் செய்து மக்களை மிரட்டி வந்த ஒரு அரசை கவிழ்க்க தன்னால் முடிந்த எல்லா காரியங்களையும் செய்ய ஒரு குடிமகனுக்கு இருக்கும் உரிமைபற்றி நானும் பெர்னாண்டஸும் நீதிமன்றத்தில் வாசித்த அறிக்கையை குறிப்பிட்டு, இந்த வழக்கை நடத்துவதில் அர்த்தமில்லை என்று எழுதியிருந்தேன். இந்திய மக்கள் தங்கள் பேராதரவை எங்களுக்குக் தேர்தலில் காட்டி விட்டதால் எங்கள் நடத்தையையும், காரணங்களையும் அவர்கள் ஆதரித்ததாக அர்த்தம் என்று சுட்டிக் காட்டியிருந்தேன். இந்தக் கடிதத்துக்கு பதிலாக 'ஹிந்து'வில் இன்னும் பல கடிதங்கள் வெளியாயின, சட்டத்தை மதிப்பதானால், நீதிபதிகளின் சுதந்திரத்தில் நம்பிக்கை இருந்தால் வழக்கை வாபஸ் பெற்றது சரியல்ல என்று பலர் வாதாடியிருந்தார்கள். இந்த வாதங்களை உடைத்து நான் இன்னொரு கடிதம் எழுதினேன்.

நான் எழுதி, 'ஹிந்து' பத்திரிகையில் வெளியாகி இருக்கும் கடிதங்களில் வழக்கை வாபஸ் பெற்றுக் கொண்டதால் அரசுக்கு இருக்கும் உரிமை, கடமைபற்றி விரிவாக விளக்கி இருக்கின்றேன்.

என்னுடைய முதல் கடிதம் ஏப்ரல் 5-ந் தேதி வெளியானது. அது—

பரோடா வெடிகுண்டு சதி வழக்கு

—இந்தத் தலைப்பில் (மார்ச் 30) வெளியாகிய இரண்டு கடிதங்களை எழுதியவர்கள் வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள், நிரபராதிகள் அல்லது குற்றவாளிகள் என்று நிரூபணம் ஆக்கப்படாமல், அரசாங்கம் வழக்கை வாபஸ் பெற்றிருப்பது சரியல்ல என்று குறிப்பிட்டிருந்தார்கள். சட்டப்படி நடக்க வேண்டியதன் அவசியத்தை அவர்கள் கருத்தில் கொண்டிருக்கிறார்கள் என்பது புரிகிறது. இருந்தும், சட்டத்தில் நம்பிக்கை கொண்ட அவர்களோ, மற்றவர்களோ இதைப்பற்றிச் சென்ற 21மாதங்களாக நடந்து வந்த காட்டு தர்பாரின்போது, சட்டத்திற்கு மதிப்பும் மரியாதையும் பெயரளவில்கூட கொடுப்பதாக காட்டிக் கொள்ளாதபோது, அதிகார துஷ்பிரயோகம் மோசமான முறையில் நடந்து வந்தபோது, இதுபற்றி எழுதவோ, வெளியே சொல்லவோ எண்ணிப் பார்க்கவில்லை.

வழக்கில் சம்பந்தப்பட்ட முக்கிய குற்றவாளிகளில் ஒருவன் என்ற முறையில், நாங்கள் நிரபராதிகள் அல்லது குற்றவாளிகள் என்பதை நிலை நாட்ட அவசியமே இல்லை என்றுகூற, என்னை தயவு கூர்ந்து அனுமதிக்க வேண்டும். ஏனெனில் நானும், ஜார்ஜ் பெர்னாண்டஸும் அரசைக் கவிழ்க்க முயற்சி செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டு விட்டோம். மாஜிஸ்ட்ரேட்டுக்கு முன்னால் நான் படித்த வாக்குமூலத்தில்—நான், "என் மனசாட்சியும், உணர்வும் நமது நாடும் மக்களும் இப்படி துன்புறுத்தப்படுவதை சகித்துக் கொள்ள இயலவில்லை. நாட்டுக்கு இதுவரை இழைக்கப்பட்ட அநீதிகள் சரி செய்யப்படாவிட்டால், உலகில் எந்த சர்வாதிகாரியையும் விட அதிக அதிகாரங்களைக் குவித்துக்கொண்டு, ஒரு ராணிபோல நடந்து கொள்ளும் ஒரு பெண் பதவியிலிருந்து நீக்கப்படாவிட்டால், என் எதிர்காலம், என் வசதிகள், என் உடல்நிலை என் உயிர் இவைகள் எதற்குமே மதிப்பில்லை" என்று கூறியிருந்தேன். இந்த காரியத்தில் என்னை ஈடுபடுத்திக் கொண்டேன். சர்வாதிகாரியும் அவரது கையாட்களும் என்னை தண்டிக்கவோ அல்லது

கொல்லவோ விரும்பினால், நான் தயார். மக்களின் சுதந்திரத்துக்காக, போராடும் முயற்சியில் படும் துயரங்களை நான் பெருமையாகக் கொள்கிறேன்.

மார்ச் 22 அன்று நாங்கள் ஜாமீனில் விடுதலை ஆனதற்கு காரணம் ஒரு விண்ணப்பம்தான் என்பது கடிதங்களை எழுதியவர் களுக்குத் தெரிந்திருக்காது.

அந்த விண்ணப்பத்தில் கூறப்பட்டிருந்த விபரம்—

"குற்றம் சாட்டப்பட்டுள்ள மனுதாரர்கள் அரசாங்கத்தைக் கவிழ்க்கும் சதியில் ஈடுபட்டதாகத் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறார்கள். கொடுமைகளும், அக்கிரமங்களும் நிறைந்த ஒரு அரசைக்கவிழ்க்க முயல்வது, மக்களின் உரிமை என்று அவர்கள் வாதாடினார்கள். இப்போதும் தொடர்ந்து வாதாடுகிறார்கள். சட்டங்களையேமாற்றி இந்திராகாந்தி, தன்னை நாட்டின்சர்வாதிகாரியாக ஸ்தாபித்துக் கொண்டுவிட்டார். அவர் பிரதமராக தொடர்ந்து இருக்க நியாயமோ, சட்டரீதியாகவோ சரி இல்லை. இந்த மாதிரி அபிப்பிராயத்தை மக்கள் கொண்டிருந்தார்கள் என்பதை இப்போது அவர்கள் இந்திராகாந்தியையும் அவரது சக அமைச்சர்களையும், அவரைச் சுற்றியிருந்த கூட்டதையும், அவரது கட்சியையும் சரித்திரத்தின் குப்பை மேட்டில் தள்ளியதன் மூலம் நிரூபித்துவிட்டார்கள். ஆகவே, இப்போது குற்றங்களுக்காக இந்தியன் பீனல்கோட், மற்ற சட்டங்களின்படி குற்றம் சாட்டப்பட்டிருப்பவர்கள். இந்திரா காந்தியையும் அவரது அரசாங்கத்தையும் தூக்கி எறிய முழு மூச்சோடு ஈடுபட்டிருந்ததற்கு மக்கள் ஆதரவு தெரிவித்து விட்டார்கள். மக்களைவிட உயர்ந்த நீதிமன்றம் வேறு எதுவுமில்லை. திருமதி காந்தியையும் அவருடைய அரசையும் மக்கள் பலமாக மறுத்துவிட்டதிலிருந்து, இப்பொழுது மதிப்பிழந்து பதவியில் தொடர்ந்து இருக்க அனுமதிக்கப்படாத இந்திரா காந்தியும், அவரது அரசும் தாமாகவே முன்வந்து வழக்கைத் திரும்பப் பெற்றுக்கொள்வார்கள், என்று மனுதாரர்கள் எதிர் பார்த்தார்கள். ஒரு சமயம் கீழே விழுந்துவிட்ட அந்த சர்வாதிகாரிக்கு, நாகரிகமும், உரிமையும் இல்லையோ

என்னவோ, நாங்கள் நீதிமன்றத்துக்குத்தொடர்ந்து விலங்கும் சங்கிலியும் பூட்டப்பட்டு கொண்டு வரப்பட்டோம். மதிப்பிழந்த, பதவி நீக்கம் செய்யப்பட்ட அரசாங்கம் செயல்பட இஷ்டப்படா விட்டால், மக்கள் தீர்ப்புக்கு மதிப்புத் தர வேண்டியது இந்த நீதிமன்றத்தின் கடமை.''

ஆகவே, நீதிமன்றம் எங்களுக்கு ஜாமீன் விடுதலை வழங்கியதிலும், புதிய அரசு எங்களுக்கு எதிராகப் போடப்பட்ட வழக்கை திரும்பப் பெற்றுக் கொண்டதிலும், மக்கள் எதிர்ப்பை மதித்ததைத்தவிர வேறு எதுவும் அதிகமாகச் செய்து விடவில்லை. ஜனநாயகம் என்பது உயிரற்றஒருசட்டத்தின் ஆட்சி அல்ல. மக்கள் நினைப்பதை நிறைவேற்றும் உயிருள்ள ஒரு ஏற்பாடு. துரதிருஷ்டவசமாக பரோடா வெடிகுண்டு சதி வழக்கில், குற்றம் சாட்டப்பட்ட எங்களுக்கு, நாட்டுக்கேகூட, மக்களின் ஏகோபித்த தீர்ப்பு நாங்கள் நம்பி வந்ததையே ஆதரிப்பதாக இருந்தது.

ஏப்ரல் 16–ல் வெளியாகிய என்னுடைய இரண்டாவது கடிதம்—

இந்த விஷயத்தில் இனிமேல் கடிதங்களை வெளியிடுவதில்லை என்று நீங்கள் முடிவு செய்திருக்கிறீர்கள். ஆனால் இந்த வழக்கில் நான் நேரடியாக சம்பந்தப்பட்டிருப்பதால் சில அடிப்படை விஷயங்களுக்கும், உங்கள் வாசகர்கள் புதிதாக எழுப்பியிருக்கும் சில புதிய விஷயங்களுக்கும் நான் தங்கள் பத்திரிகை மூலம் பதிலளிக்க விரும்புகிறேன்.

ஜனநாயகவாதி என்ற முறையில் நான் ஐந்தில் ஒரு பங்கு 5–க்கு 1என்ற கணக்கில் இருக்கும் உங்கள் வாசகர்களின் அபிப்பிராயத்துக்கு தலை வணங்குகிறேன். இருந்தும், ஜனநாயகவாதி என்பதால், எனக்குப் புறம்பான கருத்துக் கொண்டவர்களையும், ஒப்புக்கொள்ள வைத்து என் வழிக்குக் கொண்டுவர எனக்கு இருக்கும் உரிமையை வலியுறுத்த விரும்புகிறேன். அப்படிச் செய்யும்போது, அவர்களுக்கு என்னைத் திரும்ப சிறைக்கு அனுப்ப அதிகாரமோ, விருப்பமோ இல்லை என்று

நினைத்துப் பார்க்கும்போது மகிழ்ச்சியாக இருக்கிறது. சட்டத்தின் ஆட்சி என்பது பற்றி உங்கள் வாசகர்கள் மேலெழுந்த வாரியாக, சிறுபிள்ளைத்தனமாக கருத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற என் எண்ணத்தை நான் மாற்றிக்கொள்ள முயலப் போவதில்லை. சுதந்திரத்தைப் பற்றி ஆத்மார்த்தமாகக் கவலைப் படுபவர்களும், தங்களுக்கு ஏற்படும் ஆபத்தையும் பொருட் படுத்தாமல் அதற்காகப்போராடத்தயாராக இருப்பவர்களும் தான் சட்டத்தையும் நீதித்துறையின் வழிமுறைகளையும், ஒரு அளவுக்கு—அவைகளுக்கு பொருளும் அர்த்தமும் கிடைக்கும் அளவுக்கு—உயர்த்த முடியும்.

உங்கள் வாசகர்கள் மனதில் எப்போதும் குடி கொண்டிருக்கும் வன்முறை பற்றிய அபிப்ராயத்தை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். வன்முறையை வெறுக்கும் அவர்கள், அவசர நிலை காலத்தின்போது—அந்த 21 மாதங்களில் அவிழ்த்து விடப் பட்ட வன்முறைபற்றி அவர்கள் என்ன செய்தார்கள்? இந்திராகாந்தியின் அரசியல் எதிரிகளை வேண்டுமென்றே கொடுமைப்படுத்திய வன்முறைகளுக்கு அவர்கள் என்ன சொல்கிறார்கள்? எங்களைப் போன்றவர்கள் சாகும்வரை சுமக்கப் போகும் உடல் வடுக்களும், உள்ளத் தழும்புகளும் இவர்கள் உணர்ச்சிகளை பாதிக்கப் போகிறதா? அல்லது, அரசு தரப்பில் செய்யப்படும் வன்முறைகளை நியாயப்படுத்தப்பட வேண்டும், மன்னிக்கப்பட வேண்டும். ஆனல் வன்முறையையும், கொடுங்கோன்மையையும் எதிர்த்து திறமையாகப் போராடுவதை மட்டும் சட்டப்படி தண்டிக்க வேண்டும் என்று நினைக்கிறார்களா? காந்திஜி கூறியவற்றில் எதையும் கடைப்பிடிக்காமல், ஏற்றுக்கொள்ளாமல் காந்திஜி சொன்னதையே திருப்பிச் சொல்வதை ஒரு பாஷனாக வைத்துக் கொண்டிருக்கிறோம் என்பதை நான் அறிவேன். ‘வன்முறையா அல்லது கோழைத்தனமா என்று வரும்போது, வன்முறையே மேல்’ என்று காந்திஜி சிபாரிசு செய்தார் என்பதை இந்தக் கடிதங்களை எழுதியவர்கள் அறிவார்களா? இப்போது முடிந்திருக்கும் அந்த இருண்டக் காலத்தில்

எங்களுக்கிருந்த வழிகளும் கோழைத்தனமா, வன்முறையா என்பதே. ஜெ. பி. யும், லோஹியாவும் பிரிட்டிஷாருக்கு எதிராக நடத்தி வந்த தலைமறைவு இயக்கத்துக்கு மகாத்மா காந்திஜி தனது மறைமுகமான சம்மதத்தைக் கொடுத்திருந்தார் என்பதை அவர்கள் அறிவார்களா? முடிவாக, நாங்கள் நம்பியதெல்லாம் யாரையும் கொல்லாத, உடலுக்குக் காயம் ஏற்படாத வன்முறையைத்தான். எவ்வளவோ முயன்று பார்த்தும், பிராசிக்யூஷன் எங்களுக்கு எதிராக ஒரு கொலையையோ, உடல் காயத்தையோ செய்ததாக குற்றம் சாட்ட இயலவில்லை. தேர்தல் போன்ற சட்டப்பூர்வமான முறைகளில் அரசாங்கத்தை மாற்ற வேண்டும் என்ற ஒரு வாதத்தைக் கடிதம் எழுதியவர்கள் கூறுகிறார்கள். சட்ட பூர்வமான காரியங்களில் ஈடுபட உரிமைகள் மறுக்கப்படும்போது எப்படி இந்த காரியங்களில் ஈடுபடமுடியும் என்பதை அவர்கள் ஏன் நினைத்துப் பார்க்கவில்லை? ஒரு தனிமனிதனோ அல்லது சிலரோ சேர்ந்துகொண்டு, அரசியல் நிர்ணயச் சட்டத்தை ஏமாற்றி எல்லா அதிகாரங்களையும் குவித்துக்கொண்ட பிறகு, சட்ட பூர்வமான முறைகளால் யாராலும் தங்களைக் கவிழ்த்துவிட முடியாமல் செய்ய, அந்த அரசியல் நிர்ணய சட்டத்தையே தங்கள் சௌகர்யத்துக்கு மாற்றிவிட முயலும்போது, நாம் என்ன செய்வது? ஹிட்லர் சட்டபூர்வமாகத்தான் பதவிக்கு வந்தார்—பிறகு சரித்திரத்திலே கண்டிராத அளவுக்கு கொடுமைகள் நிறைந்த ஒரு சர்வாதிகாரத்தை ஸ்தாபித்தார் என்பதை நினைவில் வைக்க வேண்டும். 1975 ஜூன் மாதம் 12-ந் தேதிக்குப்பிறகு, இந்திராவின்தேர்தல் செல்லாது என்று சொல்லிவிட்ட பிறகு அவர் பதவியில் நீடிக்க என்ன நியாயம் இருந்தது? சட்டத்தை பழைய தேதியிலிருந்தே திருத்தி, அவர் எந்தக் குற்றங்களுக்காகப் பதவி நீக்கம் செய்யப் பட்டாரோ, அந்தக் குற்றங்களை மாற்றி தான் பதவியிலிருந்ததை நியாயப்படுத்திக் கொண்டார். அரசியல் நிர்ணயச் சட்டத்தை உருத்தெரியாமல் மாற்றிவிட்டார். பார்லிமென்டின் ஆயுட்காலத்தை ஐந்தாண்டிலிருந்து, முதலில் ஆறுண்டாகவும், பிறகு ஏழாண்டாகவும் மாற்றிக்கொண்டார். அவர்

விரும்பியிருந்தால் பார்லிமெண்டை தன் இஷ்டம்போல்ஆக்கி விட்டு, தன் பதவியை தன் வாழ்நாள் முழுவதும் நீடிக்கச் செய்திருக்க முடியும் அவர் தேர்தலை நடத்தச் சொல்லியே இருக்க வேண்டாம் இந்த ஒரு தவறை நினைத்து அவர் தனது வாழ்நாள் பூராவும் வருந்தப் போகிறார். இந்த மாதிரி சந்தர்ப் பங்களில் கொடுமைகளையும் அநீதிகளையும் கோழையாக இருந்து சகித்துக்கொண்டிருப்பதைவிட, வன்முறையில் ஈடுபடு வதை மகாத்மா காந்தியே சிபாரிசு செய்திருக்கும்போது, கஷ்டப்படும் மக்களுக்கு சட்டபூர்வமான நிவாரணம் வேறு என்ன இருக்கிறது?

உண்மையாகக் கூறினல் சட்டபூர்வமான ஒரு நிவாரணத் துக்காகக் காத்துக் கொண்டிராமல் நான் சட்டத்திற்கு அப் பாற்பட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டதை குறித்து மகிழ் வடைகிறேன். அப்படிச் செய்யும்போது நான் இந்திரா காந்தி யின் உயிரையும், அவரை சுற்றி உள்ளவர்களுடைய உயிர்களை யும் மதித்துப் போற்றினேன். இந்த உரிமையை இந்திய மகனுக்குத் தர இந்திரா காந்தி மறுத்துவிட்டார். இந்த மறுப்பையும்கூட சட்டபூர்வமான ஒரு செயல் என்று சுப்ரீம் கோர்ட்டும் சொல்லிவிட்டது. அவசர நிலை காலத்தில் எனது உயிர் சட்டத்துக்குப் புறம்பாக பறிக்கப்பட்டிருந்தால் எனது குடும்பத்திற்கு அவசரநிலை முடிந்து ஒரு சிவில் வழக்குத் தொடர்ந்து, நஷ்ட ஈடு போடுவதைத் தவிர வேறு என்ன நிவாரணம் இருந்திருக்கும்? இந்த மாதிரி உரிமைகளைத்தான் மக்கள் அவசரநிலை காலத்தில் 21 மாத காலமாக அனுபவித்து வந்திருக்கிறார்கள். சட்டம், அஹிம்சை என்று சொல்லிக் கொண்டு இந்த நிலையை சகித்துக்கொண்டு, நான் இருந்திருந் தால் அதற்குப் பெயர் கோழைத்தனம்தானே?

இந்த வாக்கு வாதங்கள் பத்திரிகையில் நடந்து கொண் டிருக்கும்போது, எங்களுக்கு எதிராக இந்த வழக்கை எப்படி சட்டப்படி வாபஸ் பெற முடியும் என்று கேட்டு டெல்லி உயர் நீதி மன்றத்தில் இரண்டுமனுக்கள்பதிவாயின. இந்த மனுக்கள் குறித்து நீதிமன்றத்தின் தீர்ப்பு என்னவாக இருக்கும்

என்பதை எதிர்பார்ப்பது சரியல்ல—அனுவசியம். இந்த வழக்கை திரும்ப விசாரிக்கப் போகிறார்களா இல்லையா என்பதைவிட, இந்த விஷயத்தை சாங்கோபாங்கமாக பொது மக்களிடையே விவாதிக்க வேண்டியது அவசியம்.

வெற்றிகரமான புரட்சிகள், கூடவே தங்களுக்கான தர்க்கங்களையும் கொண்டு வருகின்றன. சட்டப்படி கூடாது கிரிமினல் என்று கருதப்பட்ட புரட்சிகரமான காரியங்கள் நியாயமாக்கப்பட்டு விடுகின்றன. 'சட்டப்படி ஏற்படுத்தப் பட்ட' அரசாங்கத்தைக் கவிழ்க்க நாங்கள் முயற்சிசெய்தோம் என்பது எங்கள் மீது சுமத்தப்பட்ட முக்கியமான குற்றச் சாட்டு. நாங்கள் கவிழ்க்க முயற்சி செய்த அரசாங்கமே கவிழ்ந்து விட்டதால், எங்கள் செய்கைகள் அவைகள் புனிதத்துவம் பெருவிட்டாலும், நிச்சயமாக மன்னிக்கத்தகுந் தவை ஆகிவிட்டன.

சரித்திரத்தை எடுத்துக்கொண்டால், நாட்டுக்கெதிராக குற்றம் செய்ததாக குற்றம் சாட்டப்பட்ட புரட்சிக்காரர்கள், புரட்சிக்குப் பிறகு மன்னிக்கப்பட்டிருக்கிறார்கள்—பாராட்டப் பட்டிருக்கிறார்கள்.

நமது நாட்டையே எடுத்துக்கொண்டால், 1946—ல் பிரிட் டிஷ் அரசுக்கு எதிராக செய்த காரியங்களுக்காக தண்டிக்கப் பட்டு நூற்றுக்கணக்கானவர் சிறையில் இருந்தனர். நாட்டுக்கு சுதந்திரம் வரப்போவதை எதிர்பார்த்த பிரிட்டிஷ் அரசு, அந்த தேசப்பற்று கொண்டவர்களை தானுகவே விடுதலை செய்து விட்டது. இந்திய தேசிய ராணுவத்தில் சேர்ந்து பிரிட்டிஷ் ராணுவத்துக்கு எதிராக போர் புரிந்த குற்றத்துக்கு மரண தண்டனை கொடுக்கப்பட்டு வந்தது. அவர்களும் மன்னிக்கப் பட்டார்கள் சட்டத்தின் பெயரால் அவர்கள் விசாரிக்கப்பட்டு, அவர்களுக்கு தண்டனை வழங்கப்படவேண்டும் என்று அப் போது யாராவது ஆலோசனை கூறியிருந்தால் அது எவ்வளவு கேவலமாக இருந்திருக்கும்? இந்திரா காந்தியும், இந்திய அரசாங்கமும் இந்தியர்கள் என்பதால் மட்டும் வித்தியாசம் தேவையில்லை. பார்க்கப் போனுல் உள்ளூர் சர்வாதிகாரி,

உள்ளூர் கொடுமைக்காரர்கள்—இவர்கள் அயல்நாட்டு கொடுமைக்காரர்களைவிட கொடுமையானவர்கள். மக்கள் உரிமைகளை ஈவிரக்க மின்றி இந்திரா காந்தி அழித்ததைப் போல பிரிட்டிஷ்காரர்கள்கூட செய்யவில்லை.

சரித்திர முன்னோடிகளைத் தவிர, எங்கள் செயல்களைப் புகழாவிட்டாலும், மன்னிக்கக்கூட தயக்கம் காட்டும் சட்ட நிபுணர்களுக்கும், சட்டப்படியே எல்லாம் நடக்க வேண்டும் என்று கூறுபவர்களுக்கும் மட்டுமே ஏற்பட்டது என்றுசொல்ல முடியாது. ஜனதா அரசாங்கமே பயத்தால் ஏற்பட்ட ஒரு இரண்டும் கெட்டான் நிலையில் இருக்கிறது—எங்கே எங்களை மன்னித்து விட்டு விட்டால், அதே போல நக்ஸலைட்டுகளையும் மற்றவர்களையும் மன்னித்து விடும்படி நேர்ந்து விடுமோ என்ற பயம் அவர்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. இந்த வழக்கு வேண்டுமென்றே எங்கள் மீது ஜோடிக்கப்பட்டது என்று நம்புவதில் ஒரு—தயக்கம் ஒரு கவலை ஏற்பட்டிருக்கிறது. இம்மாதிரிபொய்ச் செயல்களுக்கு அரசியல் ரீதியாகச் சப்பைக் கட்டு கட்டமுடியாது. இந்தப் பிரச்னையை அரசு நேராகப் பார்க்க வேண்டும். நாங்களும் எங்களைப் போன்றவர்களும், அநீதியையும், அக்கிரமத்தையும் எதிர்த்துப் போராட எங்களிடமிருந்த வழிகளை கையாண்டது சரிதானா? இதுதான் கேள்வி. 'புரட்சிகளின் சரித்திரத்திலேயே, நேருவும் அவரைச் சேர்ந்தவர்களும் செய்ததைப் போல பலனை அனுபவித்தவர்கள் யாரும்—புரட்சியின் கருப்பையையே எட்டி உதைத்தவர்கள் யாரும் இருக்க முடியாது' என்று டாக்டர் லோஹியா ஒரு முறை கூறியிருக்கிறார்.

சமுதாய மறுமலர்ச்சிக்கு, ஒத்துழையாமை இயக்கம் ஒத்துக்கொள்ளக்கூடிய நல்ல ஒரு சாதனமாக உபயோகித்துக் கொள்ளப்படவில்லை. அவர்களுக்குக்கூட ஜெயப்பிரகாஷ்நாராயண், டாக்டர் லோஹியா, அச்சுயுத்பட்டவர்த்தன், அருணா ஆசப்அலி—இவர்கள் கையாண்டவன் முறைச்செயல்களைக் கண்டித்துப் பேச தைரியம் இல்லை.

1942–ன் தலைமறைவு இயக்கத் தலைவர்களான இவர்களையும், சுபாஷ்சந்திரபோஸ் தலைமையில் பணிபுரிந்த இந்திய தேசிய ராணுவத்தினரையும் உலகமே பாராட்டியது. எங்கள் மீது குற்றம் சாட்டப்பட்ட செயல்கள் நியாயமான செயல்கள் என்று நியாயப்படுத்த ஜனதா அரசு இஷ்டப்படா விட்டால் அந்தச் செயல் வெட்கப் படக்கூடிய ஒன்று.

ஒழுங்கை நிலை நாட்டுவதற்காகவே முக்கியமாக ஏற்படுத்தப்பட்டதுதான் சட்டம். சட்டமும், ஒழுங்கும் இப்போது உள்ள நிலையையும், லாபம் தேடுபவர்களையுமே ஆதரிக்கிறது என்பதை சுலபமாக சொல்லிவிட முடியும். சட்டமும் ஒழுங்கும் கடுமையாக அமல் படுத்தப்பட்டால் இப்போது உள்ள நிலை எப்போதுமே மாறுது. மக்களின் அபிலாஷைகள் சட்டத்திற்கு வெளியே கொஞ்சம் வெளிப்படாவிட்டால் முன்னேற்றம் என்பது இருக்கவே இருக்காது. அப்படிச் செய்ததால்தான் சர்வாதிகார ஆட்சிகள் தூக்கி எறியப்பட்டு மக்களின் தலைவிதியே மாறி இருக்கிறது. மனிதனுல் உண்டாக்கப்பட்ட சட்டமும் இப்படித் தொடர்ந்து பல மாறுதல்களுக்கு உள்ளாகி இருக்கிறது. மனித சமுதாயத்தின் தலைவர்களும், தத்துவ மேதைகளும் பிரச்சாரம் செய்த மக்களின் மரியாதை, சுதந்திரம், உயிர் இவற்றைப் பாதுகாக்க புரட்சிகளை தலைமையேற்று நடத்தி சென்றிருக்கிறுர்கள். அவர்களும் சட்டத்திற்கு உட்பட்டு, சட்டத்திற்கு அப்பாற்பட்ட, அரசுக்கு எதிரான முறைகளை கையாண்டிராவிட்டால், சரித்திரத்தில் எந்த சர்வாதிகாரியுமே அகற்றப்பட்டிருக்க மாட்டார்—எந்தநாட்டு மக்களும் விடுதலை பெற்றிருக்க மாட்டார்கள்.

சுருங்கச் சொன்னுல் இதுதான் எங்கள் தத்துவ விளக்கம். எல்லாப் புரட்சிக்காரர்களையும் போலவே சட்டத்திற்கு புறம்பான காரியங்களில் ஈடுபடும்போது ஏற்படும் விளைவுகளைப் ஏற்றுக்கொள்ள நாங்களும் தயாராக இருந்தோம், எங்களுக்கு இதில் எந்த வருத்தமும் கிடையாது. சொல்லப்போனுல் உலகின் எந்தப் பகுதியிலும், எந்த சமயத்திலும் ஸ்தாபிக்கப்பட்ட கொடுமையான சர்வாதிகாரத்தைப் போன்ற அதே கொடுமையுள்ள, சர்வாதிகாரத்தை எதிர்த்துப்போராடினேம்

என்பதில் பெருமை கொள்கிறோம். எங்கள் செயல்களைப் பற்றி தீர்ப்புக் கூறும் பொறுப்பை ஒரு நீதிமன்றத்திடம் விட்டு விட நாங்கள் தயாராக இருந்தோம். இந்த மாதிரி ஒரு தீர்ப்பை இந்தியாவின் மிகப் பெரிய நீதிமன்றம் அதாவது இந்த நாட்டு மக்கள் தருவதை நாங்கள் விரும்புகிறோம்.

பிற்சேர்க்கை

## இந்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்கள்

இந்த வழக்கில் சம்பந்தப்பட்டவர்களில். இந்தியாவின் எல்லா மாநிலங்களையும் சேர்ந்தவர்கள் இருந்தார்கள்.

இதில் வயதில் இளையவர் பத்மநாப ஷெட்டி வயது 21, முதியவர்—பிரபுதாஸ் பட்வாரி (இப்போதைய தமிழ்நாடு கவர்னர்) இவர் வயது 68.

மாணவர், தொழிலதிபர், பத்திரிகையாளர், தொழிற் சங்கத்தை சேர்ந்தவர், தொழிலாளி, வழக்கறிஞர்—என்று பல துறைகளைச் சேர்ந்தவர்களும் இருந்தனர். அநேகமாக எல்லா அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்களும் இதில் இருந் தார்கள். சிலர் எந்த அரசியல் கட்சியிலும் இல்லாதவர்கள்.

குற்றப்பத்திரிகையில் உள்ள வரிசைக்கிரமப்படி குற்றம் சாட்டப்பட்டவர்கள்—

1. ஜார்ஜ் பெர்னாண்டஸ், தலைவர், இந்திய சோஷ லிஸ்ட் கட்சி; தலைவர், அகில இந்திய ரெயில்வே தொழிலாளர் யூனியன்:
2. கே. விக்ரம் ராவ்— டைம்ஸ் ஆப் இந்தியா பரோடா நிருபர்.
3. கிரித் பட், இந்தியன் எக்ஸ்பிரஸ், பரோடா நிருபர்.
4. பிரபுதாஸ் பட்வாரி—பிரபல ஸ்தாபன காங்கிரஸ் தலைவர்—காந்திஜியின் சபர்மதி ஆஸ்ரம மானேஜிங் ட்ரஸ்டி.
5. டாக்டர் ஜி.ஜி. பாரிக்—முன்னாள் ஆசிரியர் 'ஜனதா', பம்பாய் சோஷலிஸ்ட் கட்சி தலைவர்.

6. ஜஸ்வந்த் சிங் சௌஹான்—பிரபல சோஷலிஸ்ட் இளைஞர் தலைவர்—பரோடா முனிசிபல் கார்ப்பரேஷன் உறுப்பினர்.
7. கோவிந்த்பாய் சோலங்கி—பரோடா சோஷலிஸ்ட் கட்சித்தொண்டர்.
8. மோதிலால் கனேஜியா—பரோடா சோஷலிஸ்ட் கட்சித்தொண்டர்.
9. மகேந்திர நாராயண் பாஜ்பாய்— கிழக்கு ரயில்வே தொழிலாளர் யூனியன் கிளைக்காரியதரிசி, பாட்னா.
10. விஜய் நாராயண் சிங்—உத்தரப் பிரதேச சோஷலிஸ்ட் கட்சி இணை காரியதரிசி.
11. சி. ஜி. கே. ரெட்டி,—மைசூர் மாநில சோஷலிஸ்ட் கட்சி முன்னாள் தலைவர், முன்னாள் ராஜ்யசபை உறுப்பினர், 'ஹிந்து' பத்திரிகை மானேஜர்.
12. கமலேஷ் சுக்லா—கவிஞர், பத்திரிகையாளர்—ஆசிரியர் 'பிரதிபக்ஷா'
13. சுசில் சந்தர் பட்நகர்—அகில இந்தியா ரயில்வே தொழிலாளர் யூனியனின் பிரபலபிரமுகர்.
14. விரேன் ஜி ஷா—சேர்மன், மானேஜிங் டைரக்டர் முகுந்த் இரும்பு தொழிற்சாலை, ராஜ்ய சபை உறுப்பினர்.
15. எஸ். ஆர். ராவ்—உப தலைவர், பம்பாய் தொழிலாளர் யூனியன்.
16. லட்சுமண் ஜாதவ்,—உப தலைவர், பம்பாய் தொழிலாளர் யூனியன்.
17. சோமனாத் துபே—உப தலைவர், பம்பாய் தொழிலாளர் யூனியன்.
18. கோபால் ஷெரிகர்—மாணவர், பம்பாய் தொழிலாளர் யூனியன் ஊழியர்
19. பத்மநாப ஷெட்டி, மாணவர்—பம்பாய் தொழிலாளர் யூனியன் ஊழியர்.

20. விஸ்வநாத், ஷெட்டி ரெயில்வே ஊழியர் கூட்டுறவு கழக ஊழியர்

21. ஜெயராம் மோரே—எலக்ட்ரீஷியன், மத்திய ரயில்வே,

22. தேவேந்திர மோகன் குஜார், ஜூனியர் ஆடிட்டர், பம்பாய் முனிசிபல் கார்ப்பரேஷன்.

23. சுரேஷ் வைத்யா, கிளார்க், சூப்ரின்டெண்டெண்ட் ஆப் போலீஸ் அலுவலகம், நாசிக்

24. லட்லி மோகன் நிகாம்—மத்தியப் பிரதேசத்தைச் சேர்ந்த சோஷலிஸ்ட் கட்சி முன்னணி ஊழியர். ஜார்ஜ் பெர்னுடஸோடு கூடவே இருந்து உழைத்தவர்—கடைசி நாள் வரை கைதாகாமல் தப்பியவர்.

25. அருண் பட்டேல் (தலைமறைவு)பரோடா வியாபாரி' அப்ரூவர் பரத் பட்டேலின் சொந்தக்காரர். துபாயிலிருந்தபடி வசதியாக வியாபாரத்தை கவனித்து வந்தவர். இவர் பெயரளவில்தான் தலைமறைவாக இருந்தவர்.

## குற்றப் பத்திரிகை (சுருக்கம்)

8, 9–3–76 இரவு பரோடா நகரப் போலீஸுக்கு மாநிலத்தை விட்டு வெளியே எடுத்துச் செல்லப்படுவதற்கு சில வெடி மருந்துப் பொருட்கள் பரோடாவில் உள்ள ரோடு லிங்க் கம்பெனி கிடங்கில் இருப்பதாகத் தகவல் கிடைத்தது. உடனே போலீஸ் போய் அந்த இடத்தை சோதனை போட்டதில் கோமியாவில் உள்ள இந்தியன் எக்ஸ்ப்ளோஸிவ் கம்பெனி தயாரித்த டார்ச் பிராண்ட் (எஸ். ஜி. 80) நைட்ரொகிளிசரின் குச்சிகள் மொத்தம் 836 ஏழு பெட்டிகளிலும், 85 ரோல்கள் ப்யூஸ் ஒயரும் கைப்பற்றப்பட்டன. வழக்கு 'ராவ்புரா' போலீஸ் ஸ்டேஷனில் பதிவு செய்யப்பட்டு, சி. பி. ஐ—க்கு 23–3–76 அன்று மாற்றப்பட்டது. சி பி. ஐ.

வழக்கு நடக்கும்போதே டெல்லி போலீஸும் இரண்டு வழக்குகளைப் பதிவு செய்தது.

இவைகளில் ஒரு வழக்கு 37 டைனமைட் ஸ்டிக், 49 டெடோனேட்டர், 8 ரோல் ப்யூஸ் ஒயர் இவைகளைக் கைப் பற்றியது சம்பந்த மானது. இந்த வழக்குகளுக்கும் பரோடா வழக்குக்கும் சம்பந்தமிருந்ததால் இதையும் சி. பி. ஐ. எடுத்துக்கொண்டது.

26-6-76 அன்று பம்பாய் கிங்ஸ் சர்க்கிள் ரயில்வே நிலையத்துக்கருகில் ஏற்பட்ட வெடி விபத்தில், பம்பாய் சி. ஐ. டி பிரிவு ஒரு வழக்கை பதிவு, செய்து சிலரை கைது செய்தது. விசாரித் ததில் இந்த வெடி மருந்துகள் பரோடாவில் கைதான வர்களிடம் வாங்கப்பட்டதாகத் தெரிந்தது. சி.பி.ஐ. விசாரணையில் இந்த வழக்குக்கும் பரோடா வழக்குக்கும் தொடர்பு இருந்தது கண்டு பிடிக்கப்பட்டது. மாநில அரசின் அனுமதியோடு எல்லா வழக்குகளையும் சி. பி. ஐ. விசாரணைக்கு எடுத்துக் கொண்டது. எல்லா வழக்குகளுமே ஒரே சதியில் சம்பந்தப்பட்டிருந்ததால், நான்கு வழக்குகளையும் சேர்த்து ஒரே குற்றப்பத்திரிகை தாக்கல்ப் செய்யப்பட்டது. குற்றவாளிகள் பட்டியல் ஏற்கனவே கொடுக்கப்பட்டுள்ளது. குற்றம் சாட்டப்பட்டவர்களில் லட்லி மோகன் நிகாரையும், அருண் பட்டேலையும் கைது செய்ய முடியவில்லை தலைமறைவாகி விட்டார்கள்.

25. 6 . 75 அன்று நாட்டில் அவசர நிலை பிரகடனப்படுத்தப்பட்டவுடன், ஜார்ஜ் பெர்னாண்டஸ் தலைமறைவாகி விட்டார். ஜூலை 75-ல் பாட்னாவில் ரகசியக் கூட்டங்கள் நடத்தினார். மத்தியில். நடக்கும் சர்வாதிகார ஆட்சியை கவிழ்க்க நம்பகமான ஆட்களை தன் உதவிக்கு சேர்த்துக் கொள்ள முயற்சி செய்தார். பிறகு அவர் பரோடா போய் பரத் படேலிடம் பதுங்கி இருக்க திட்டம் போட்டிருக்கிறார். (பரத் படேல் அப்ரூவராகி விட்டவர்). டெடோனேட்டர், ப்யூஸ் ஒயர் போன்ற வெடி மருந்துகளை பரத் பட்டேல் மூலம் வாங்குவது என்று முடிவாகி விட்டது. அவை எப்படி வேலை செய்கிறது என்று காட்ட பரத் பட்டேல் ஒப்புக்

கொண்டு, அருண் பட்டேலை அனுப்பினுர். அவர் ஜார்ஜ் பெர்னுண்டஸ், விக்ரம் ராவ், கீர்த்தி பட், சதிஷ் பதக் எல்லோரும் ஹலோலில் உள்ள குவாரிக்குப் போய் பார்த்தார்கள். தனக்கு திருப்தி அளிப்பதாக பெர்னுண்டஸ்கூறினுர். இந்த மருந்தை உபயோகித்து நாட்டில் முக்கியமான ரயில் பாலங்கள், சாலைகள் இவற்றை தகர்த்து நாட்டில் பயத்தையும் பீதியையும் கிளப்பி அதன் மூலம் ஆட்சியை கவிழ்ப்பது இவர்கள் நோக்கம்.

பரோடாவில் இருக்கும்போதே பெர்னுண்டஸ் ஒரு ரேடியோ தொடர்பு டிரான்ஸ்மிட்டரை நிறுவ ஏற்பாடு செய்தார். இதற்காக அயல்நாட்டு பிரமுகர்களுக்கு கடிதங்கள் கொடுத்து பரத் பட்டேலை அனுப்பினுர்.

திட்டப்படி பத்து பைகளில் டைனமைட், திம்பா சாலை கல் குவாரியிலிருந்து வாங்கப்பட்டது (இந்த குவாரி பரத் பட்டேலுக்கும், அவர்களுடைய சொந்தக்காரர்களுக்கும் உரிமையானது). 200 டெடோனேட்டர்களும், எட்டு ரோல் ப்யூஸ் ஒயரும் வாசுதேவ் அண்ட் கம்பெனியிடம் வாங்கப்பட்டது. இவை அகமதாபாத்தில் உள்ள பிரபுதாஸ் பட்வாரியின் வீட்டில் உள்ளகார்ஷெட்டுக்கு அருகில் உள்ள அறையில் பாதுகாப்பாக வைக்கப்பட்டது.

வெடிமருந்தை ஸ்டாக் செய்த பிறகு, ரகசிய கூட்டங்கள் நடத்தி என்ன செய்ய வேண்டும், எப்படி வெடி மருந்துகளை ஒவ்வொரு இடத்துக்கும் எடுத்துப் போக வேண்டும் என்பன போன்ற விவரங்கள் கூறப்பட்டன. பெரிய அளவில் ரயில்வே சொத்து, அரசாங்க கட்டடங்கள் இவற்றை தகர்த்து மக்கள் மனதில் பீதியை ஏற்படுத்துவது இவர்கள் நோக்கம். இதற்கு தேவையான பணத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இவர்களுடைய கூட்டு முயற்சியால் குறுகிய காலத்தில் அடுத்தடுத்து பீஹார், மகாராஷ்ட்ரா, கர்னுடகா மாநிலங்களில் தொடர்ந்து வெடி விபத்துக்கள் ஏற்பட்டன.

1975 ஜுலை 4-வது வாரத்தில் ரேவதி காந்த் சின்ஹா விடம் பெர்னுண்டஸின் திட்டம் தெரிவிக்கப்பட்டு சீக்கிரமே வெடிமருந்து பாட்னுவுக்கு வந்து சேரும் என்று கூறப்பட்டது.

8-8-75 அன்று பாட்னுவுக்கு ஜஸ்வந்த் சிங் சௌஹான், கோவிந்தபாய் சோலங்கி, மோதிலால் கனேஜியா ஆகியோர் மூன்று சூட்கேஸ், ஒரு துணிப்பை இவைகளில் வெடி மருந்து களை பாட்னுவுக்கு கொண்டு வந்தனர். இவை சின்ஹாவிடம் கொடுக்கப்பட்டன. 10-8-75 அன்று மகேந்திர நாராயணன் பாஜ்பாய் சின்ஹாவை அவர் இல்லத்தில் சந்தித்து வெடி மருந்தை பெற்றுக்கொண்டார். இது பீஹாரில் உபயோகிக் கப்பட வேண்டியதில் ஒரு பகுதி...

இந்த வெடி மருந்துகளை வெடித்துப் பார்க்கும் சோதனை பம்பாய் மலட் பகுதிக்கு அருகில் உள்ள மத் தீவில் ஜனநட மாட்டமில்லாத் பகுதியில் செய்து பார்க்க ஏற்பாடாயிற்று. அதுவரை அங்கே சிலர் வந்து போய்க் கொண்டிருந்தபடியால் உண்மையான வெடி சோதனை செய்ய முடியவில்லை.

விசாரணை செய்யப்பட்டத்தில் குற்றம் சாட்டப்பட்ட ஏ 15, 16, 17, 18, 19, 20, 21 இவர்கள் தீவிரமாக ஈடுபட்டார் கள். பம்பாய் சென்ட்ரல் ரயில் நிலையம், எக்ஸ்பிரஸ் ஹைவே, பந்த்ரா ரயில் நிலையம் அருகில் உள்ள ரயில்வே ஓவர் பிரிட்ஜ், கிங்ஸ் சர்க்கிள், பிளிட்ஸ் பத்திரிகை அலுவ லகம்—இங்கெல்லாம் நிகழ்ந்த வெடி விபத்துக்கள் இவர்கள் நடத்தியவை.

இவை தவிர 1975 அக்டோபர் 23 முதல் டிசம்பர்30 வரை கர்னுடாகாவிலும் பீகாரிலும் ரயில் பாதைகளில் பல இடங் களில் வெடி விபத்துக்கள் நடந்திருக்கின்றன.

இந்த சதி வேலைகளுக்கு பெர்னுண்டஸ் டெல்லியை முக்கிய இடமாகக் கொண்டு குற்றங்களை செய்திருக்கிறார். டெல்லியில் இதற்கு இவருக்கு உதவியாக இருந்தவர்கள் காப்டன் ஹில்கோல், சி. ஜி. கே. ரெட்டி

...அயல்நாடுகளிலிருந்து ஆயிரம் ஒயர்லெஸ் செட்களை வாங்கும் பொறுப்பை சி.ஜி.கே. ரெட்டி ஏற்றுக் கொண்டிருந் தார். இவர் 1976 ஜனவரியில் பெர்னண்டஸும் நியூஸ்வீக் பத்திரிகையின் ஐரோப்பிய ஆசிரியரும் ரகசியமாகச் சந்திக்க ஏற்பாடு செய்தார். அந்த பேட்டியில் பெர்னண்டஸ் இந்தியப் பிரதமரை கீழே இறக்க வன்முறையை உபயோகிப்பதில் தனக்கு நம்பிக்கை இருப்பதாகக் கூறியிருக்கிறார்...

இந்த வெடி மருந்தை நாசவேலைக்கு பயன்படுத்த ஜார்ஜ் பெர்னண்டஸ் பரோடாவில் ஒரு சமயம் பேசிக் கொண் டிருந்ததை ஷரத்பட்டேல் ஒட்டுக் கேட்டிருக்கிறார், இதை அதிகாரிகளிடம் சொல்வதற்கு முன் முழு விபரமும் தெரிந்து கொள்ள ஜார்ஜின் நம்பிக்கைக்கு பாத்திரமாகி, வெடி மருந்தை பதுக்கி வைக்க தன் வீட்டை தருவதாகக் கூறியிருக் கிறார். பிறகு ஷரத்பட்டேல், அகமதாபாத் போய் பட்வாரி வீட்டிலிருந்தும், சர்தார் சத்ராலயா வீட்டிலிருந்தும் பெற்ற வெடிமருந்தை பரோடாவுக்கு கொண்டுவந்து தன் வீட்டில் வைத்துக் கொண்டார். இவற்றை காசிக்கு அனுப்ப பாக்கிங் செய்து விட்டு அதிகாரிகளுக்கு தகவல் கொடுத்துவிட்டார். அதிகாரிகள் வந்து மேலே கூறியபடி லாரி கம்பெனியில் இவற்றை பிடித்து விட்டனர்...

இந்த வழக்கில் ஒரு விசேஷம், குற்றவாளிகள் தங்களை அடையாளம் காட்டிக் கொள்ளாமல் ஜாக்கிரதையாக நடந்து கொண்டிருக்கின்றனர். செய்திகள் சங்கேத மொழிகளில் அனுப்பப்பட்டுள்ளன. புனைப் பெயர்கள், அடையாளம் கண்டுபிடிக்க விசேஷ சின்னங்கள், மாறுவேஷங்கள் இவை கையாளப்பட்டுள்ளன.

(ஒ-ம்) அப்நாஷ் சந்தர்
டெபுடி சூப்ரின்டென்டெண்ட் ஆப் போலீஸ்
எஸ்.பி.இ.— சி.பி.ஐ. — சி.ஐ. யு(ஏ) புது டெல்லி
24—9—76

# டெல்லி பிரதம மெட்ரோபாலிடன் மாஜிஸ்ட்ரேட் முன் 10-2-77 அன்று ஜார்ஜ் பெர்னாண்டஸ் கொடுத்த வாக்குமூலம் (சுருக்கம்)

இந்திய வெடி மருந்து சட்டத்தின் கீழ் நானும், என் நண்பர்களும் உங்கள் முன்பு கொண்டு வரப்பட்டிருக்கிறோம். குற்றப் பத்திரிகையில் குற்றம் சாட்டப்பட்ட நாங்கள் 25 பேர்களும் இன்னும் சிலரும் சேர்ந்து கொண்டு நன்கு திட்டம் போடப்பட்ட, தீவிரமான சதித் திட்டம் ஒன்றைப் போட்டு, கிரிமினல் செயல்கள் மூலம் மத்திய அரசை பயமுறுத்த முனைந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறோம்.

சாட்சிகளாக விசாரிக்கப்பட 600 சாட்சியங்களையும், பரிசீலனைக்கு 600-க்கு மேற்பட்ட தஸ்தாவேஜுகளையும் அரசு தாக்கல் செய்திருக்கிறது. இவற்றை நேரம் வரும்போது எடுத்துக் கொண்டு பதில் கூறுகிறோம்...

இந்தக் குற்றப் பத்திரிகை 24-9-76 அன்று தாக்கல் செய்யப்பட்டது. அரசு தன்னுடைய 'சூப்பர் ஸ்டார்' சாட்சி பரத் பட்டேலின் சாட்சியத்தை முடிக்க சரியாக நாலரை மாதம் எடுத்துக் கொண்டிருக்கிறது...

இந்த அப்ரூவர் பரத் பட்டேலின் வாக்கு மூலத்தை முழுவதுமாக நம்பித்தான் அரசின் தரப்பு கேஸ் இருக்கிறது—இந்த சதி வழக்கு இருக்கிறது—என்பதை நிரூபிக்கநேரடியான சாட்சியம் எதுவும் கிடையாது என்று பிராசிக்யூஷன் தரப்பில் கூறப்பட்டிருக்கிறது.

ஆகவே பிராஸிக்யூஷன் சொல்லியபடியே இப்போது உங்கள் முன்பு நிற்கும் அப்ரூவர் ஒரே ஒருவர் மீதுதான் பிராஸிக்யூஷன் தரப்பு முழுவதையும் அரசாங்கம் சந்திக்கப் போகிறது.

தங்கள் உத்தரவில் நீங்கள் "இந்த வழக்கில் முக்கிய நவாளியான ஜார்ஜ் பெர்னாண்டஸ் தான், பயங்கரமான

வழிகளை கையாண்டு அரசாங்கத்தை பயமுறுத்தும் வகையில் இந்த சதியை உருவாக்கி இருக்கிறார் என்று கூறப்பட்டிருக் கிறது. ஆனால் இதை நிலைநிறுத்த நேரடி சாட்சியம் எதுவு மில்லை என்று பிராஸிக்யூஷன் கூறியிருக்கிறது'' என்று சொல்லியிருக்கிறீர்கள்.

திரும்பக் கூறுகிறேன் ''இதை நிலை நிறுத்த நேரடி சாட்சியம் எதுவுமில்லை''...

இல்லாவிட்டால் இந்திரா காந்தியிலிருந்து, அமைச்சர் கள், தூதுவர்கள், அதிகாரிகள் எல்லோருமே நானும், என் நண்பர்களும் பாரபட்சமின்றி நியாயமாக விசாரிக்கப் படுவோம் என்று உலகுக்கு அறிவிப்பார்கள். ஆனால் 28–1–77 வரையில் அதாவது சுமார் ஏழரை மாத காலம் நான் என்னுடைய வக்கீல்களை ஒரு தடவை சந்திக்கக்கூட எனக்கு அனுமதி கொடுக்கப்படவில்லை.

இந்திய மக்கள், இந்திரா காந்தியின் ஆட்சியை ஏற்றுக் கொண்டுவிட்டார்கள் என்று தணிக்கைக்கு உட்பட்ட பத்திரிகைகளும், ரேடியோவும் உலகுக்கு அறிவித்து வந்த போது நான் தலைமறைவு இயக்கத்தில் ஈடுபட்டு அவரது சர்வாதிகார ஆட்சியோடு போராடிக் கொண்டிருந்தேன்...

இந்த நீதி மன்ற கேலிக்கூத்தின் மூலம் இந்திரா காந்தி தன்னை எதிர்த்தவர்களுக்கு எந்த மாதிரி தண்டனை கிடைக்கும் என்று காட்ட நினைக்கிறார்...

இங்கு நடக்கும் விசாரணை நடவடிக்கைகள் எப்படி 'சமாச்சார்' திரித்துக் கூறுகிறது என்றும், எப்படி ரேடியோ ஒலிபரப்புகிறது என்பதும் உங்களுக்குத் தெரிந்திருக்கும்...

26–6–76 அன்று அப்ரூவர் பரத் பட்டேலுக்கு மன்னிப்பு வழங்கியதிலிருந்தே எங்களைக் குற்றவாளிகள் என்று முடிவு செய்துவிட்டீர்கள் என்பது புரிந்துவிட்டது...இந்த சூழ்நிலை யில் நாங்கள் குறுக்கு விசாரணை செய்து இந்த கேலிக்கூத்தை அதிகமாக்க விரும்பவில்லை...

26–6–75 அன்று நான் ஒரிஸ்ஸாவில் ஒரு சிறு மீனவர் கிராமமான கோபால்பூரில் இருந்தபோது அவசரநிலை அறிவிக்கப்பட்டதை தெரிந்து கொண்டேன். அப்போது இந்திரா காந்தி ஹிட்லராக மாறி விட்டார் என்று தீர்மானித்து, இந்த சர்வாதிகார ஆட்சியை தூக்கியெறிய என் உயிர் உட்பட எதையும் தியாகம் செய்ய உறுதி பூண்டேன்...

22–7–75 அன்று லோக் சபாவில் இந்திரா காந்தி, "நான் சர்வாதிகாரியாக இல்லாதபோது என்னை சர்வாதிகாரி என்றீர்கள்; இப்போது நான் ஒரு சர்வாதிகாரிதான்" என்றார். இந்த பேச்சு தணிக்கை செய்யப்பட்டது. வெளி வரவில்லை. இந்திரா காந்தியின் இந்தப் பேச்சு என் உறுதியை வலுப்படுத்தியது...

இந்திராகாந்தியின் சர்வாதிகாரத்தால் நாட்டிற்கு என்ன நடந்தது...?

வாய்ப்பூட்டு போடப்பட்ட நீதித்துறை, கட்டுப்பாடு போடப்பட்ட பத்திரிகைகள், சக்தியில்லாத மக்கள், நிரபராதியான மக்கள் லட்சணக்கானவர் கைது, சித்திரவதைகள், கொலை, சிறைச்சாலைகளில் துப்பாக்கி பிரயோகம், ஜெயப்பிரகாஷ் போன்றோருக்கு எதிராக அவதூறு, துஷ்பிரச்சாரம், பெரிய ஏகபோக கம்பெனிகளுக்கு சலுகைகள், தொழிலாளர்களின் உரிமை மறுப்பு...இது போன்றவை 19 மாத அவசரநிலை காலத்தில் ஏராளம், ஏராளம்...

1–7–75 அன்று தலைமறைவிலிருந்து ஒரு கோரிக்கை விடுத்தேன்: நமது போராட்டம் ஜனநாயகத்துக்காகவும், அடிப்படை உரிமைகளுக்காகவும், பாசிஸ சர்வாதிகாரத்தை எதிர்த்தும், இந்திய உள்நாட்டு விவகாரங்களில் ரஷ்யா தலையிடுவதை எதிர்த்தும், ஊழலை எதிர்த்தும், விலைவாசி உயர்வை எதிர்த்தும், வேலை இல்லா திண்டாட்டத்தை எதிர்த்தும் இருக்கும் என்று கூறியிருந்தேன்...

எங்களுடைய தலைமறைவு அறிக்கை அயல் நாடுகளில் விரிவாக வினியோகிக்கப் பட்டது. அதில் கடைசிப்

டகுதியில் "மகாத்மா காந்தியின் செயல்முறைகள் நம்மை நமது போராட்டத்தை நடத்திச் செல்லும். நமது நாட்டை பாசிஸ்ட் பயங்கரத்திலிருந்து விடுவிக்க நமது இயக்கத்தின் மானசீகத் தலைவர் மகாத்மா காந்தி. இந்தப் போராட்டம் மகாத்மா காந்திக்கும் திருமதி இந்திரா நேரு காந்திக்கு மிடையே நடக்கும் போராட்டம்...

இந்த சமயத்தில், நமது நாட்டில் தோன்றியிருக்கும் இந்திரா காந்தியின் சர்வாதிகாரத்தை எதிர்த்துப் போராடு வதைப் போலவே, வேறு எந்த சர்வாதிகாரி வந்தாலும் எதிர்த்துப் போராடுவேன். அப்படி செய்வது நமது நாட்டு மக்கள் ஒவ்வொருவரின் உரிமை என்று கருதுகிறேன். அதனால் தான் அவருக்கு எதிராகவும், அவருக்கு அடுத்த வாரிசாக கொண்டுவர முயலும் அவரது மகனையும் எதிர்த்தும் போராடினோம்...

சர்வாதிகாரத்தை எதிர்த்துப் போராடுவதில் முதல்படி பயத்தை விட்டொழிப்பது...

எங்களுக்கு கிடைக்கப் போவதை அனுபவிக்க நாங்கள் தயார். இதைத் தெரிந்தே தான் நாங்கள் இதில் ஈடுபட் டோம்...

தேர்தல்கள் அறிவிக்கப்பட்டன. தீமைகளை எதிர்த்துப் போராட தேர்தலும் ஒருவழிதான். ஆனால் இது மிகவும் குறுகிய எல்லைக்குட்பட்டது. ஐந்து ஆண்டுகளுக்கு ஒருதடவை தான் கிடைக்கும்...

மகாத்மா காந்தி, லோஹியா வழியில் அஹிம்சை மார்க் கத்தில் நம்பிக்கை கொண்டவன் நான். அநியாயமும், அக்கிர மும் தலைதூக்கும் போதெல்லாம் அதை எதிர்த்துப் போராட வேண்டும் என்று அவர்களே நம்பினார்கள். சர்வாதிகாரத்தை எதிர்த்து நான் நடத்திய போராட்டமும் அப்படிப்பட்டதே. யாரையும் கொல்லவோ, தீங்கு விளைவிக்கவோ நோக்கம் கிடையாது.

எனக்கு எதிராக தயாரிக்கப்பட்ட சாட்சியங்கள் மூலமாக பிராசிக்யூஷன் எவ்வளவோ முயன்று பார்த்தும் நானும், நான் அமைத்த இயக்கமும் ஒரே ஒரு கொலைக்குக்கூட காரண மாக இருந்திருக்கிறோம் என்று நிரூபிக்க இயலவில்லை.

சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்பு, "ஹிட்லர் ஜெர்மனியில் பதவிக்கு வந்த பிறகு, தைரியசாலிகளான, கற்றறிந்த, துணிச்சல் மிகுந்த சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் கட்சிப் பிரமுகர்கள்—தங்களின் ஆண்மையையிழந்து எலிகளைப்போல நடந்து கொண்டார்கள் என்று கூறவே எனக்கு வெட்கமாக இருக்கிறது" என்று டாக்டர் லோகியா எழுதினார்.

ஆனால் இந்திரா காந்தி சர்வாதிகாரி ஆனவுடன் நானும் என் நண்பர்களும் மனிதர்களைப்போல நடந்து கொண்டோம் என்பதில் மிகவும் பெருமைப்படுகிறோம்.

பிப்ரவரி 10, 1977 ஜார்ஜ் பெர்னாண்டஸ்

